# கம்பன் விழா மலர்

## 1977

மாண்புமிகு ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயில் அவர்கள்
தலைமையில்
கோவை தொழில் அதிபர்
தகைமிகு. ஜி. கே. சுந்தரம் அவர்களால்
13-5-77 அன்று தெய்வ மாக்கவி கம்பன் விழாவில்
வெளியிடப்பெற்றது.

கம்பன் கழகம்,
புதுச்சேரி.

# உள்ளுரை

பக்கம்

# முன்னுரை

"செந்தமிழ்த் தென்புதுவை" என்று பாட்டுக்கு ஒரு புலவன் பாரதியால் பாராட்டப்பெற்ற புதுச்சேரியில், கம்பன் கழகம் தோன்றி பத்தாவது முறையாகத் தெய்வ மாக்கவி **கம்பன் விழா**வைக் கொண்டாடுகிறது.

விழாவில் நூல் வெளியிடுதலையும் மலர் வெளியிடுதலையும் கடமையாகக் கொண்டிருக்கிறது கம்பன் கழகம். விடுதற்கரிய கடமையில் மலர்ந்ததே இந்தக் **கம்பன் விழா மலர்**.

பத்து விழாக்களில் பூத்த மலர்கள் இரண்டே இரண்டு தான். ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறைதான் மலர்ந்துள்ளது. ஆண்டுதோறும் மலரும்படி மாற்றுவது மக்களின் பொறுப்பு.

இந்த மலர், கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்த்து மறைந்த முன்னைத் தலைமுறையினரின் வாழ்க்கை வரலாறுகளையும் புலமைத் திறத்தையும் அறிய வாய்ப்பளிக்கும் என்று நம்புகிறோம்.

கம்பன் கவியமுதச் சுவையை வாரி வாரி வழங்கிக்கொண்டேயிருந்து, நம்மைவிட்டு மறைந்த தோழர் ப. ஜீவானந்தம், பேராசிரியர் அ. சீநிவாசராகவன், தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கம் போன்றவர்களை இழந்த ஏக்கமும், இவர்களெல்லாம் கம்பனைச் சுவை சொட்டச் சொட்டப் பேசினார்களே! இவர்களுக்கெல்லாம் கம்பனை யார் யார் காட்டினார்களோ? என்று அறியும் ஆர்வமுமே **"கம்பனை எனக்குக் காட்டியவர்கள்"** என்ற தலைப்பில், இன்றுள்ள மூத்த அறிஞர்களிடம் கட்டுரை கேட்கும்படிச் செய்தன. பலரிடம் கேட்டோம்; சிலர் எழுதித் தந்தார்கள். இதனால் ஒரு சிலருடைய வரலாறுகளே நமக்குக் கிடைக்கின்றன; மலருக்கு மணமூட்டி நிற்கின்றன.

இந்தக் கட்டுரைகளைக் காணும் அறிஞர் பெருமக்கள், இதே தலைப்பில், தங்களுடன் தொடர்புகொண்டு மறைந்த புலவர் பெருமக்களின் வரலாறுகளைத் தொகுத்துத் தந்தால் அடுத்த ஆண்டு விழா மலரில் வெளியிடுகிறோம். கட்டுரைகள், மறைந்தவர்களின் புலமைத் திறத்தையே போற்றி நிற்க வேண்டும். இதனால் மக்களுக்குக் கிடைப்பது கம்பன் கவிச் சுவை.

கம்பன் விழா மலருக்குக் கட்டுரைகள் எழுதித் தந்த அறிஞர் பெருமக்களையும், விளம்பரங்கள் தந்து உதவிய நிறுவனங்களையும், அழகிய முறையில் குறுகிய காலத்தில் அச்சேற்றித்தந்த "கற்பகம் பிரிண்டர்ஸ்" அச்சகத்தாரையும் பாராட்டி வணங்குகிறோம்; எல்லோருக்கும் நன்றி தெரிவிக்கிறோம்.

புதுவைக் கம்பன் கழகத்தைப் போற்றி வளர்த்துவரும் வள்ளல் பெருமக்கள் ஒவ்வொருவரையும் தனித்தனியே உள்ளத்தில் நினைந்து வாழ்த்தி வணங்குகிறோம்.


புதுச்சேரி
13-5-1977

இவண்,
**ந. கோவிந்தசாமி,**
செயலாளன்,
**கம்பன் கழகம் - புதுச்சேரி.**



## கடவுள் வாழ்த்து

உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும் நீங்கலா,
அலகி லாவினை யாட்டுடை யார்அவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே.

— கம்பன்.

# கட்டுரையாளர்பற்றி...

## கம்பன் அடிப்பொடி

சா. கணேசன் என்ற இயற்பெயர் உடையவர். தமிழ், ஆங்கிலம், வடமொழி கற்றவர். நாட்டுப்பற்றும் தமிழ்ப்பற்றும் உடையவர் நாட்டுக்கு உழைத்த நல்லவர். விடுதலைப் போராட்டத்தில் சிறை சென்றவர். வெள்ளையர் ஆட்சியில் தன் வீட்டிலுள்ள செல்வங்களையெல்லாம் கொள்ளை கொடுத்தவர். சட்டை போடுவதைச் சட்டை செய்யாதவர். கல்வெட்டு ஆராய்ச்சியில் முதன்மையானவர். தமிழ்நாட்டுக் கம்பன் கழகங்களுக்கெல்லாம் வழிகாட்டி. காரைக்குடியில், கம்பனுக்கு மணி மண்டபம் கண்டவர்; தமிழ்த்தாய்க்குக் கோயில் காணுகின்றவர். 'கம்பன் கற்பகம்' என்ற குழந்தைகள் பள்ளியை நடத்துபவர். கம்பன் இயக்கத்தின் தனித் தலைவர். கம்பனைத் தெய்வமாகக் கருதுபவர். கம்பன் பணியே கடவுள் பணியாகக் கொண்டவர்.

## திருமுருக கிருபானந்த வாரியார்

அருள்மொழி அரசு என்றும், திருப்புகழ்ச் செல்வர் என்றும், வாரியார் சுவாமிகள் என்றும் மக்களால் பாராட்டிப் போற்றப் பெறுபவர். தமிழ் சம்ஸ்கிருதம் வல்லவர் முறையாக இசைபயின்று வீணை வித்வான் ஆனவர். தமிழில் இவர் கல்லாத நூல் இல்லை எனலாம். சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், காணபத்யம் சௌரம் ஆகிய அறு சமய உண்மைகளையும் கற்றுத் துறைபோயவர்; இவர் ஒரு முருகனடியார்; அருணகிரியாரின் பக்தர். என்றாலும் வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்த்து விளங்குவது ஒரு பொருளே என்று தெளிந்தவர். காந்தியடிகள் கூறுவதுபோல் "சர்வதர்ம சமான தர்சனம்" உடைய பெரியார். ஈட்டுவ தெல்லாம் இறைபணிக்கே என்பது காட்டும் அறவோர்.

## கவியோகி சுத்தானந்த பாரதியார்

தமிழ், சம்ஸ்கிருதம், ஆங்கிலம் முதலான பன்மொழி பயின்றவர். எழுத்தாற்றலும், பேச்சாற்றலும், கவிதா சந்நதமும் நிரம்பியவர். பல்வேறு நூல்கள் இயற்றிப் பயன் சுரப்பவர். பல்லாண்டுகள் மோனநோன்பியற்றிய யோகியாவார். தேசபக்தியும், தமிழ்ப் பற்றும் மிக்கவர் சேரன் மாதேவி குருகுலத்தில் வ. வே. சு ஐயருடனிருந்து பணியாற்றிய பெருமையும், அரவிந்தருடன் பழகி அவருடன் பல்லாண்டுகள் யோகநெறியில் வாழ்ந்த பெருமையும் உடையவர். சென்னையில் அடையாற்றில் யோக சமாஜம் நிறுவி ஆன்மிகப் பணியும் மொழித்தொண்டும் ஆற்றி வருகிறார்.

### மே. வீ. வேணுகோபால் பிள்ளை

இவர் ஒரு மகாவித்துவான்; இலக்கிய இலக்கணங்களை முறையாகக் கற்ற முதறிஞர். பிறப்பாலும், ஒழுக்கத்தாலும் இவர் ஒரு சிறந்த வைணவர். பழைய தலை முறையைச் சேர்ந்த புலவர் பெருமக்களில் எஞ்சியுள்ள மிகச் சிலருள் இவர் ஒருவர். நூற் பரிசோதனையிலும், பாடம் சொல்லுவதிலும் நூல் பதிப்பிடுவதிலும் வல்லவர். எல்லோரோடும் எளிமையாய் இனிமையாய்ப் பழகும் இயல்பினர். இவராலும், இவர் உதவியாலும் வெளியான நூல்கள் ஏராளம்.

### மறைத்திரு சவரிமுத்து அடிகள்

கிறிஸ்தவ மத குருவான இவர் ஓர் உண்மையான கிறிஸ்து அடியார். மொழிப் பற்றும், நாட்டுப் பற்றும், மிக்கவர். திருவாசகம் போன்ற தோத்திர நூல்களிலும் கம்பன் அருளிய இராமாவதாரம் போன்ற காப்பிய நூல்களிலும் ஈடுபாடுள்ளவர்; கம்பனின் கவியாற்றலிலும், கற்பனைத் திறத்திலும் சமரச நோக்கிலும் திளைத்து மகிழ் பவர் ஏசு பெருமானின் அருள்மொழியுடன் கம்பனின் கருத்துமணிகளை ஒப்பீடு செய்துகொண்டிருக்கும் இவர் உண்மையிலேயே சமயப் பணியும் தமிழ்ப் பணியும் ஆற்றுபவர் ஆவார். இவர் தற்பொழுது மேற்கொண்டிருக்கும் இப் புனிதப் பணி இதுவரை எவருமே மேற்கொள்ளாத பணியாகும்

### கி. பக்ஷிராஜன்

சிறந்த தமிழ்ப்பற்றுள்ளவர்; முறையாக ஆழ்வார் பாசுரங்களையும், வைணவ நூல்களையும் கற்றவர். வழக்குரைஞராகப் பணியாற்றினும், இலக்கியக் காதல் மிக்கவர்; கம்பன் மாட்டுப் பெரும் பற்றுள்ளவர்; கம்பனைக் கிட்டத்தட்ட முற்றும் நெட்டுருச் செய்தவர்; ஆழ்வார் திருநகரி ஏடுகளைச் சோதித்து அப்பிராந்திய ஏடுக ளின்படி கம்பராமாயணம் முழுவதையும் பதிப்பித்தவர்; கம்பன் அருளிய இராமா யண அடிப்படையில் ''பாராயணக் கம்ப ராமாயணம்'' என்ற ஒரு நூல் ஆக்கியளித் தவர். நெல்லையில் கிழமைதோறும் கம்பன் வகுப்பு நடத்திவருகிறார்.

### நா. வரதராஜுலு நாயுடு

தமிழ், தெலுங்கு, சம்ஸ்கிருதம், ஆங்கிலம், ஹிந்தி முதலிய மொழிகளில் நிரம்பிய தேர்ச்சியுடையவர். ஆயுட் காப்பகத் துறையில் தனித் தலைவராய் விளங்கியவர்; நாசிக் நாணயப் பதிப்பகத்தில் உயர் பதவி வகித்தவர்; ஆழ்வார்கள் அருளிப் பாடான பாசுரங்களில் ஆழங் காற்பட்டவர்; கம்பன் அருளிய இராமாவதாரத்தில் மிக்க ஈடுபாடு உடையவர்; வான்மீகி, துளசி, முதலியவர்களின் இராமகதையுடன் கம்பனை ஒப்பிட்டுத் திறனய்வு செய்யும் சிறந்த புலவர்; மில்டன், ஷேக்ஸ்பியர் போன்ற பிறநாட்டு மாகவிஞர்களுடனும் கம்பனை ஒப்பிட்டுக் காட்டும் கலைவல் லவர்; உயர்ந்த சிந்தனையும் எளிய தோற்றமும் உள்ளவர்.

### கண்ணதாசன்

திரைப்படக் கவிஞராகப் புறப்பட்ட இவர் இன்று சிறந்த கவிஞராகத் திகழ்கிறார். கவியரசு, கவிமன்னன் என்றெல்லாம் கற்றோரும் மற்றோரும் பாராட்டும் நிலைக்கு உயர்ந்துள்ளார் என்றால் தகுதியே காரணம். வெள்ளை உள்ளமும், மெய்யான புலமையும் உள்ளவர். நல்ல பொருளறிவார்; நாடும் வழியறிவார்; வெல்லத் தமிழின் விசையும் மிக அறிவார்; ஆதலினால் கவிதை மட்டுமின்றி இவருடைய உரை நடையும் வளமாக விளங்கக் காண்போம். இவருக்குள்ள ஒரு குறை "என் மதம் தாமதம்" என்பதுதான்,

### மு. சண்முகம் பிள்ளை

தமிழ் இலக்கிய இலக்கண, நிகண்டு நூல்கள் அனைத்தையும் நன்கு கற்றுத் தேறியவர். கவிமணியின் அன்புக்கு உரியவரான இவர் ஆராய்ச்சி மன்னர் வையாபுரிப் பிள்ளையின் கீழிருந்து ஆற்றிய பணி விழுமியதாகும் நாலாயிரம், சிலப்பதிகாரம். மணிமேகலை, திருவாசகம் கல்லாடம், இராமாவதாரம், சங்கநூல்கள், பாரதம், தொல்காப்பியம், கீழ்க்கணக்கு நூல்கள் முதலான பல நூல்கள் பதிப்பித்த மர்ரே ராஜம் பணிக்கு அடிப்படையாய் நின்று நிலவியவர் இவரே! சென்னை பழஞ்சுவடிக் கூடத்திலும் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆராய்ச்சித் துறையிலும் மேலவராக இருந்து ஆற்றிய பணிகளும் சிறப்புடையன நூல் பதிப்பிடும் துறையில் மிக்க அனுபவமும், திறமையும் உள்ள ஓர் அருங் கலைவாணர் இவர்.

### புலவர் சுந்தரசண்முகனார்

பன்னூற் பயிற்சியும், நுண்மாண் புலமையும் உள்ளவர் இவர். இலக்கிய இலக்கண நூல்களன்றி 'உரிச்சொல்' என்னும் நிகண்டு வகைகளையும் ஆய்ந்து தெளிந்தவர்; 'அகராதிக் கலை' பற்றிச் சிறந்த ஆராய்ச்சி செய்தவர் இவரே! இவர் ஆக்கிய நூல்கள் எல்லாம் அற்றைக்கே யன்றி எற்றைக்கும் நின்று பயன் சுரப்பன. புதுவை ஈன்ற புகழ்மிக்க புலவர்களில் இவரும் குறிப்பிடத்தக்க ஒருவராவார்.

### கு. அருணாசலக் கவுண்டர்

சிறந்த தமிழ்ப் புலவர்; கொங்கு நாட்டவரான இவர் கோலோச்சியதெல்லாம் தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலியில்தான். இந்துக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராயும், துணை முதல்வராயும் இருந்து காலமெல்லாம் பணியாற்றியபின் ஓய்வு பெற்றவர். ஆங்கில அரசால் 'ராவ் சாஹிப்' பட்டம்பெற்ற மிகச் சில தமிழ் ஆசிரியர்களில் இவர் ஒருவர். கம்பன் பணியில் தலைநின்ற வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார், ரசிகமணி டி. கே. சி , பி ஸ்ரீ., பாஸ்கரத் தொண்டைமான், முதலியவர்களுடன் மிக நெருங்கிப் பழகியவர். கம்பன்பால் மிக்க ஈடுபாடுள்ளவர்; வெள்ளை உள்ளமும், கலகலப்பான உரையும் எவரையும் இவர்க்கு நண்பராக்கிவிடும்.

அ. கு. ஆதித்தர்

காலமெல்லாம் தமிழ் ஆசிரியராய்த் தொண்டாற்றிய இவர் கம்பனுக்கு வாய்த்த ஒரு மெய்த் தொண்டர்; இலக்கிய இலக்கணங்களை முறையாகக் கற்ற இவர் கவிச் சக்கரவர்த்தீ கம்பனிடம் பெரும் ஈடுபாடு கொண்டவர். அதனுல் இவர்தம் இல்லத்திற்குக் "கம்பன் வளாகம்" என்று பெயர் சூட்டி மகிழ்ந்து வாழ்கிருர்.

வி. மு. சுப்பிரமணிய ஐயர்

மகாமகோபாத்யாய உ. வே. சாமிநாதையரின் மாணுக்கர் இவர் என்ருல் வேறு அதைவிடச் சிறப்பு என்ன வேண்டும்? முறையாகக் கற்றவர்; நெறியாக வாழ்பவர்; இலக்கிய இலக்கணங்களில் எதையும் இசைக்கும் இவர்தம் இதய வீணை; நாளெல்லாம் தமிழ் கற்பித்துவிட்டு ஓய்வுபெற்ற பின்னரும் தமிழ்நூல் ஆராய்ச்சியிலேயே ஈடுபட்டுள்ளார் இவர். மர்ரே ராஜம் பதிப்பித்த நூல்களுக்கு இவர் ஆற்றிய பணி அற்ப சொற்பமல்ல.

டாக்டர் தெ. பொ. மீ.

உண்மையிலேயே இவர் ஒரு பல்கலைக் கழகம்; மெய்யான தமிழ்த் தொண்டர்; பன்மொழிப் புலவர்; பல்கலைச் செல்வர்; தத்துவ ஞானி; தேச பக்தர்; நாட்டு விடுதலைப் போரில் சிறையடைந்த செம்மல்; எண்ணற்ற மாணுக்கர்க்கு இலவசமாய்ப் போதித்து ஏற்றமளித்தவர்; அண்ணுமலை, சென்னைப் பல்கலைக் கழகங்களில் பேராசிரியராய்ப் பெரும் பணி ஆற்றிய பின் மதுரைப் பல்கலைக் கழகத்தின் முதல் துணை வேந்தராய் அமர்ந்து அப் பல்கலைக் கழகத்திற்கு ஒப்பற்ற தோற்றமும் பொலிவும், தரமும் ஏற்படச் செய்தவர்; அளப்பரும் தமது செல்வ வளமெலாம் விடுதலைப் போர் காரணமாக அருகியபோதும் ஆனந்தம் குறையாதவர். திரு. வி. க.வால் "நடமாடும் பல்கலைக் கழகம்" என்று பாராட்டப் பெற்றவர். கம்பன் பதிப்புகள் பலவற்றிற்கும் துணைநின்ற புலமைச் செல்வர். இன்றும் புதிய துறைகளில் காளையரைப்போல் காதல்கொண்டு, ஈடுபட்டுப் படிக்கிருர் என்ருல் பார்த்துக் கொள்ளுங்களே !

எஸ். மகராஜன்

எல்லையிலாக் காதலர் கம்பனுக்கு; ஒப்பற்ற கலைமன்னரான ரசிகமணி டி. கே. சி. யின் திருவாய்க் கேள்வி. கம்பனுக்கு வாய்த்த சிறந்த பிரசாரகர்; கவிதையை ரசிப்பதிலும், ரசித்ததை எடுத்துக் காட்டுவதிலும் தனித்திறமை யுடையவர். ஓடாமல் ஒளியாமல், நின்று ஆழ்ந்து, தோய்ந்து சுவைத்து, சுவை குன்ருமல் எடுத்துப் படைத்து நமக்கு ஊட்டும் அருமையே அருமை! விஞ்ஞானமும், சட்டமும் பயின்றவர்; நீதிமன்றப் பதவியில் அடியிலிருந்தே முடியடைந்தவர்; சமய, தத்துவ ஞானக் கருத்துக்களை ஆய்ந்து தெளிந்தவர்; யோக நெறியிலும் தோய்ந்தவர்; எனவே கம்பன் இவரைக் கவர்ந்ததிலோ, இவர் கம்பனை உச்சி மேற்கொண்டதிலோ வியப்பில்லை. உலக மகா கவியாகிய ஷேக்ஸ்பியரைத் தோய்ந்து கற்று அதைத் தமிழ் மொழியில் பெயர்த்து கவியுள்ளத்தை ஆழங் கண்டார்; அதன்பின்னர் உலக மகா கவிச் சக்கரவர்த்தியான கம்பனை ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதில் அபாரமான வெற்றியை அடைந்துவிட்டார். இப்பணியே இவருக்கு மரணமிலாப் பெருவாழ்வை அளித்து நிற்கும்.

## கம்பன் மலர் வணக்கம்

கம்பன் அடிப்பொடி

திருவழுந் தூர்வரு தேவே போற்றி
அருள்வழி உணர்த்துபே ரத்தண போற்றி
தமிழ்தவம் செய்தமா தவமே போற்றி
அமிழ்தினும் இனியசொல் அருளினோய் போற்றி
உலகமா கவிஎன ஒளிர்வாய் போற்றி
கலைகளின் பெருங்கடல் கடந்தாய் போற்றி
பொன்னித் துறைதவழ் புனிதா போற்றி
கன்னித் தமிழ்த்திறம் காட்டினாய் போற்றி
முத்தமிழ்த் துறையின் வித்தகா போற்றி
சித்தம் அழகிய சேவகா போற்றி
இதிகா சத்துறை ஏறே போற்றி
விதிவலி உணர்த்தும் மதிவலாய் போற்றி
சாத்திரம் நண்குணர் சதுரா போற்றி
பாத்திரம் சுவைசெயும் பாவலா போற்றி
புவிமுழு தளர்ந்த புலவனே போற்றி
கலைஞருள் ஓங்கிய கலைஞனே போற்றி
மாயாப் புகழொடு வாழ்வாய் போற்றி
தாயாய் அறத்தைத் தாங்குவாய் போற்றி
பெண்மைக் குயர்வு பேணுவாய் போற்றி
உண்மைக் குருவம் உதவினாய் போற்றி
நடையில் நின்றுயர் நாயகா போற்றி
சடையன் புகழ்விரி தலைவா போற்றி
இறைஉயிர் முறைஅறி எம்மான் போற்றி
பொறைசயத் துறைஎனும் புனிதா போற்றி
கற்பனைத் திறம்பல கவித்தாய் போற்றி
அற்புதம் படைக்கும் அரசே போற்றி
காவிய வானக் கதிரவா போற்றி
ஓவியக் கவிதைக் கொருவனே போற்றி
விருத்தக் கவிக்கொரு வேந்தே போற்றி
கருத்துப் புரட்சிக் கவிஞனே போற்றி
என்றுமுள தென்தமிழ் இயம்பினாய் போற்றி
தென்றலைப் புலியாச் செய்வாய் போற்றி
இராமாவ தாரம் ஈந்தாய் போற்றி
பராவருங் கவிவலம் படைத்தாய் போற்றி
வான்மிக மணிக்கொளி வழங்கினாய் போற்றி

கோன்மை நெறிஉணர் கொற்றவா போற்றி
வெண்ணெய் வளர்த்த விளக்கே போற்றி
மண்ணில் வாழ்ந்த வானவா போற்றி
அலகிலா விளையாட் டறிவே போற்றி
உலகெலாம் போற்றும் உத்தமா போற்றி
பெருமையே வடிவாய்ப் பிறங்குவாய் போற்றி
அருமையைச் சொல்லில் அமைத்தாய் போற்றி
பலகலை ஆர்ந்த பனிமதி போற்றி
உலகம் பொதுஎன உரைத்தாய் போற்றி
அனைத்துயர் காப்பியம் ஆக்கினாய் போற்றி
மனத்துவம் நன்குணர் மன்னவா போற்றி
மாயா சனகனை வடித்தாய் போற்றி
தோயாத் துறையிலாத் தொன்றலே போற்றி
தத்துவ நிலைதெரி சத்துவா போற்றி
சித்திரம் எனக்கவி தீட்டினாய் போற்றி
வள்ளுவன் நெறிசெலும் வள்ளலே போற்றி
ஒள்ளிய துணர்ந்தநல் உணர்வோய் போற்றி
காவிரி நலமுணர் காதலா போற்றி
பாவிகம் முழுதுணர் பருணிதா போற்றி
மெய்ப்பா டுணர்ந்திடும் விபுதா போற்றி
துய்ப்பார்க் கினித்திடும் சொல்வலாய் போற்றி
பவித்திரப் பெருங்கதை பகர்ந்தாய் போற்றி
செவிக்குறு தேன்பொழி செம்மலர் போற்றி
மக்களுக் குரிமை வரித்தாய் போற்றி
தக்கநற் கவிதைத் தச்சனே போற்றி
நுண்கலை உணர்த்திடும் நூலோய் போற்றி
வண்கவிச் சக்கர வர்த்தியே போற்றி
கல்வியிற் பெரிய கடலே போற்றி
செல்நெறி காட்டும் தேசிகா போற்றி
அமர காவிய அமுதே போற்றி
சமரம் காட்டலில் சமனிலி போற்றி
செந்தமிழ்க் குயர்வருள் செம்மலே போற்றி
அந்தமில் சுவைபொழி அண்ணல் போற்றி
உலகுடன் பிறப்பென உணர்த்தினை போற்றி
விலகலாப் பொருளுரை மேலாய் போற்றி
வேதாந்தப் பொருள் விரித்தாய் போற்றி
நாதாந் தத்துறை நாவலா போற்றி
அழுக்கறு நெறிதரும் அறவோய் போற்றி
ஒழுக்கம் பேணிடும் ஒண்தவா போற்றி
கற்பு நெறிக்கொரு காவலா போற்றி
சொற்பொருள் கணித்த தூயோய் போற்றி
திருக்குறள் விரிவிரை செய்தாய் போற்றி
மருட்கொளா நெறிவளர் மாண்போய் போற்றி
துன்பிலே சுகமெனச் சொன்னாய் போற்றி
அன்பதே ஆக்கம்என் றறைந்தாய் போற்றி
கவியினுக் கனிஎனும் கண்ணே போற்றி
செவிநுகர் கனியருள் சிற்குணா போற்றி

படைக்கலப் பரிசுணர் பண்பனே போற்றி
அடைக்கலம் காக்குநல் அருளோய் போற்றி
ஆன்றவிந் தடங்கிய ஐயா போற்றி
சான்றவர் இனத்தொரு தக்கோய் போற்றி
அம்பிகா பதிதரும் அத்தா போற்றி
கும்பிட்டு வாழ்கிலாக் குலபதி போற்றி
அந்தியைக் காலன் ஆக்குவாய் போற்றி
சந்தமார் சுவைவளம் தந்தாய் போற்றி
நாடக அணிக்கொரு நாதா போற்றி
வீடுறு நெறியதும் விளைத்தாய் போற்றி
மறைப்பொருள் விளக்கிடும் மாதவா போற்றி
பிறப்பெலாம் சமமெனப் பேசுவாய் போற்றி
தமிழ்ப்பண் பாட்டின் தாயே போற்றி
நிமிர்கடன் உணர்த்தும் நெறிவலா போற்றி
யாரொடும் பகைகொளேல் என்றாய் போற்றி
போரொடுங் கிடவழி புகன்றாய் போற்றி
மக்களே உயிர்என வகுத்தாய் போற்றி
மன்னனை உடலென மாற்றினாய் போற்றி
அறிவினுக் கறிவினை அறிவாய் போற்றி
செறிபெருங் கேள்விச் செல்வா போற்றி
சமய நோக்கினில் சமரசா போற்றி
குமரித் தமிழ்க்கொரு கோவே போற்றி
மானிடப் பெருமை வளர்த்தாய் போற்றி
தேனிசைத் தமிழின் தெய்வமே போற்றி
நாட்டரசன் கோட்டை நயந்தாய் போற்றி
போற்றி கம்பனே போற்றி போற்றி!

உன்னை உள்ள படியறியேம்;
உலகை உள்ளத் திறமுள்ளேம்;
பின்னை அறியேம், முன்னறியேம்,
இடையும் அறியேம்; பிறழாமல்
நின்னை வணங்கி நீவகுத்த
நெறியில் நிற்கும் அதுஅல்லால்,
என்னை அடியேம் செயற்பால?
இன்பம் துன்பம் இல்லானே!

வாழிதமிழ் நாகரிகம் வாழிதமிழ்ப் பண்பாடு
வாழிதமிழ் வேதமருள் வள்ளுவனார்—வாழியரோ
இன்பம் பெருக இருசெவியும் தேன்பாய்ச்சும்
கம்பனும் எங்கள் கவி.

## கம்ப நாடர்

திருமுருக-கிருபானந்த வாரியார்

என்றுமுள தென் தமிழ் இயம்பி இசை கொண்டவர் கவிச்சக்ரவர்த்திகம்ப நாடர். இமயத்துக்கு நிகர் இமயந்தான்; கங்கா நதிக்கு நிகர் கங்கா நதிதான் கடலுக்கு நிகர் கடல்தான்; கதிரவனுக்கு நிகர் கதிர வன்தான். அதுபோல கம்பருக்கு நிகர் கம்பர்தான். நிகரில்லாத தகவுடையவர் கம்பர். அவருடைய கவிகள் தேனுகத் தித்திக்கும் திறனுடையவை; அவை பத் திக்கும் சித்திக்கும் முத்திக்கும் வழிகாட்டு பவை. ஆ! எண்ணுந்தொறும் எண்ணுந் தொறும் இதயங் கிளுகிளுக்கின்றது. அத் துணைக் கனியமுதம் போன்ற இனியது.

கம்ப ராமாயணத்தில் சொல்லழகு; பொருளாழம்; நடையழகு, தொடை யழகு ஆகிய அனைத்தும் கைகோத்துக் களிநடம் புரிகின்றன.

அடியேன் இளமையில் என் தந்தை-யார் மல்லையதாசர் அவர்களிடம் கம்ப ராமாயணத்தைக் கற்றுக் களிப்புக்கடலில் மூழ்கினேன். ஆதலால் எனக்குக் கம்பரின் கவியமுதத்தை இளமையில் ஊட்டியவர் என் தந்தையார்.

பின்னர், திருப்பாதிரிப்புலியூர் ஞானி-யாரடிகள் விரிவுரைகளைக் கேட்கும்போது இடையிடையே கம்பரின் கவிநயங்களை மிக அழகாக எடுத்து இயம்பக் கேட்டு மேலும் அதிகப் பற்றுடையவன் ஆயினேன்.

தமிழகத்தில் 45 ஆண்டுகளாக கம்ப ராமாயணத்தைக் கூறி அடியேனும் இன்-புற்று, மக்களையும் இன்புறச் செய்தேன். அசோக வனத்தில் சீதா தேவியாரின் துயரம் நிறைந்த கவிகளைக் கூறும்போது, அவையில் உள்ளோர் கண்ணீர் மல்கி உருகி நிற்பார்கள். அனுமனுடைய சொல் லாற்றல், இலக்குவனுடைய வில்லாற்றல் கேட்போரை வியக்கவைக்கும்.

கம்பருடைய கவி எத்துணை இனிமை யானது என்று அன்பர்கள் உணரும் பொருட்டு "ஸ்தாலிபுலாக நியாய"மாக ஒரு பாடலைத் தருகிறேன்.

தார்காத்த நறுங்குஞ்சித் தனயர்கள்,
என் தவமின்மை,
வார்காத்த வனமுலையார் மணிவயிறு
வாய்த்திலரால்;
நீர்காத்த கடல்காத்த நிலங்காத்தேன்;
எற்குப்பின்
பார்காத்தற் குரியாரைப் பணித்தருள் என்
றடிபணிந்தான்.

இத்தகைய கம்பர் கவிகளை எத்தனை முறை படித்தாலும் அலுப்பதில்லை; தெவிட்டுவதில்லை; படிக்கப் படிக்க இன்பத்தேனுய் இனிக்கின்றது. இது ஞான டானிக்காக உயிர்க்குத் தெம்பு ஊட்டு கின்றது.

தமிழன்பர்கள் அனைவரும் கம்பரின் கவிகளைப் படித்து—இல்லை, அனுபவித்து இன்புறுவார்களாக.

### கம்பன் அந்தாதி வெண்பா

1 கவிவேந்தன் கம்பன் கவிபொழியுங் கொண்டல்
புவிவேந்தர் போற்றும் புகழான்— செவியில்
அவன் கவி யைக்கேட்டார் அவலமுற மாட்டார்
நவநிதியும் அக்கவிக்கு நேர்.

2 நேரிழையாம் சீதை நெறிக்கற்பை நெஞ்சுருக
ஆரினி கம்பனைப்போல் ஆய்ந் துரைப்பார்—பாரில்
கனியோ? கனியமுதோ? கற்கண்டோ? என்ன
இனியோர் கவியுலகில் ஏது?

3 ஏதுதிருட் டாந்தம் எடுத்துரைக்க யார்வல்லார்?
காது படைத்தோர்கள் கம்பவேள்— ஓது கவி
கேட்டுவப்பர் சீரநுமன் கீர்த்தி தனையுரைக்கும்
பாட்டுவகை நல்குமருட் பா.

4 பாவொன்று போதும் பசுந்தமிழின் பண்புக்கு
நாவொன்று போதுமோ நவில— பூவொன்றும்
நாமகளும் சிந்தை நனிமகிழ்வாள் கம்பனிடம்
பூமகளும் நிற்பள் புரந்து.

5 புரந்தரனும் பூசையாய் போன- வரலாற்றை
நிரந்தரமும் கற்பார்நேர் நிற்பார்— வரந்தருசீர்
வான்மீகி மாமுனியை வாழ்த்தியே வண்கம்பன்
தான்முகன் என்பான் தணிந்து.

6 தணிந்து வினைநீங்கத் தமிழ்க்கம்பன் பாதம்
பணிந்து புகழ்கின்றேன் பாம்பை— அணிந்தசிவன்
சீர் சொல்லப் "பற்றவா" என்றவொரு பாபோதும்
ஆர் சொல்ல வல்லார் அது.

7 அது இது என்றே அயராமல் உண்மை
இதுவேயாம் என்றே இயம்பும்— மதுவனைய
கம்பன் கவிகல்லார் கல்லாவார் காவியத்தில்
செம்பொன் வரையொக்குந் தேர்.

8 தேர் கரி எண்ணிக்கைசெல "ஆனை ஆயிரம்" என்
றோர் கவியைக் கற்றோர் உவப்புறுவர்— ஆர்கலிசூழ்
அம்புவிக்குள் கம்பன் அடிபணிந்தால் வெவ்வினையை
வெம்புவிக்கும் பாடல் விதம்.

9 விதந்து புகழாதார் மேதினியில் உண்டோ?
இதந்தவழும் கம்பன் இனிய— பதந்தன்னை
அம்மா! புலவர்க் கரசான அண்ணலை நம்
பெம்மான் எனப்பலகால் பேசு.

10 பேசுந் திறத்தையும் பீடுபெரு- தாரையெலாம்
ஏசுந் திறத்தையும் ஈந்திடுமே— வீசுந்தண்
தென்றல் எனவுவக்கும் செந்தமிழ்த்தாய் ஈன்றபுகழ்க்
கன்றனைய கம்பன் கவி.

# கவிதை தந்த கம்பன்

கவியோகி சுத்தானந்த பாரதியார்

### கம்பன் சமாதியிலே

நான் பிறந்த ஊர் சிவகங்கை; சிவகங்கையிலிருந்து நாலு மைல் நாட்டரசன் கோட்டை. அங்கே கம்பர் சமாதி உள்ளது. அதன் அருகே ஓர் மண்டபம் உண்டு. எனக்குத் தமிழ்ப் புலமை தந்த மகான் தேவசிகாமணியோகி. ஏழு வயது முதலே அவர் என் கவிதைகளை மெச்சி ஊக்கி வந்தார். முதலில், திருக்குறள் முழுதும் பாடம் சொன்னார். பிறகு சிலப்பதிகாரம்; பிறகு கம்பராமாயணம். நாங்கள் சிவகங்கைத் தாமரைக் குளத்திலே கம்பராமாயணம் படிக்கத் தொடங்குவோம்; கம்பன் சமாதிக்கு வந்ததும் அவர் செந்தமிழில் விரிவுரை நிகழ்த்துவதுண்டு. கேட்கக் கேட்க இனிமையாயிருக்கும்; கம்பன் கவிதைக்கேற்ற வால்மீகி, அத்யாத்ம ராமாயணம், நைடதம். சங்க இலக்கியங்கள் முதலிய பெருந்திரு நூல்களை மேற்கோள் காட்டி அவர் கம்பராமாயணம் சொல்லுவதுண்டு. கம்பர் சமாதி மண்ணைச் சிறிது நாவார உண்டு, மூன்று விருத்தங்களை மோகனராகம் ஆதிதாளத்திலேபாடி, தியானித்துப் பிறகே கம்ப ராமாயணம் தொடங்குவோம் :

### மூன்று கவிகள்

நாடிய பொருள் கைகூடும்;
  ஞானமும் புகழும் உண்டாம்;
வீடியல் வழியதாக்கும்;
  வேரியங் கமலைநோக்கும்
நீடிய அரக்கர் சேனை
  நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையிராமன்
  தோள்வலி கூறு வார்க்கே!

அஞ்சிலே ஒன்றைப் பெற்றான்,
  அஞ்சிலே ஒன்றைத்தாவி
அஞ்சிலே ஒன்று ஆக
  ஆரியர்க் காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற
  அணங்கைக் கண்டு, அயலான் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான்,
  அவன் நம்மை அளித்துக் காப்பான்.

உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும் நீங்கலா,
அலகிலா விளை யாட்டுடை யார்அவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே.

சிவகங்கை அரண்மனையிலும், நாட்டரசன் கோட்டை கண்ணாத்தா கோவிலிலும் கம்பராமாயணம் படிப்பதுண்டு.

### கம்பன் கண்ட சீதை

கமபன் விருத்தங்களுக்கு இராக தாளம் அமைத்து நாங்கள் பாடிவந்தோம். எங்களுடன் ஐந்து புலவர்களும் சேர்ந்து கொள்வதுண்டு. வரி வரியாகப் படித்து கம்பன் கவியமுதை வாரிப் பருகும்போது நேரம் போவதேதெரியாது. பாலகாண்டத்தில் மிதிலைக்காட்சிப் படலம் கலைச்சுவையிற் சிறந்தது. சீதையைப் போற்றும் இரண்டு பாடல்களைப் பாடும்போது நான் அபிநயம் பிடித்து ஆடுவேன் ..

உமையாள் ஒக்கும் மங்கையர்
உச்சிக் கரம் வைக்கும்
கமையாள் மேனிகண்டவர்
காட்சிக் கரைகாணு
இமையா நாட்டம் பெற்றிலம்
என்றார்; இருகண்ணால்
அமையா தென்றார் அந்தர
வானத் தவரெல்லாம்

சீதாபிராட்டியின் அருளழகை அமுதிலே கோல்தோய்த்து அனங்கனே எழுதமுடியாது திகைத்தான். அழகே அவளாலே புதுமை பெற்றது. விண்ணிலும் மண்ணிலும் உள்ள அழகெல்லாம் கூடிச் சீதையானது என்று அந்த அருளழகின் சக்தியைப் படம் பிடிக்கிறான். அந்த அழகு வள்ளுவர் காமத்துப்பாலை நினைவுறுத்தும்:

"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம் இம்மூன்றும் உடைத்து"

கொல்லும் வேலும் கூற்றமும் என்னும்
இவை யெல்லாம்
வெல்லும் வெல்லும் என்ன மதர்த்த
விழி கொண்டாள்
சொல்லும் தன்மைத் தன்றது
குன்றும் சுவருந் திண்
கல்லும் புல்லும் கண்டுருகப் பெண்
கனிநின்றாள்.

பிற்காலத்தில் வனவாசம் வரப்போகிறது. கல்லும் புல்லும் உருக உருக சீதையின் அனிச்ச மெல்லடிகள் காட்டிலே நடக்கப் போகின்றன; அரக்கன் அள்ளிச் செல்ல வருவான்; சீதையின் கற்புவிழிகள் கொல்லும் வேலும் கூற்றமும் போல, அவன் உயிரையே வாங்கப் போகின்றன என்ற நிகழ்ச்சி முழுதும் சீதையின் தோற்றத்திலேயே துலங்கக் காட்டுகிறான் கவியரசன். முன்னே பாற்கடற் பள்ளியில் கூடியிருந்தவர் பிரிந்தனர்; இப்போது சேர்ந்தனர்.

"பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ" என்ற வரிக்கு அட்சர லட்சம் தரலாம்.

## இராமன் வீரம்

இராமபிரானை அழகுப்படுத்தும் இரண்டு கவிகள் நம் உள்ளத்தை அள்ளுகின்றன. இந்தப்பாட்டை காமாசு ராகம் திஸ்ரஏக தாளத்தில் பாடும்போது நம் முன்னே வீரக்கடவுளே வெற்றி நடம் புரிகிறது.

நாணுலாவு மேருவோடு
நாண் உலாவு பாணியும்
தூணுலாவு தோளும் வாளி
யூடு லாவுதூணியும்
வாள்நிலாவின் நூல்உலாவு
மாலை மார்பு மீளவும்
காணலாகு மாயின் ஆவி
காணலாகு மேகொலாம்

"உள்ளத்தார் காத லவராதல்" என்ற வள்ளுவத்திற்கு வழிமொழிந்து ஆன்மீகக் காதலை (Psychic Love) விளக்குவது கம்பன் கவி.

## பரவசப்படுத்திய கம்பன்

என் இளமையில் கம்பனை ஐந்து தடவை முழுதும் படித்தேன். எனது பாரத சக்தி மகா காவியத்திற்குக் கம்பன் ஆவேசமளித்தான் மேனாட்டு இலக்கியங்களில் தாந்தேயும், ரஸீனும், ஷெல்லியும் எனக்கு ஆவேசம் அளித்தனர். தாந்தேயின் சுவர்க்கம் (Paradise) என்னைப் பரவசப்படுத்தியது அதே மாதிரி கம்பனின் சுந்தரகாண்டம் என்னைப் பரவசப்படுத்தியது.

## சீதைமுன் இராவணன்

நள்ளிரவு; சீதை அசோக வனத்திலே தனித்திருக்கிறாள் இராவணன் வருகிறான். அனுமான் மரத்தின்மேல் இலைகளுக்கு இடையே மறைந்து பார்த்துக்கொண்டிருக்கிறான். இராவணன்

"இன்றிறந்தன நாளை இறந்தன
என்றிறந்தருந் தன்மையிதால் எனைக்
கொன்றிறந்தபின் கூடுதியோ? குழை
சென்றிறங்கி மறந்தரு செங்கணாய் ..

என்று இறப்பை முன்வைத்து ஏந்திழையைக் கெஞ்சுகிறான். சீதை உரப்புடன்

"சீரிய அல்ல சொல்லித்
தலைபத்தும் சிந்து வாயோ?

என்று அவன் மண்டை பிளக்கச் சொல்லம்பு விடுகிறாள்.

### கம்பனும், ஐயரும், பாரதியும்

புதுச்சேரியில் வ. வே. சு. ஐயர் கம்ப னில் தோய்ந்து தோய்ந்து வரிக்குவரி "அடடா" போட்டுச் சுவைத்தார். நானும் பாரதியாரும் அவருடன் கம்ப விருந்துண் டதுண்டு. பாரதியார் கம்பனை, கவியின் அவதாரமாகப் போற்றினுர். ஆனால், "கம் பன் நமக்காகப் பாடவில்லை; அவன் விண்ணிலிருந்து வித்துவான்களுக்காகப் பாடியிருக்கிறுன்" என்பார். நாங்கள் கம்பராமாயணம் படிக்கும்போதும், ஐயர் தமது ஆங்கில மொழி பெயர்ப்பைப் படிக் கும்போதும், பாரதியார் கண்ணை மூடிக் கொண்டு உள்முகமாயிருந்தே கவி யின் பத்தைச் சுவைப்பார்.

"பாட்டினைப்போல் ஆச்சரியம் பாரின்மிசை இல்லையடா" என்று துள்ளி எழுந்து "நாதக் கனவினிலே நம்முயிரைப் போக்கோமோ — பாட்டினி லே நெஞ்சைப் பறிகொடுத்தேன் மானிடரே" என்று ஆவேசத் துள்ளலுடன் கம்பனுக்கு வணக்கம் சொல்லுவார்.

### ஐயரின் கம்ப நிலையம்

என் வாழ்வின் இரண்டு பெரும் பேறுகள் வீரவிளக்கு வ. வே. சு ஐயர் நட்பும்; பகவான் அரவிந்தரின் தெய்வீக உறவுமாகும். என் உடல் பொருள் ஆவியெல்லாம் தந்து இரு வரையும் காதலித்தேன். ஐயர் புதுவை யிலே கம்ப நிலையம் நாட்டிக் 'கலைத் தொண் டாற்றினுர். தமிழ்க் குரு குலத்தில் ஐயருடன் அணுக்கத் துணையாயிருந்த காலம் என் வாழ்வின் பொற்காலம் ஆகும். அரசிய லில் அவருக்கு மறைமுகத் தொண்டு செய் தேன் (Under-ground Works) என் பெயரே வெளியே தெரியாது அவருக்குத் தொண்டு பரவினேன். தமிழ்க் குருகுலம் நாட்டிய தும், ஐயர் என்னை உலகறியச் செய்தார். எனது பாரதசக்தி மகாகாவியத்தை பால பாரதியில் வெளியிட்டு விமர்சனம் செய்து ஊக் கினுர். வரிவரியாக இரவுதோறும், அவரி டம் பாரதசக்தியைப் படிப்பதுண்டு; அப் போதெல்லாம் கம்பன் கலைதான் முன் னிற்கும்.

### பாரதசக்தியை நகாசு செய்தார்

கம்பக் கலை என்ற உளிகொண்டு எனது பாரதசக்தியை அவர் செதுக்கி நய முறுத்தினுர். அவருடைய ஆங்கிலக் கம் பனைத் தட்டச்சடிக்கும் பேறுபெற்றேன். கம்பனுடன் வால்மீகியையும் படிப்ப துண்டு; ஷேக்ஸ்பியரும் இடையிடையே வருவார். பாரதசக்தியில் இராமாயணப் படலம் வருகிறது. அதில் இராவணன் சீதையின் அழகைச் சொல்லும்போது கம்பச் சித்திரத்தை ஐயர் நினைவூட்டி எழுதச் சொன்னுர். கம்பன் என் உள்ளத் தில் வந்து பேனுவை உந்தினுன்.

அழகெலாம் திரண்டு வந்தாய்
அமுதெலாம் அளைந்த சொல்லாய்
குழலுடன் யாழுங் கொண்ட
கிளிமொழிக் குயிலே, நெஞ்சு
குழையநின் முறுவல்பூத்த
குமுதமா மதியை என்பால்
பழகுறக் திறப்பின் இந்தப்
பாரினுக்கரசி நீயே...

என்ற பாட்டை நாலுதரம் படிக்கச் சொல்லி ஷேக்ஸ்பியரின் ரோமியோ ஜூலியத்தில் சிலவரிகளையும் சொன்னுர். சீதை இராவணனுக்கு என்ன பதில் சொன்னுர். கம்பன்

நோற்ற நோன்புடைய வாளுள்
வரமிவை நுனித்த எல்லாம்
கூற்றினுக் கன்றே; வீரன்
சரத்திற்கும் குறித்ததுண்டோ?

என்று இராமன் வீரத்தையே பேசி இராவ ணனை இறக்குகிறுள்.

### டே துரும்பே

நான், சீதை வெறுப்புக் குறிப்பினைக் காட்டி ஒரு துரும்பை வீசி இராவணன் சிறுமையைப் புலப்படுத்துவதாகச் சித்த ரித்தேன்.

"வெள்ளிமா மலையெடுத்தேன், வேழங்கள் எட்டும் வென்றேன் என் பக்கம் கண்ணைத்திருப்பு; அள்ளி என் சிரத்தில் வைத்து உன் அழகினுக்கு அடிமை செய்வேன்" என்கிறுன் இராவணன்... சீதை என்ன செய்கிறுள்?

விண் எட்டப் புகழ்ந்து தன்னை
வேட்கைகொண்டு இறைஞ்சுவானைக்
கண்ணெட்டக் காணுள்; பின்னே
கதும் எனத் திரும்பிக் கையால்
மண்ணெட்டும் துரும்பெடுத்து
வீசித்தன் மனத்தில் வேகும்
புண்ணெட்டும் சொல்லைச் சொல்லிப்
"போ" என்ருள் புனித சக்தி.

இந்தப் பாட்டைப் பரசு ராகத்தில் பாடியதும் ஐயர் கம்பனும் வால்மீகியும் இதிலே சேர்ந்துவிட்டனர் என்று துள்ளினர் வால்மீகி இந்த இடத்தை ஒரு வரியிலே அழகுபடுத்துகிருன். சீதை, இராவணன் பேச்செல்லாம் கேட்டு ஒரு துரும்பை வீசித் தன் வெறுப்பை வெளிப்படுத்துகிருள்.

"த்ருணம் அந்தரதக்ருத்வா
ப்ரத்யுவாசசு சிஸ்மிதா"

துரும்பை எறிந்து மனதைத் துலக்கித்தூய புன்னகை பொலிய விடை கூறினள் என்கிருர் வால்மீகி. மேற்சொன்ன பாட்டில் வான்மீகியின் துரும்பையும் கம்பனின் விறுவிறுப்பையும் இணைத்ததுபற்றி ஐயர் மெச்சி ... இன்னும் பல இடங்களில் இவ்வாறு கருத்திணைப்பை உணர்ந்து போற்றி என்னை ஊக்கினர்.

### கம்பன் கற்கண்டு

எங்களுக்கு உணவு வேர்க்கடலை, வாழைப் பழம், தயிர் அல்லது பால் இவையே ... கடலைக் கனியை மென்றுகொண்டே கம்பனையும் கற்கண்டாகச் சுவைத்தோம். சீதை அனுமானிடம் தான் அசோகவனத்தில் புரியும் தவச்சிறப்பைச் சொல்கிருள். "என் கற்பைக் காட்டவே இங்கே உள்ளேன்".

"இற்பிறப்பும் ஒழுக்கும், இழுக்கம் இல்
கற்பும் யான்பிறர்க்கு எங்ஙனம்
காட்டுவேன்?"

"என் சொல்லினுற்சுடுவேன் அது தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசென வீசினேன்"

என்பதைப் பல்முறை சொல்லிச் சொல்லி ஐயர் ஷேக்ஸ்பியரின் ஒதெல்லோவுடன் விமர்சனம் செய்து மகிழ்வார்.

கம்பனில் ஐயருக்கு மிகவும் பிடித்தது இரணியப் படலம். கம்பன் முழுதுமே மறைந்தாலும் இந்தப் படலம் ஒன்றே போதும்; அவன் பெருமையை அதுவே சொல்லும் என்பார். நரசிம்ம ஜயந்தியின்போது நான் இப்படலத்தைப் படித்தேன். ஐயர் விளக்கம் சொல்லி வந்தார். "பிளந்தது தூணும் ஆங்கே" என்ற பாட்டைப் பாடும் போது எழுந்து ஆடத் தொடங்கினர். இதை இரண்டுமுறை படிக்கச் சொல்லிக் கற்பூரம் ஏற்றிக் கம்பனுக்குத் தீபாராதனை செய்தார்.

### ஐயருக்கு இறுதிப் பாட்டு

நான் நவரச நடனுஞ்சலி அமைத்த போது கம்பராமாயணக் கருத்தை வைத்து இராமாயண நடனத்தைச் சித்தரிக்கச் செய்தார். அனுமான் கணையாழி தந்த காட்சியைச் சுருட்டி ராகம் ஆதிதாளத்திலே பாடி அபிநயம் பிடித்தேன். இதுவே இறுதியாக நான் அவருக்குப் பாடிய பாட்டு. அருவிப் பாட்டில் அவர் மூழ்கினர் அந்தோ!

ப: கணையாழியைக் கண்டானே
— ராம் ராம் எனக்
கண்ணில் ஒற்றிக்கொண்டாளே -
சீதாதேவி (கணை)
அ: அணைபுரண் டோடிடும்
அருவிக் கண்ணீர்வார -
அலைகடல் போலவே
ஆர்வம் களிகூர (கணை)
ச: அரும்பசிக் குதவிடும் அமுதினைப்
போலே
அழிபிணி போக்கிடும்
அமரசஞ்சீவிபோலே
இரும்பு பொன்ஞகிடும்
இரச குளிகைபோலே
இருந்துப சரித்திடும்
விருந்தினைப்போலே
பொங்கிப்பூரித்து ராமன்
அங்கையிலே யணிந்த
கணையாழியைக் கண்டாளே.

### ஆனந்தரங்கபிள்ளையும் கம்பனும்

கம்பனைப் பாடலாம் ஆடலாம், படிக்கலாம் சுவைக்கலாம், சொல்லலாம் மெல்லலாம் நினைக்கலாம் — எந்த நிலையிலும் கம்பன் இனிக்கிறான்.

காரைக்குடியில் கம்பனடிப்பொடியார் மண்டபம் கட்டி விழாக் கொழிக்கின்றனர். அதுபோலப் புதுச்சேரியிலும் செய்யவேண்டும் என்பது என் அவா. ஏனெனில் புதுச்சேரியில் அந்தக்காலம் துப்ளேக்கு துபாஷாயிருந்து வரலாற்றுப் பெருமைபெற்ற நாட்குறிப்புகளை எழுதி வழங்கிய ஆனந்த ரங்கப்பிள்ளை ஒவ்வொரு இரவும் பெரும் புலவரைக் கொண்டு கம்பராமாயணம் கேட்டுவந்தார் கம்பராமாயணக் கருத்தை இசைப் பாடல்களாகக்கோத்த அருணாசலக் கவிராயரை ஆனந்த ரங்கப்பிள்ளை மிகவும் சிறப்பித்தார். இவர் சிறந்த ராமபக்தர். கம்பராமாயணப் பெருமையை பிரெஞ்சுப் புலவருக்கும் எடுத்துரைத்தார். லாமார்த்தீன், ரஸீன் கவிதைகளுக்கும் கம்பன் கவிதைக்கும் இணைப்புறுத்தி பிரெஞ்சுப் புலவர் பேசிவந்தனர்.

நான் புதுவையில் இருந்த காலத்திலும் கம்பராமாயணப் புலவர் சிறந்திருந்தனர். பாரதி காலத்தில் வ. வே. சு. ஐயர் கம்பனையும் வள்ளுவரையும் உலகிற்கு அறிவிக்கத் தொடங்கினர். அவரது ஆங்கில மொழிபெயர்ப்பு புதுவையிலிருக்கும் போதே வெளிவந்தது. எங்கள் அரசியல் இடர்களையெல்லாம் கம்பன் மாற்றிக் கவியின்பமூட்டினான். ஐயர் கம்ப நிலையம் நாட்டி இலக்கியப் பணிபுரிந்தார்.

### கம்பன் கழகம்

இந்தக் காலத்திலே புதுச்சேரியிலே கம்பன் கழகம் சிறப்பாக நடப்பதுபற்றி மகிழ்ச்சி யடைகிறேன். 1966-ம் ஆண்டு தொடங்கி நடக்கும் கம்பன் கழகம்பற்றி இன்றே அறிந்தேன். புலவர் கோவிந்தசாமி புலவர் அ அருணகிரி, பரூக் மரைக்காயர், வெங்கடசுப்பா ரெட்டியார் முதலியோர் பெயரைக் கண்டதும் இந்தக் கட்டுரை எழுந்தது புதுவையில் ஐயர், பாரதி, கம்பன் இம்மூவர் சிலையுடன் "புதுவை கம்ப நிலைய மண்டபம் எழுந்து விளங்கவேண்டும். சென்னையில் வள்ளுவர் கோட்டம் அமைந்தது போலவே புதுவையில் **கம்பர் கோட்டம்** அமைய வேண்டும் கம்பன் விழாவில் இதைத் தீர்மானிப்போம்.

### கொட்டுங்கள் முரசு

கொட்டுங்கள் முரசம் வெற்றிக்
கொடிகளைப் புகழின் வானம்
எட்டிட உயர்த்திடுங்கள்
இணையிலா நமது கம்பன்
கட்டினான் கவிதைக் கோயில்;
கன்னித்தமிழ் அணங்குவாழ –
எட்டெட்டுத் திசையும் போற்றத்
திருவிழா எடுப்போம் வாரீர்.
எல்லையில் அழகையெல்லாம்
இனிதுற முகந்து, நல்ல
சொல்லமுதுடனே, ஆழ்ந்து
சுவைதரும் பொருளும் கூட்டிக்
கல்வியிற் பெரிய கம்பன்
கற்பகக் கவிதை தந்து
பல்கலை யுலகு போற்றும்
பரிதியாய் விளங்கினானே!

# இம்பரில் யான் கண்ட கம்பர்

மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல் இளங் கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை!
உண்மை! வெறும் புகழ்ச்சியில்லை

என்னும் பாரதியார் பாடல், அன்று என் இள நெஞ்சில் தமிழ் வளஞ் சுரக்க வழி காட்டியது.

யான் இரவுப் பள்ளியில் சேர்ந்து கல்வி கற்றவன். "கலா நிலையம்" என்பது, அந்நாளிற் சென்னைப் புரசைப்பாக்கத்தில் புகழுடன் கலைவளர்த்த கங்குற் பள்ளி. அதில் பின்னுளிற் 'கலா நிலையம்' என்னும் பெயர் தாங்கித் தமிழ் வளம் பரப்பிய கிழமை இதழின் ஆசிரியர் – வழக்கறிஞர் – அருங்கலை விநோதர் T. N. சேஷாசலம் ஐயரவர்கள், கம்ப ராமாயணம் – பால காண்டம்-கையடைப் படலத்தைக் கருத்தைக் கவரும் வகையில் எங்களுக்குக் கற்பித்தார்.

அவர் தொட்டுக் காட்டிய கம்பரின் கவியுள்ளம், என் உள்ளத்தை விட்டு இன்றும் அகலாது என்னைக் கம்ப ராமாயணத்திற் கருத்தூன்றிப் பற்பல நயங்களைக் கண்டறியச் செய்து வருகிறது.

'இம்பர் நாட்டிற் செல்வமெலாம்
எய்தி அரசாண் டிருந்தாலும்,
உம்பர் நாட்டிற் கற்பகக்கா
ஓங்கு நீழல் இருந்தாலும்,
செம்பொன் மேரு அனைய புயத்
திறல்சேர் இராமன் திருக்கதையிற்
கம்ப நாடன் கவிதையிற் போற்
கற்றோர்க் கிதயங் களியாதே!'

என்பது, கம்பரின் பாடலைச் சிறப்பித்து அறிஞர் ஒருவர் ஆய்ந்துரைத்த சிறப்புப் பாயிரப் பாடல்.

இன்று யான் எண்பது வயதைக் கடந்த
நரைமூதாளன்

'தொட்டனைத் தூறும் மணற்கேணி
மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு'

என்னும் பொய்யா மொழிக் கியைய, கற்கக் கற்கக் கழி பேரின்பம் விளைப்பதாய் விளங்குகிறது கம்பர் படைத்த 'இராமாவதாரப் பேர்த் தொடை நிரம்பிய தோமறு மாக்கதை'.

புரசைப்பாக்கம் வேளாளர் தெருவில் K. இராமரத்தினம் ஐயர் என்னும் தமிழ்ப் பேரறிஞர் ஒருவர் வாழ்ந்தார். அவர் கல்லூரியிற் பயின்று இளங்கலைப் பட்டம் (B. A.) பெற்றவராயினும், பொருள் வசதியுடையவராகையால், வேறலுவலெதையும் விழையாமல், கம்ப ராமாயணத்தைக் கற்பதிலேயே தம் வாழ்நாளைக் கழித்தவர். அவர், யான் குறிப்பிட்ட என் நல்லாசிரியருள் தொல்லாசிரியராய் விளங்கிய 'கலா நிலையம்' ஆசிரியருக்கு இளைய மாமனர். அப்பெரியாருடைய அரிய நட்பும் என்னைக் கம்பரிடம் ஆற்றுப்படுத்தி, அரிய பல நயங்களை அறிந்து இன்புறச் செய்தது.

எனது தமிழறிவை-இலக்கணத் தெளிவால் விரிவடையச் செய்த என் நல்லாசிரியர் – உயர்திருவாளர் கா. ர. கோவிந்தராச முதலியாரவர்களும், கம்பராமாயணத்தைக் கருத்தூன்றிக் கற்றவர்.

கம்ப ராமாயணத்திற் காணப்படும் பாட பேதங்கள் பற்பல. அதற்குக் காரணம், ஏடு பெயர்த் தெழுதியவர்களின் விழிப்பின்மையே எனக் கருதலாம் 'எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்' என்பது புது மொழியன்றே! எந்த நூல் பலராற் படி செய்து படிக்கப்பட்டதோ, அந்த நூலிற் பாட வேறுபாடுகள் பதிந்துவிட்டதைக் கற்ருர் அனைவரும் அறிவர். அங்ஙனம் பலராற் படி செய்து படிக்கப்பட்ட நூல்களுள் கம்பராமாயணமும் ஒன்று.

பண்டைக் காலத்தில் நம் பாரத நாட்டில் எழுதப்பட்ட நூல்கள் அனைத்தும், ஓலைச் சுவடிகளே. எழுது கோலாய்ப் பயன்பட்டவை எஃகினுற் செய்யப்பட்ட எழுத்தாணிகளே. ஆதலின், எழுத்துக்களின் வடிவங்கள் எழுதுபவர் கையெழுத்திற்கேற்ப, பற்பல விதங்களாகக் காட்சியளிக்கும். எனவே, ஏடுகளைப் படித்துப் படிசெய்வது எளிய செயலன்று சில எடுத்துக் காட்டுகளால் இதை அறியலாம்.

யகரம் மகரம் போலத் தோன்றியதால், யாப்பருங் கல விருத்தியில் 'யவமத்திமம்' என்னும் தோரையிடைச் செய்யுளின் பெயர், 'பவமத்திமம்' எனப் படிசெய்யப்பட்டு அச்சுப் புத்தகத்தில் இடம் பெற்றதோட மையாமல், பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியிலும் பதிப்பிக்கப் பட்டுவிட்டது! முதலடியும் நான்காமடியும் எழுத்துக் குறைந்து, நடுவிரண்டடியும் எழுத்து மிக்கு, நாலடியும் சீர் ஒத்துவரும் யாப்புக்கு வழங்கும் வடமொழிப் பெயராகிய 'யவமத்திய யதி' என்பதன் திரிபே. இப்பெயர் என்பதை வட மொழியில் வல்லுநராய்ச் சென்னை மாநிலக் கல்லூரியில் அந்நாளிற் பேராசிரியராய்த் திகழ்ந்த பெரியார் குப்புசாமி சாத்திரியாரிடம் மும்முறை சென்று, இம் மொழியின் வரலாற்றை யான் உணர்ந்தேன்! இது நிற்க.

கம்ப ராமாயணத்திற் கணக்கற்ற பாட வேறுபாடுகள் புகுந்தமைக்குக் காரணம், அதை எண்ணற்ற மக்கள் படிசெய்து படித்ததே என்பதில் ஐயமின்று. அப்பாட வேறுபாடுகளை அண்ணுமலைப் பல்கலைக் கழகம் பல ஏடுகளை ஒப்பு நோக்கி வெளியிட்டுள்ள கம்ப ராமாயணப் பதிப்பிற் பரக்கக் காணலாம். ஆயினும், சிறந்த பாடத்தைத் தேர்ந்தெடுப்பது கடலில் மூழ்கி முத்தெடுப்பதினும் கடினமானது; தமிழிற் பன்னூற் பயிற்சியும், பதிப்புத் தொழிலில் ஆழ்ந்த பயிற்சியும் உடையார்க்கு அன்றி, மற்றவர்க்கு இயலாதது. இரண்டோர் எடுத்துக் காட்டுகளால் இதனை உணரலாம்:

பால காண்டம் நகரப்படலத்தில் அகழியை வருணிக்கும் 'அன்னமா மதிலுக்கு' எனத் தொடங்கும் கவியின் மூன்றும் அடி 'கண்ணியர் அல்குற் றடமென யார்க்கும் படி வருங் காப்பினதாகி' என அண்மையில் வெளிவந்த அழகிய பதிப்பிலும் காணப்படுகிறது. இவ்வடியின் உண்மைப் பாடம் கண்ணியர் அல்குந் தடமென யார்க்குங் கடப்பருங் காப்பினதாகி' என்பது. இவ்வடியின் பொருள். 'கன்னிப் பெண்டிர் தங்கும் கன்னியா மாடம் போன்று கடப்பதற்கு அரிய காவலையுடையதாய்' என்பது. அல்தல்—தங்குதல். 'பல்பூங் கானல் அல்கினம் வருதல்' என்னும் அகநானூற்றுக் களிற்றி யானை நிரை 20ஆம் பாடலின் 16ஆம் அடியினையும் அதன் பொருளினையுங் கொண்டு, இவ் உண்மைப் பாடத்தைத் தெளியலாம். ஏடு பெயர்த் தெழுதினவர் 'அர்குந்தடம்' என்பதை 'ந்த' என்னும் ஈரெழுத்துக்களை 'ற்ற' எனப் பிறழ உணர்ந்து படி செய்ததால் நேர்ந்த இப் பெரும் பிழை, ஆபாசப் பொருள்பட வழி கோலிவிட்டது.

'காவல் கடந்தெங்கள் கன்னிமா
டம்புகுந்தாய்;
யாவனே! விஞ்சைக் கிறைவனோ?–
தேவனோ?
உள்ளவா சொல்' என்ருள் ஊசற்
குழைமீது
வெள்ளவாள் நீர்சோர விட்டு.

என்னும் நளவெண்பா (85) இவ் உண்மைப் பாடத்திற்குச் சான்று பகரும்.

கம்பராமாயணம்–அயோத்தியா காண்டம் – கைகேசி சூழ்வினைப் படலத்தில் 'மாதர் கள் கற்பின் மிக்கார்' எனத் தொடங்கும் செய்யுளின் இறுதியடி, 'சாதுகை மாந்த ரெல்லாம் தயரதன் றன்னை யொத்தார்' எனக் காணப்படுகின்றது. இதில் உள்ள 'சாதுகை' என்னுஞ் சொல், ஆய்தற் குரியது.

இச்சொல் தமிழில்–பண்டை நூல்களில்–எங்கும் காணப்படவில்லை. கம்பருக்கு ஓதலான நூல்களுள் திவ்வியப் பிரபந்தமும் ஒன்று அவர் ஆழ்வார் அருளிச் செயல்களில் மிகவும் ஈடுபாடுடையவர் என்பதை அறிஞர் பலரும் நன்கறிவர். இச் சொல்லைப்பற்றிப் பல்லாண்டுகளுக்கு முன் மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடாகிய 'செந்தமிழ்' என்னுந் திங்கள் இதழில் அறிஞர் சிலர் கட்டுரைகள் எழுதியிருந்ததை யானறிவேன். அவர்தம் முடிந்த கருத்து என் நினைவில் நிலைக்கவில்லை.

திவ்விய பிரபந்தத்தில் – இயற்பா – நான்முகன் திருவந்தாதியில்,

'திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தர்- இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்கள்',என்றான் நமனுந்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு.

என்னும் பாசுரத்தில் உள்ள 'சாதுவர்' என்னும் சொல்லையே

'விருத்தமென்னும் ஒண்பாவிற் குயர் கம்பன்' என்று விதந் தோதப்பட்ட கம்ப நாட்டாழ்வார், 'சாதுவ மாந்தர்' என இரு சீராக்கித் தம் விருத்தத்திற் கியைய அமைத்துக் கொண்டார் என்பதே பொருந்தும்.

'கடலைக் கண்டனம் என்பார்கள்
யாவரே முடிவுறக் கண்டார்!'

என்ற வண்ணம், கம்பர் இயற்றிய கவி சாகரத்தை முற்றும் கண்டவர் யார்?

கம்பரிடத்தே என்னை ஆற்றுப்படுத்திய கருணைக் கடல்களாகிய என் ஆசிரியர்களை யான் என் மனமொழி மெய்களாற் சிந்தித்து வாழ்த்தி வந்திக்கின்றேன்!

இராமாவதாரத்தை என்றும் தமிழ் மொழியில் வாழச்செய்த கம்ப நாடர் கழவினை வாழ்த்துவாம்!

# கம்பனை எனக்குக் காட்டியவர்கள்

மறைத் திரு. சவரிமுத்து அடிகள்

'தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வராது' என்பர் பெரியோர். கம்ப நாட்டாழ்வாரை எனக்குக் காட்டியவர்கள் பலராவர். அன்னார் அனைவரையும் இவண் எடுத்துக்காட்ட நேரமும் இடமும் போதா. அவர்களில் பலரைச் சுட்டியும் சிலரை விரித்தும் காட்டுதும்.

மகற்காற்றும் உதவியெல்லாம் என் தந்தையார் திரு சிம்சோன் பிள்ளையவர்கள் எனக்கு ஆற்றிவைத்தார்கள். தொண்டமான் புதுக்கோட்டையில் உள்ள தமிழ்ச் சுவிசேட லுத்தரன் திருச்சபையின் உயர்நிலைப் பள்ளியில் அவர்கள் தலைமை எழுத்தராகவிருந்து, என்னையும் அப்பள்ளியில் சேர்த்தார்கள். (1916–1921).

அக்காலத்தில் பள்ளியின் தலைமை ஆசிரியராக விருந்தவர் திரு. கம்பர் மாணிக்கம் பிள்ளையவர்கள். அவருடைய தந்தையார் திரு மாசில்லாமணிப் பிள்ளை. அவர் கூடலூரிலிருந்த லுத்தரன் கல்லூரியின் முதல்வராக இருந்தார். இவர் தம் முதல் மகனுக்குக் 'கம்பர்' பெயரிட்டமைத்தது சிறப்புடையது (1860). கம்பர் மாணிக்கம் பிள்ளையவர்கள் முதல்வராயிருந்த காலத்தில் (1914-1924) மேற்படி பள்ளிக்கூடம் 'கம்பன் கலைக் கூடம்' ஆக இருந்தது.

எங்களுக்குத் தமிழ் இலக்கண இலக்கியம் கற்றுக்கொடுத்தவர் சிதம்பரம் புருடோத்தம அய்யரவர்கள். ஆங்கிலமும் கற்பித்தார். இசை ரசிகர். மூன்று ஆண்டுகள் அவர் எங்களுக்கு வகுப்பு ஆசிரியராக விருந்தார். (1918–1921). இந்த மூன்று ஆண்டுகளிலும் நான் அவருடைய வகுப்பறையிலும், வீட்டறையிலும் ஆங்கிலமும் கணக்கும் தமிழும் பயின்றேன். இந்த மூன்று வகைப் பாடங்களையும் அய்யரவர்களே கற்பித்து வந்த காரணத்தால், சாதாரண தமிழாசிரியர்களிடம் காட்டுவது போல், நாங்கள் வாலாட்ட இயலவில்லை! கண்டிப்பும் கருணையும் நிறைந்தவர். எங்களை, சிறப்பாக, என்னைத் தன் குழந்தைபோலக் கருதிப் பாடம் சொல்லிக் கொடுத்தார்.

'வீடணன் அடைக்கலப் படலம்' 1921, SSLC பாடப் புத்தகத்தில் ஒரு பகுதியாக இருந்தது. பாடம் சொல்ல ஆரம்பித்தால் இலக்கணம் கூறுவார். புணரியல், அன்மொழி, உருபும் பயனும் உடன் தொக்கத்தொகை, முதலியவற்றிற்கு எடுத்துக்காட்டு: நடுவே-கதைகள் கம்பன் பாதி-கதை பாதியாகிவிடும்!

'மாருதி வினைய வார்த்தை' என்று குரலெழுப்பி, சுருதி கூட்டி, சந்தி பிரிக்காமல் பாடி, பின்னர் சந்தி பிரித்து, இலக்கணங்கூறி, நயம் உரைத்து அய்யரவர்கள் பாடம் சொல்லிக்கொடுத்து எங்களுக்குக் கம்பனைக் காட்டியது இன்றும் என் மனத்தில் திரைப்படம்போல் பேசுகின்றது.

'சீரிது; மேல் இம்மாற்றம் தெளிவுறத்
தேர்மின்' என்ன
ஆ(சி)ரியன் உரைப்பதானுன்;
அனைவரும் அதனைக் கேட்டோம்'

### நடுக்காவேரி-மு. வேங்கடசாமி நாட்டார்

புதுக்கோட்டை படிப்பை முடித்த பின்னர் என் தந்தையார் என்னைத் திருச்சி பிஷப் ஹீபர் கல்லூரியில் சேர்த்து வைத்தார். (1921-1923). அக்கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராக இருந்தவர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள். அக்காலத்தில் அவர்களது தமிழ்ப் புலமையின் பேராற்றலைப் புரிந்துகொள்ள என்னாலியல வில்லை. எங்கள் கட்டுரைகளைத் திருத்தி, பிழைகளைச் சுட்டி-எங்கெங்கே 'க்', 'ச்' போடவேண்டும் முதலான சிறு விஷயங்கள் போன்றவற்றைப் புன்முறுவலோடு எடுத்துக்காட்டுவார்.

வகுப்பறையில் கற்றது கொஞ்சம் - மேடையில் அவர் பேச்சும் தனிமையில் அவருடன் அளவளாவியதும் எனக்கு மிக்க இன்பமாயிருந்தன. அவருடைய தலைமையில் என்னை மேடை ஏறிப் பேசச் செய்து இறுதியில் என்னைப் பாராட்டியதை நினையுந் தோறும் புளகாங்கித மடைகிறேன்.

### திரு. தேவநேயப் பாவாணர்

சென்னை - கீழ்ப்பாக்கம் 'குருகுலம்' என்ற இறையியல் கல்லூரியில் (1927-31) நான்காண்டுகள் பயின்று வந்த காலத்தில் எனக்குத் தமிழின் இனிமையையும் கம்பனின் உயர்வையும் சிறப்பித்துக் காட்டியவர்களில் தலையாயவர் திரு. தேவநேயப் பாவாணர் அவர்கள். வகுப்பறையில் சங்கத்தமிழ், தேவாரம், திருவாசகம், இரட்சணிய யாத்திரிகம் முதலியவற்றில் எங்களைப் புகுமுகம் செய்துவைத்தார் இரவில், தன் ஆறையில் கித்தார் வாசிக்கும்போது நானும் அவர் இசையை ரசிப்பேன். புதிய ஏற்பாடு (New Testament) கிரேக்க மொழியில் எழுதப்பட்டிருந்த காரணத்தால், நாங்களும் கிரேக்க மொழி கற்பிக்கப் பட்டு வந்தோம் குருக்குலத்தில்.

பாவாணரோடு பழகிய காலங்களில், தனித்தமிழின் சிறப்பையும். பலமொழிகளின் தொடர்புகளையும் அழுத்தந் திருத்தமாகச் சொல்லிவருவார். என்னிடம் கிரேக்கச் சொற்களையும் சொற்றொடர்களையும், கேட்டுக்கொண்டு - தமிழ், ஆங்கிலம், கிரேக்கம் முதலிய மொழிகளின் வேர்களை ஆய்ந்து கூறுவர்.

### H. A. கிருஷ்ணப்பிள்ளையும் கம்பரும்

குருகுலத்தில் நாங்கள் செர்ம்பூர் கல்லூரி B D. Bachelor of Divirity) பட்டம் பெற பயிற்றுவிக்கப்பட்டோம். அத்தேர்வுக்கென்று தமிழ்ப் பாடத் திட்டம் வகுத்தவர் தவமிகு. ஜே எஸ். மாசிலாமணியாவர் பசுமலை இறை இயல் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். அப்பாடத் திட்டத்தில் ஒரு பகுதி: மகாவித்துவான் H. A. கிருஷ்ணப்பிள்ளை யவர்களது 'இரட்சணிய யாத்திரிகத்தின்' தலையாகிய 'இரட்சணிய சரிதம்' ஆகும். இதுவே, நான் கம்பனைக் காண்பதற்கு வாயிலாக அமைந்தது.

'முன்னோர் மொழி பொருளே யன்றி
யவர் மொழியும்
பொன்னே போற் போற்றுவம்'

என்ற வண்ணம். கம்பர், திருவள்ளுவர் முதலிய சில மகா கவிகளின் கருத்தும் இந்நூலகத்து அரதன கசிதம் போலப் பொருந்தப் பதிக்கப்பட்டன' என்று கிருஷ்ணப்பிள்ளையே தமது இரட்சணிய யாத்திரிகத்தின் முகவுரையில் (1894) எழுதியுள்ளார்.

சங்கத் தமிழ், திருக்குறள், தேவாரம், திருவாசகம், ஆழ்வார்கள் நாலாயிரப் பிரபந்தம் முதலியவற்றைக் கற்றவர்களே கம்ப ராமாயணத்தைப் படித்து ரசிக்கக் கூடியவர்கள் என்பது, கிருஷ்ணப்பிள்ளையவர்களின் இரட்சணிய யாத்திரிகம், இரட்சணிய மனோகரம் போன்ற நூல்கள் எனக்குத் தெளிவுறத் தேர்மின் எனக் காட்டியது. இதன் விளக்கத்தைப் பின்னர் காட்டுவோம்.

### தூத்துக்குடி, A. C. பால் நாடார்

எனது மனைவியாரது குடும்பத்தினர், தஞ்சாவூர் ஆபிரகாம் பண்டிதர் குடும்பத்

தினரோடு நட்புரிமை கொண்டவர்கள். எங்கள் திருமணத்தன்று (29-12-1929) திருமண ஊர்வலத்திற்குத் தலைமை பூண்டு தஞ்சையில் நடத்திவைத்தவர், ஆபிரகாம் பண்டிதரின் தலை மகனுர் சுந்தரபாண்டியன் அவர்கள். இவர்கள் மூலம் திரு. A C. பால் நாடாரோடு தொடர்பு கொள்ள எனக்கு வாய்ப்பு உண்டாயிற்று. 1956-ல், காரைக்குடி கம்பன் விழாவில் - 'கம்பராமாயணமும், இரட்சணிய யாத்திரிகமும்' என்ற தலைப்பில் பேசுவதற்கு மேடையேறிப் பேசத் தொடங்கினேன். மூன்று நான்கு மணித் துளிகளுக்குப் பின்னர், திரு. பால் நாடார் என்னை விளித்து — 'எடுத்த எடுப்பில் பேச்சைத் தொடங்கி விட்டீர்களே! கிருஷ்ணப் பிள்ளையைப் பற்றிச் சற்றுச் சொல்லிவிட்டு, பின்னர் நீங்கள் பேசவேண்டிய பொருளுக்கு வாருங்கள். இங்குள்ளவர்கள் கம்பனை அறிவார்; கிருஷ்ணப்பிள்ளையை அறியார்' என்று அன்புடன் ஆலோசனை கொடுத்து அமைந்தார்.

இந் நிகழ்ச்சிக்குப் பின்னர், பால் நாடார் அவர்களின் கட்டுரைகளிற் சில வற்றைப் படித்துக் கம்பர் காட்டிய அவதார ரகசியத்தை, அருவக்கடவுள் உருவம் எடுத்த காரணம், வயணம், தோரணை முதலியவற்றில் சிந்தனை செலுத்த முற்பட்டேன்.

1931 முதல் 1934 மட்டும் நான் சென்னை-பிராட்வேயில் உள்ள டேனிஷ் மிஷன் வாசகசாலையின் செயலாளராக இருந்தேன். அக்காலங்களில், ஒய். எம். சி. ஏ. சபா மண்டபத்தில், ஒவ்வொரு திங்கட் கிழமை மாலைதோறும், திரு. ரா. பி. சேதுப் பிள்ளையவர்கள் - பாலகாண்டத்தில் சில பாடல்களை எடுத்துப் பழகு தமிழில் ஓசை நயம், சொல் நயம், பொருள் நயங்கூட்டி எங்களை இன்பக் கடலில் ஆழ்த்திவந்தார். தமிழென்பது அளப்பரும் சலதியன்றே? இதில் இன்பக் கடல், துன்பக் கடல், பால் கடல், கருங்கடல் - ஏன், ஏழு கடல்கள் உண்டன்றே?

ஒரு நாள் மாலை வகுப்பில்; 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்ற பாடலை, அறுபது மணித் துளிகளில் விளக்கி,

வாள் கண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்?
ஊழ் கொண்ட சமயத்து அன்னான்
உருவு கண்டாரை ஒத்தார்.
(பால காண். 1166)

என்பதன் ஆழத்தில் எங்களை அமிழ்த்தி, அகலத்தில் உரை விரித்து வைத்தார் ரா. பி. சேதுப் பிள்ளையவர்கள்.

### திரு. பால் கடம்பவன சுந்தரனுர்

கிருஷ்ணப்பிள்ளை பாடிய இரட்சணிய சரிதத்திற்கு முதன் முறையாக உரை கண்டவர் இவர். புதுக்கோட்டையில் பழுத்த வைணவ பரம்பரையில் தோன்றியவர். கிறிஸ்து பெருமானை அருள் பழுத்த பழச் சுவையாக ரசித்து அவர்தம் அடியாரானதும் புதுக்கோட்டையில்தான். கிருஷ்ணப் பிள்ளையின் பல பாடல்களை இசையோடு பாடி எங்களை இன்புறுத்துவார். இவர் வாயிலாக கம்ப ராமாயணத்தின் இசை நுணுக்கங்களை நான் அறியலானேன்.

''கிறிஸ்துபெருமான் நகர் நீங்கு படலம்'' என்ற தலைப்பில், கம்பரது நகர் நீங்கு படலத்தோடு கிறிஸ்து எருசலை நகர் நீங்கியதைக் கிருஷ்ணப்பிள்ளை பாடியதை ஒப்பிட்டு விளக்க உரை ஒன்றை எழுதி வெளியிட்டுள்ளேன். (1057).

### 'கம்பனடிப்பொடியார்' திரு. சா. கணேசன் அவர்கள்

எனது வாழ்க்கைப் பயணத்தில் இவரோடு பழக நேர்ந்தது ஒரு சுவையான நிகழ்ச்சியாகும் காரைக்குடி ரெயில்வே சந்திப்பில் நாங்கள் ஒருவரை யொருவர் சந்திக்கலானோம் (1953). காரைக்குடியிலிருந்து சிதம்பரம் சென்று ஆயிரக்கால் மண்டபத்தில் - திருவாசக மாநாட்டில், திரு. டாக்டர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் தலைமையில் என்னைப் பேச வைத்தார்.

இப்பொழுதும் இக்கட்டுரையை எழுத வைத்தவரும் இவரே. கம்பனில் ஏனையோர் காட்டாதன எல்லாங்காட்டி, கம்பராமாயணத்தின் கருப்பொருளைக் காட்டி, காரைக்குடி நாட்டார் நல்லாசி தரக் கம்பன் கழக மேடை நாமெய்த வாய்ப்பும் வசதியும் எமக்குப் படைத்துக் கொடுத்தவர் இவரேயாவார்.

ஒரு சமயம் காரைக்குடியிலுள்ள இவர் இல்லத்திற்குச் சென்றிருந்த பொழுது, எனக்கு மதிய உணவு அன்புடன் அளித்ததோடு அமையாது, கம்பனின் கவிச் சுவையை நான் ருசிக்க வேண்டி இரு நூல்களை எமக்களித்தார். கிருஷ்ணப்பிள்ளையின் இரட்சணிய யாத்திரிகம்-முதற் பதிப்பு (1894) ஒன்று V. V. S. (Studies in Kamba Ramavanam) மற்றென்று. இரட்சணிய யாத்திரிகத்தை என் கையில் கொடுத்து, மேலும் கிருஷ்ணப் பிள்ளை கம்பரைக் கடுமையாகத் தாக்கியுள்ள பாடல் ஒன்றை எனக்குச் சுட்டிக் காட்டினர். நான் அதைக்கண்டு அயர்ந்து போனேன். அவர் என்னைத் தேற்றுமுகத்தான் சொன்னதாவது:

''மகா வித்துவான், தமது காலத்திற்கேற்பவும் கொள்கைக் கேற்பவும் இவ்வாறு எழுதி வைத்தார். நாங்கள் இப்போது இதைக் கண்டு கலங்கவில்லை .. இப்பொழுது வருகிற இரட்சணிய யாத்திரிக பதிப்புக்களில், வெளியிடுவோர் இத்தகு பாடல்களை ஒதுக்கி விடுகின்றனர். ஆசிரியர் எழுதியுள்ளதை விலக்கிவிடுவது வெளியிடுவோரது உரிமையன்று என்று காய்தல் உவத்தல் இன்றி நடுநிலையில் நின்று சொல்லியது இன்றும் என் செவியில் தொனிக்கிறது

மகா வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையவர்கள்

என்னிடம் அன்புமிக்க பிள்ளையவர்களும் நானும் சென்னை பப்ரிசியுஸ் உயர்நிலைப்பள்ளியில் 1937 முதல் 1940ஆம் ஆண்டு மட்டும் ஆசிரியர்களாக இருந்தோம். அன்றுதொட்டு இன்றுமட்டும் யான் அவரிடம் பல்வகையிலும் பயன் பெற்றுள்ளேன்.

இந்தக் கலைக்களஞ்சியத்தின் வாயிலை அடைத்து வைத்துள்ள கொட்டாங்கச்சியைத் திறந்துவைத்து என் மனமென்னும் சாக்குப் பையைத் திறந்து வைத்துக் கொண்டு இருப்பேன். அவர்கள் தன் சாய்மான நாற்காலியில் அமர்ந்தவண்ணம் நான் கேட்டவற்றிற்கு விடைகூறுமுகத்தான் பல்வேறு செய்திகளையும், அச்சிட்டப் புத்தகத்திலிருந்து வாசிப்பது போன்று சொல்லிக் கொண்டு போவார்கள்.

கிருஷ்ணப் பிள்ளையிடம் அவருக்கு மிகுந்த ஆர்வமுண்டு. அன்னாரது செய்யுள் அவருள்ளத்தைக் கொள்ளைகொண்டுள்ளதென்பார். இரட்சணிய மனோகரம் என்ற கிருஷ்ணப் பிள்ளையின்பாடல் நூலை என்னிடம் கேட்டு வாங்கி ரசித்து வருகின்ருர்.

அண்ணமலைப் பல்கலைக் கழகத்தின் 'கம்ப ராமாயணப் பதிப்பாசிரியர் குழு' உறுப்பினர்களில் அவர் ஒருவர் பாட வேறுபாடுகளின் ஆராய்ச்சியில் நாம் ஈடுபட்டதையும், சுவடிகளில் உள்ள வேறுபாடுகளின் சிக்கல்களைத் தாம் எவ்வாறு, ஆய்ந்து அறுத்து குழுவினர் ஒத்துக் கொள்ளக்கூடிய முறையில் முடிவுக்குக் கொண்டுவந்தார் என்பதையும் அவர் சொல்லக்கேட்டு இன்புறுவதுண்டு.

பழுத்த வைணவர். வைணவர் மா நாட்டுக்கு என்னை அழைத்துச் செல்வார். கம்பன் கவிதை இன்பத்தை ரசிக்கச்செய்வார் கம்பனது பாடல்களில் பல, ஆழ்வார்கள் பாடல் மெட்டிலேயே இருக்கின்றன என்பதை அழகுபட எடுத்துக்காட்டுவார்

தமிழ் இலக்கியத்திற்கும் கிறிஸ்தவத் தமிழ் இலக்கியத்திற்கும் உள்ள தொடர்புகளை எடுத்துக்காட்ட என்னைத் தூண்டி விடுவார்.

**ஆ. முத்துசிவம்: ''அசோக வனம்''**

1956இல் திரு. முத்துசிவமும் நானும் காரைக்குடி கம்பன் கழகத்தில் சொற்பொழிவாற்றினேம். அச்சமயம் நான் அவருடைய ஆழ்ந்த தமிழறிவையும் – அன்புள்ளத்தையும் பரந்த விரிந்த கலைப் பண்பையும் அறிந்து மகிழ்ந்தேன். பின்னர் அவர் எழுதிய 'அசோக வனம்' என்ற நூலைப் படித்தேன். என் மகிழ்ச்சி பெருகிற்று அந் நூலில் (பக் 48) பின் வருமாறு கிறிஸ்து பெருமானைப்பற்றி கிருஷ்ணப்பிள்ளை பாடியதை மகுடமாகக் கொண்டு 'அசோக வனம்' என்ற தலைப்பில் உள்ள அதிகாரத்தை முடித்துவைத்ததைக் காட்டி என் கட்டுரையையும் முடித்துக்கொள்ளுகின்றேன்.

''அறத்தை நிலைநாட்ட வந்த கிறிஸ்து பெருமான் அவஸ்தைப் படவில்லையா''?

'கை அயர்ந்து, வாய் புலர்ந்து, கண்
இருண்டு, காதடைத்து,
வெய்ய சிலுவை சுமந்துதலசி'
வீதி வழி செல்லவில்லையா?

'தன்னரிய திருமேனி சதைப்புண்டு
தவிப்பெய்திப்
பன்னரிய பலபாடு'
படவில்லையா?

அதர்மம் தொலைந்து தர்மம் தலையெடுக்க வேண்டுமென்றால், அந்தப் புனித சேவைக்கென்று தெய்வநீதி தேர்ந்தெடுக்கும் கருவி இவ்வாறெல்லாம் அவஸ்தைப்பட வேண்டியதுதான். இதுவே அசோக வனத்தின் மர்மம்.

கம்பனிடம் கற்க வேண்டிய கல்வி கரையில, கற்பவர் நாட்சில: கம்பனே எனக்குக் காட்டியவர் கம்பனே. இன்றும் கற்றுக்கொண்டே இருக்கிறேன். 'கண்டதைக் காட்டு' என்ற முறையில் ''கம்பனும் மார்த்தின் லூத்தரும்'' என்ற தலைப்பில், கம்பரையும் லூத்தரையும் (1483-1546) இணைத்தும் பிணைத்தும், இவர்கள் இருவரும் ஒன்ருய் வேருய் உடனுய் உள்ள நிலைகளைக் காட்டும் ஒரு ஆராய்ச்சி நூலை எழுதிக் கொண்டிருக்கிறேன். 'நசாங்கம்' என்பது அதில் ஒரு பகுதி.

வணக்கம்.

# கம்பனை எனக்குக் காட்டியவர்கள்

கி. பக்ஷிராஜன்

நான் சிறுவனயிருக்கும்போது எங்களூர் வழக்கப்படி வடமொழித் துதிகள், திவ்யப் பிரபந்தம் இவற்றை எனக்கும் போதித்தனர் பெரியவர்கள். எனக்குத் தமிழ்ப் பிரபந்தங்கள் விரைவில் பாடமாவதை எனது பெரியப்பா வித்துவான் வி. ப. வானமாமலை ஐயங்கார் கவனித்து ''ராஜா'' (வீட்டில் அழைத்துவந்த பெயர்) உனக்குத் தமிழ் நன்ருக வருகிறதே; நான்தான் சம்ஸ்க்ருதத்தில் தேர்ச்சி பெற்றுக் கவிதைகள் எழுதி அவை வெளிவர வசதியின்றியும், ஆதரிப்போர் இன்றியும் போய்விட்டன. நீயாவது தமிழில் தேர்ச்சி பெற்று நம் வித்வத் குடும்பத்தின் பரம்பரையைக் காப்பாற்ற வானமாமலைப் பெருமாள் அருள்புரியட்டும் – என ஆசீர்வதித்தார்.

அந்த ஆசியை முதலாகக்கொண்டு நான் ஐந்தாவது பாரம் படிக்கும்போது (Optional) விருப்பப் பாடமாக சரித்திரத்தையும், தமிழையும் தேர்ந்தெடுத்தேன். நான் தற்போது ஷாப்டர் ஹைஸ்கூல் என்று பெயர் விளங்கும் C. M. S. ஹைஸ்கூலில் படித்துக் கொண்டிருந்தேன். அவ்வமயம் அங்குத் தமிழ்ப் பண்டிதராயிருந்த சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் என்னிடம் மிகப் பரிவுகாட்டி என்னைத் தமிழில் நளவெண்பா, குசேலோபாக்கியானம், அரிச்சந்திர புராணம் முதலியவற்றைக் கற்க ஊக்கினர். தமிழ்ப் பாடப் புத்தகங்களில் கம்ப ராமாயணப் பகுதி ஒன்று இருப்பதுண்டு. அவற்றைப் படிக்கும்போதே என்னை அறியாமல் அப்பகுதிகளில் என் மனம் ஊன்றியது. அவற்றின் கவிதை நயங்களை நன்குணர நன்கறியாப் பருவம்.

1922 என்று நினைக்கிறேன். இந்துக் கல்லூரியில் கம்பன் விழா நடந்தது. மகா வித்துவான் ரா. ராகவையங்கார் அவர்கள் சொற்பொழி வாற்றியதைக் கேட்டேன். கம்பன் பாடல்களை அவர் உச்சரித்தவிதமும் அவற்றுக்கு அவர்கள் விளக்கம்தந்த முறையும் என் உள்ளத்தே பெருங்கிளர்ச்சியை உண்டாக்கின. கம்பன் பாடல்கள் (பாடமாக உள்ளவற்றை) எல்லாம் மனனம் செய்து எனக்குள்ளேயே பன்முறை எனக்குத் தோன்றிய முறையில் (ராகத்துடனல்ல) பாடி மகிழ்வுற்று வந்தேன்.

பள்ளிப் படிப்பு முடிந்து கல்லூரிப்படிப்பிற்கு இந்துக் கல்லூரியில் சேர்ந்தேன்.

அப்போது சுப்பிரமணியக் கவிராயர் அவர்கள் (அவர்களது திருவுருவப்படம் இந்துக் கல்லூரி மண்டபத்தை இன்றும் அழகு செய்துகொண்டு விளங்குகிறது) தமிழாசிரியராயிருந்தார்கள். குட்டையான வடிவம்; மா நிறம்; கண்ணுர நீரிட்டு மத்தியில் சந்தன குங்குமப் பொட்டிட்ட நுதல்; கருணை பொழியும் திருக்கண்கள்; இன்சொலன்றி அறியாத திருவாய்; என் இளம் உளத்தில் பதிந்து இன்றும் நிலைத்து நிற்கும் வடிவம் இது.

உயர்நிலைப் பள்ளியில் எடுத்த விருப்பப் பாடத்தை ஒட்டி எனக்கு அப்போது ஒரே கிளர்ச்சியாயிருந்த தமிழார்வத்தை உன்னி நான் Modern History, Indian

History and Tamil என்ற விருப்பப் பாடத்தை ஏற்றேன் முதல் நாள் வகுப்பிற்குக் கவிராயர் அவர்கள் வந்தார்கள். வகுப்பில் நாங்கள் பன்னிருவரிருந்தோம். தமிழ்க் கவிதைகளிலும், இலக்கணத்திலும் சில கேள்விகள் கேட்டார்கள். எல்லாவற்றுக்கும் நான் விடையிறுத்தேன். என் பேறு, அவர்கள் திருவுள்ளம் என்பால் விழுந்தது. வகுப்பு முடிந்தபின் என்னைத் தனியாக அழைத்து விசாரித்தார்கள். அது முதல் இன்டர் மீடியட் இரண்டு வருஷம் முடியும் வரை நான் அவரது பேரன்பிற்குரிய மாணவனானேன். இரண்டு மாதங்கள் கழித்து அவர்கள் என்னை நோக்கி, "கம்பராமாயணத்தைப் படித்திருக்கிறாயா?" என்று கேட்டார். நான் "மிகச் சிறு பகுதிகளே படித்திருக்கிறேன்" என்றேன். "அதனை முறையாகப் படி லைப்ரெரியில் செந்தமிழ்ப் பத்திரிகை முதலிய தமிழ்ப் பத்திரிகைகள் வருகின்றன. அவற்றில் இராமாயணத்தைப் பற்றி வரும் கட்டுரைகளையும் படி" என்று அறிவுரை கூறினார்கள். அப்போது மகா வித்துவான் ராகவையங்கார், மு. ராகவையங்கார், சொல்லின் செல்வர் சேதுப்பிள்ளை, திருநாராயணையங்கார், பி. ஸ்ரீ., வையாபுரிப் பிள்ளை, சோமசுந்தர பாரதி, இவர்களும் பிறரும் எழுதிய கட்டுரைகள் பல எனக்குக் கம்ப ராமாயணத்தில் உள்ள ஆர்வத்தை வளர்த்தன. இடையிடையே திரு. பாஸ்கரத் தொண்டைமான் கட்டுரைகளும் வருவதுண்டு. மதுரைத் தமிழ்ச் சங்க இண்டர்மீடியட்டிலே — தேர்வில் நான் இரண்டாவது பரிசு பெற்றேன். சென்று கவிராயர் அவர்களை வணங்கினேன். "தமிழன்னையின் திருவருள் உனக்கு நிறைய உண்டாகட்டும்" என்று ஆசீர்வதித்தார்கள் கம்பராமாயணத்தில் என்னை முட்டிய முதல் ஆசிரியர் ஸ்ரீ சுப்பிரமணியக் கவிராயர் அவர்களே.

நான் பி. ஏ. படிக்கையில் தமிழைப் பாடமாக எடுக்கமுடியவில்லை. ஏனெனில் இந்துக்கல்லூரியில் அப்போது பி. ஏ. யில் தமிழ் இஷ்டப் பாடமாக தேர்ந்தெடுக்க வசதியில்லை. மற்றொன்றும் இங்கு நான் சொல்லக் கடமைப்பட்டவன். நான் நான்கூனேரி உயர்நிலைப்பள்ளியிலிருந்து எஸ். எஸ். எல். சி. பரீகைஷயில் தேறினேன். அப்போது A. P. சிவப்பிரசாத் என்பவர் தலைமை ஆசிரியர். நான் பரீகைஷ தேறிக் கல்லூரியில் சேர்ந்த சில மாதங்கள் கழித்து அவர்களை வேற்றூருக்கு மாற்றினார்கள். தலைமை ஆசிரியர் மாணவர்களை எப்படி நயத்திலே நடத்தவேண்டும், அவர்களுடன் எப்படிப் பழகவேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக இருந்தவர்கள் அவர்கள். அவர்களுக்கு மாணவர்கள் ஒரு பிரிவு உபசார விழா நடத்தினார்கள். பழைய மாணவன் என்ற முறையில் நானும் பங்கு கொண்டேன். பிரிவுபசாரப் பத்திரத்தை அறுசீராசிரிய விருத்தத்தில் அமைத்துக் கவிராயரவர்களிடம் காட்டினேன். படித்தார்; அருகழைத்தார்; என் முதுகைத் தடவினார். "அடே! உனக்குக் கவிதை நன்றாக வருகிறதே. இதை விட்டு விடாதே. இயல்பாகவே வருகிறது. அதிக இலக்கணத்தை வைத்துக் குழப்பிக்கொள்ளாதே. தமிழ்ச் செய்யுள்களை அந்தந்தச் சீர் தெளிவாக ஒலிக்கும்படி உச்சரித்து வாய்விட்டுப் படிக்கப் பழகு. செய்யுள் தானே உருவாகும். தமிழன்னை உனக்கு அளித்துள்ள இப்பேற்றை உதாசீனம் செய்து விடாதே" என்று அறிவுரை பகர்ந்து ஆசி கூறினார். நான் வணங்கி விடைபெற்றேன். நானும் தமிழில் ஏதோ சில கவிகள் புனைந்துள்ளேன் என்றால் அவையெல்லாம் கவிராயரவர்கள் அன்றெனக்கு அளித்த அறிவுரைகளும், ஆசிகளும் எனக்கு அளித்த ஊக்கத்தின் பயனே. B. A. படிக்கும்போது தமிழைத் தனியே கற்கத் தொடங்கினேன். இலக்கியங்களில் பலவற்றை ஓரளவு கற்றேன். ஐயமெழுந்த விடங்களைக் கவிராயர் அவர்கள் தெளிவுபடுத்தி உதவி வந்தார்கள். கம்பராமாயணம் முழுவதையும் ஒரு முறை படித்து முடித்தேன். நான் அப்போது கவிராயர் அவர்களிடம் பெற்ற பயிற்சி பெங்களூர் Central College-ல் ஒரு தமிழாசிரியர் சுமார் 8 மாத காலம் விடுமுறை பெற்ற காலத்தில் அவர் பதவியில் பணியாற்ற உதவியது எனவே, கம்ப ராமாயணப் பயிற்சி மட்டுமல்ல, என் கவிதையாற்று முயற்சிகள் மட்டுமல்ல, என் தமிழறிவுக்

கும் அதில் எனக்குள்ள ஆர்வத்திற்கும் வித்து இட்டு, நான் என் காலிலேயே நிற்குமளவிற்கு என்னைப் பேணி வளர்த்த பெருமை கவிராயர் அவர்கட்கே உரியது. அவர்களை அடிக்கடி என்னுள்ளே நினைத்து அஞ்சலி செய்து கொள்வேன். செய்துகொண்டும் வருகிறேன்.

1932-ல் சென்னை சட்டக் கல்லூரியில் சேர்ந்தேன். திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் சில காலம் தங்கியிருந்தேன். அப்போது காலஞ்சென்ற ரசிகமணி T. K. C. அவர்கள் சென்னையில் அறநிலைய போர்டில் மெம்பராக இருந்தார்கள். மைலாப்பூரில் ராமகிருஷ்ண மடத்திற்கு அருகில் வசித்து வந்தார்கள். அவர்கள் குமாரன் தீபன் என்ற தீர்த்தாரப்பன் எனக்கு இந்துக் கல்லூரியில் Badminton விளையாட்டு நண்பன். அம் முறையில் ரசிக மணி அவர்கள் அறிமுகமாயிருந்தார்கள். அவர்கள் வீட்டில் வாரந்தோறும் கம்ப ராமாயணச் சொற்பொழி வாற்றி வந்தார்கள். நான் அங்கு தவறாமல் செல்வதுண்டு. அப்போது எனக்கு ஸ்ரீ P. N. அப்புசாமி அய்யர் அவர்கள் அறிமுகமானார்கள். அறிமுகம் செய்யப்பட்ட அன்று முதல் இன்றுவரை அவர்கள் என்னை ஒரு தம்பிபோல் நடத்தி வருகிறார்கள். T. K. C. அவர்கள் என்னைத் தெரிந்துகொண்டார்கள். "அட, உனக்கு Badminton தான் தெரியும் என்று நினைத்தேன். தமிழும் தெரிகிறதே" என்று அவர்களுக்கே உரிய நகைச் சுவையோடு கூறி என் தமிழ்ப் பயிற்சி வரலாற்றைக் கேட்டு மகிழ்ந்து "வாரந்தோறும் தவறாமல் வா அதோடு நின்றுவிடாதே உனக்கு எப்போதெல்லாம் வரத் தோன்றுகிறதோ அப்பொழுதெல்லாம் வா! என அன்புத் ததும்பக் கூறினார்கள். அவர்கள் கொடுத்த அந்த அநுமதியை நான் போற்றி மிகவும் பயனடைந்தேன் கவிதையை எப்படி ரசிக்க வேண்டும் என்பதை அவர்களிடம்தான் காணமுடியும் பாடலின் சூழ்நிலையை விளக்கி, அதில் ஒவ்வொரு பதத்திலும் பொதிந்துள்ள ஆழ்பொருளை அலசி ஆய்ந்து கேட்டார்ப்பிணிக்கும் தகையவாய் பழகுதமிழில் அமுதாகப் பொழியும் ஆற்றல் அவர்களுக்கே உரியது. அவர்கள் பின்னால் திருநெல்வேலி வண்ணார் பேட்டையில் அவர்களது வீட்டின் நடுவேயுள்ள வட்டத் தொட்டி முற்றத்தில் கம்பராமாயணத்தை அடியிலிருந்து முறையாகக் கூறிவந்ததைக் கேட்ட மாணவர்களுள் நானும் ஒருவன்.

கம்பனை ரசிக்கும் முறையை எனக்குக் காட்டியவர்கள் ரசிகமணி திரு T.K.C. அவர்களே. அக்காலத்திலேயே வையாபுரிப்பிள்ளை அவர்களின் நட்பு எனக்குக் கிட்டியது ஆழ்வார் திருநகரி பெரியன் வே. நா. ஸ்ரீனிவாஸையங்காரவர்கள் அப்போது தம் குடும்பத்தில் வெகு காலமாக அவரது முன்னோரால் சேமித்து வைக்கப் பெற்றிருந்த கம்ப ராமாயண ஏட்டுப்பிரதியின்படி கம்பராமாயணத்தைப் பதிப்பிக்க முயன்றுவந்தார்கள். அவர்களை நான் முன்னமேயே அறிவேன். பிரதியைப் பரிசோதித்துப் பதிப்பித்தவர்கள் பேராசிரியர் திரு. வையாபுரிப் பிள்ளையவர்களும், திரு. மு. இராகவையங்கார் அவர்களுமாவர். இருவருடைய தொடர்பும் எனக்குக்கிட்டியது. தவிர காலஞ்சென்ற எனது தம்பி N. K. ஸ்ரீனிவாசன் திரு வையாபுரிப் பிள்ளையவர்கள் தமிழ் நூல்கள் பதிப்பதில் உதவியாயிருந்ததால் வையாபுரிப் பிள்ளையுடன் ஏற்பட்ட பரிசயம் நட்பாக மாறியது. அவர்கள் இறைவனடிசேரும் வரையிலும், அவர்கள் திருநெல்வேலிவரும் காலங்களிலும் நாங்கள் கூடிக் கம்ப ராமாயண ஆராய்ச்சியில் ஈடுபடுவோம் பாடபேதங்களைத் தேர்வது எப்படி என்று எனக்கு வழிகாட்டிய ஆசான் அவரே. மிகைப் பாடல்களைக் கண்டுகொள்ளும் வழியையும் அவரே காட்டினார். நல்ல பண்பாளர். இன்சொல்லே சொல்லும் இயல்பினர். தான் கொண்டுள்ள முடிவில் பிறர் ஏதேனும் குறைகண்டு ஏதுவோடு கூறினால் தயக்கமின்றி ஏற்றுக்கொள்ளும் பண்பினர். அடக்கமே உருவானவர். ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது.

நண்பர் A. N மகரபூஷணத்தின் வீடு. பிள்ளையவர்களும், நானும், பிள்ளையவர்கள் "பக்ஷிராஜன்! சூர்ப்பனகைப் படலத்

தைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அதில் "உயரும் விண்ணிடை" என்ற பாடலின் மூன்ருமடியில் "பெயரும் பெண் பிறந்தேன் பட்ட பிழை என வருந்தும்" என வருகிறதே அது அவ்வளவாக நன்ரு யில்லை; பாடலே செருகாயிருக்குமோ என்று நினைக்கிறேன்" என்ருர் நான் அதில் உங்களுக்கு எது உதைக்கிறது? என வினவினேன். அந்தப் "பெண் பிறந்தேன்" என்ற பதந்தான். இது கம்பன் கூறியிருப்பாஞ என ஐயுறுகின்றேன். இது பற்றி ஒரு கட்டுரையே எழுதிவைத்திருக்கிறேன் என்ருர்கள். நான் அப்பதம் தவிர வேறு இடர்ப்பாடில்லையே என வினவினேன் இல்லை என்ருர். நான் அப்படலத்திலேயே "பண்புற நெடிது நோக்கி" என்ற பாட்டைப் பாருங்கள் என்றேன். பக்கங்களை முன் திருப்பினர் பாடலைப் பார்த்தார் சற்று நேரம் மௌனமாக சிந்தனையில் ஆழ்ந்தார் என்ன நீங்கள் சொன்ன முடிவை வைத்து இந்தப் பாடலையும் தள்ளவேண்டியதுதானே என்றேன். திடுமென விழித்தார் 'பக்ஷிராஜன்! என்னை ஒரு பெரிய தவறினின்றும் தப்ப உதவினீர்கள் நன்றி' என்று குரல் தழையக் கூறினர் பின்னும் அப்பதம் இன்னும் என்னை மயங்கவைக்கிறது என்ருர். நான் கூறினேன். இதில் ஒன்றுமில்லை வழக்குச் சொல்தான் "வல்வினையேன் பெண் பிறந்தேன்" என்றும் "பெண்பிறந்தார் எய்தும் பெருந்துயர்" என்றும் நம்மாழ்வார் கூறியுள்ளார் என்றேன் பிள்ளையவர்கள் என் கட்டுரையை வெளியிடு முன் தடுத்தீர்களே; நல்ல வேளை என்று கூறித் தன் முடிவை மாற்றிக் கொண்டார்கள். என் போன்றவர் கூற்றையும் எத்துணைப் பண்போடு ஏற்றுத் தன் முடிந்த முடிவையும் மாற்றிக்கொள்ளும் அவர்களது நேர்மைக்காகவே இது கூறினேன்.

கம்ப ராமாயணக் கவிதை கட்டுக்கோப்பையும் அதன் பாகங்களையும், அதன் சிகரங்களையும் அவை அமைந்த அழகையும் அவற்றைக் கம்பன் எப்படி அழகுறச் சமைத்துள்ளான் என்பதையும், அப்படிச் சமைக்குங்கால் கம்பன் கையாளும் லாகவத்தையும், கம்பன் கவிதை நயங்களை உணர்ச்சியோடு கேட்பார் உள்ளம் கிளர்ந்தெழும் வகையில் பேசும் வழியையும் எனக்குத் தெளிவுறக் காட்டியவரும், இன்றும் காட்டி வருபவரும் முதுபெரும் புலவரும் தமிழ் மூதறிஞருமான திரு. பி. ஸ்ரீ அவர்களுக்கு நான் சிறு வயதிலிருந்தே கடமைப்பட்டுள்ளேன். நான் இன்டர்மீடியேட் மாணவஞயிருந்த காலத்தில் அவர்கள் நெல்லைக் கூடல் வரதராஜப் பெருமாள் கோவில் மேல ரத வீதியில் குடியிருந்தார்கள். அவர்கள் வீட்டு மாடியில் நான் சில காலம் தங்கி இருந்தேன். அப்போதே அவர்கள் தொடர்பு ஏற்பட்டு அவர்களது இல்லத்தில் ஒருவஞகவே பழகி வந்தேன். மகன்போல் பழகிவந்த பழக்கம் பின்னர் முதிர்ந்து என்னை அவர்கள் மூன்ருவது தம்பியாக மதித்துப் பழகி வருகிருர்கள். இராமாயணத்துக்கும் கம்பனுக்கும் அவர்கள் செய்துள்ள அருந் தொண்டைத் தமிழறிந்தவர் எவரும் மறக்கமாட்டார்கள், மறக்கவும் முடியாது. அவர்களது "கம்ப சித்திரம்" "சித்திர ராமாயணம்" என்ற இரு நூல்களும் கம்பன் கவிதையில் உள்ள நுணுக்கமான அழகையும் கூடத் தமிழ் நாட்டுக்குச் சொல்லோவியங்களாகப் படைத்துத் தந்துள்ளன கம்பன் கவிதைகளின் பூரண சௌந்தரியத்தையும் எனக்கு விளக்கியவர்களும் அவர்களே நான் எக்கட்டுரை எழுதினலும் அனேகமாக அவர்களிடமும், அவர்களது தம்பிமாரும் எனது தமையன்மாரும், பேரறிஞருமான திரு. அனந்தராமையங்கார் அவர்கள், திரு. அ. நா. மகரபூஷணம் இவர்களிடம் காட்டி அவர்கள் அனுமதி பெற்றே செய்துவருகிறேன். இன்று கம்ப ராமாயணத்தில் ஓரளவு கற்றவன் என்று கம்பராமாயண ரசிகர்கள் கூறினல் அதன் பெருமை முழுவதும் என் தமையன்மார் மூவரையுமே சாரும்.

பி-ஸ்ரீ மற்றைய மூன்று தம்பிகட்கும் ஆசிரியர் இவர்களுள் மகரபூஷணம் கடுமையான விமர்சகர். அநேகவிடங்களில் என் கற்பனைகள் தலைவிரித்து ஓடும்பொழுதெல்லாம் உரிமையோடு என்னை அடக்கித் திருத்தி வழிப்படுத்திய பெருமை மகர

பூஷணத்துக்கே உண்டு. இன்று 93 வயதாகும் பி. ஸ்ரீ அவர்கள் விட்டலபுரத்தில் தங்கி, ஆனால் அடிக்கடி நெல்லைக்கூடலில் தம்பி மகரபூஷணம் இல்லத்திற்கு விஜயம் செய்யும்போதெல்லாம் கம்ப ராமாயணத்தில் ஏதேனும் ஒரு பகுதிக்கு வகுப்பு நடத்தி எங்களைப் பயிற்றுவித்து வருகிறார்கள். அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து என்போன்றவர்களைக் கம்பனை நன்கறியப் பயிற்ற இறைவன் அருள வேண்டுமென்பதே அடிக்கடி நான் செய்துகொள்ளும் பிரார்த்தனை.

கம்ப ராமாயணத்தில் துணிவுடன் பேச எனக்கு வழிகாட்டியவர் மகா வித்துவான் ஸ்ரீ ரா. ராகவையங்கார் அவர்கள். அவர்கள் பேச்சை முதல் முதல் இந்துக் கல்லூரியில் நடந்த கம்பன் விழாவில் கேட்டேன். "உன் குலம் உன்னதாக்கி" என்ற இடத்தை ஒரு ஆங்கிலம் கற்றவனுக்கு தாம் நெப்போலியன் சரிதையிலிருந்து ஒரு நிகழ்ச்சியைச் சுட்டி விளக்கிய முறை அவர்கள் அழகொழுகு தமிழில் கூறியவை இன்றும் என் மனத்தில் பசுமையாயிருக்கின்றது. அப்பால் நான் சட்டக் கல்லூரி மாணவனாக இருக்கையில் அவர்கள் சென்னைப் பல்கலைக் கழக மண்டபத்தில் ஐந்தாறு நாளாகத் தமிழ்ப் பண்பாடுபற்றி விரிவுரை நிகழ்த்தினார்கள். ஸ்ரீ P. N. அப்புசாமி ஐயரவர்கள் என்னையும் பொருட்படுத்தி ஐயங்கார் உரைக்குக் குறிப்பெடுக்க நியமித்திருந்தார்கள். குறிப்பெடுத்த பின் திருவல்லிக்கேணியில் மு. ராகவையங்கார் அவர்கள் இல்லத்தில் தங்கியிருந்த ரா. ரா. அவர்களிடம் சென்று குறிப்பைக் காட்டி நான் விட்டிருந்த இடங்களை அவர்களைக்கேட்டு நிரப்பும் பணியில் ஈடுபட்ட காலை அவர்களது தொடர்பு ஏற்பட்டது. சில விஷயங்களை அவர்கள் துணிச்சலாகக் கூறியவைபற்றி நான் மெல்ல வினவினேன். அவர்கள் கூறினார்கள். "கேளடா பக்ஷீ! பேசும்போது பேசும் விஷயத்தில் சிலவிடங்களில் உனக்கு ஏதேனும் புதிதாகக் கருத்துக்கள் தோன்றக்கூடும் எவ்வாறு இதனை வெளியிடுவது என்று தயங்காதே உன் கருத்தை உன்னுள்ளே தெளிவாக்கிக் கேட்போர்க்குப் புரியும் விதமாக, உன் கருத்துக்குப் பக்கபலமாக அந்த நூலிலிருந்தும், அவ்வாசிரியரின் பிற நூல்களிலிருந்தும், மற்றைய இலக்கியங்களினின்றும் மேற்கோளோடு ஆதாரம் காட்டி உன் கருத்தை நிலைநாட்டு. அது அக்கூட்டத்தில் அனேகமாக ஒப்புக்கொள்ளப் பட்டே தீரும் உன் மேற்கோள்கள் உன் கருத்துக்கு அண்டை பலமாக நிற்கும். ஆனால் உன் ஆராய்ச்சிக் கோவையில் எங்கேனும் சில தவறும் உன்னையறியாது உண்டாகலாம். அதனால் உன் முடிவான கருத்தை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியாதும் போகலாம். இப்படி ஆகிவிட்டால் என்று தயங்கக் கூடாது. உன் கருத்தை அறைந்து கூறி நிலைநாட்டு. ஆனால் பின்னால் உன்னைவிட ஆய்வில் சிறந்தவன் ஒருவன் "தம்பீ! நீ இங்கு ஒரு பிழை செய்தாய் இங்கு இப்படி உளது. இதைக்கொண்டு பார்த்தால் உன் முடிவு சரியாகாதல்லவா என்று காட்டினால் உன்னைத் திருத்தியதற்கு அவன்பால் நன்றி செலுத்தி உன் முடிவை மாற்றிக்கொள் ளத்தக்க பணிவும் அடக்கமும் வேண்டும். அப்படிக் காட்டப்பெறாத வரை உன் முடிவே நிலைக்கும்" என்று அறிவுரை கூறினார்கள். அது என் உரையாற்று வரலாற்றில் எனக்கு எவ்வளவோ உதவியுள்ளது. எனவே என் மேடைப் பேச்சுக்கு வழி காட்டிய பெருமகன் ரா. ராகவையங்கார் அவர்களே.

முன்னே திரு. வையாபுரிப்பிள்ளையும், மு ராகவையங்காரும் பெரியன் வே. நா. ஸ்ரீனிவாச ஐயங்காரது ஆழ்வார் திருநகரிப் பிரதிகளின்படி பாலகாண்டத்தைப் பதிப்பித்ததைக் குறிப்பிட்டேன். அதன்பின் அப்பிரதியின் அயோத்தியா காண்டத்தை என்னையும் திரு. மகரபூஷணம் அவர்களையும் கொண்டு பரிசோதிக்கச் செய்து பெரியன் அவர்கள் அச்சிட்டார்கள். அப்பால் ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம் யுத்த காண்டம், இவையனைத்தையும் என்னைக்கொண்டே பரிசோதித்து அச்சிட்டு வெளியிட்டார்கள். சுந்தர காண்டம் மட்டும் வேறொரு தமிழறிஞர் (பெயர் நினைவில்லை) பரிசோதித்து அச்சி

டப் பெற்றது. இம் முயற்சியில் கம்பன் பாடல்களை பன்முறை பயில எனக்கு வாய்ப்பு ஏற்பட்டது.

இவர்கள் எனது பரமாசாரியர்கள். இவர்கள் தவிர திரு. ரா. பி. சேதுப்பிள்ளை, கம்பனடிப்பொடி, பாஸ்கரத் தொண்டைமான், திரு. மகராஜன், திரு. கோபால கிருஷ்ணையர், திரு. மு. மு. இஸ்மாயில், கோதண்டராமக் கவுண்டர், நயினர் முகமது, செய்குத்தம்பிப் பாவலர், பெரியன் ஸ்ரீனிவாஸையங்கார் இவர்கள் போன்ற பலர் அவர்கள் உரையாற்றல், அளவளாவல், எழுத்து முலமாகக் கம்பராமாயணத்தை நான் பல கோணங்களில் கற்க உதவிய ஆசிரியர்களே: என் நினைவில் வந்தவர்களைக் குறித்துள்ளேன். வராதவர் பலர் இருக்கலாம். அவர்களை நான் உதாசீனம் செய்துவிட்டதாக அவர்கள் நினைத்துவிடாமல் என்னை மன்னித்துவிடுமாறு பணிவுடன் அவர்களை வேண்டிக் கொள்கிறேன்.

# நான் ஒரு கம்பன் அடிமை

கம்பன் அடிப்பொடி

எங்கள் குடும்பத்தில், என் தந்தை யார் காலத்தில் புரட்டாசி மாதந் தோறும் கம்பராமாயணம் படித்தல் வழக்கம். பக்கத்தில் உள்ளவர்கள் பலரும் கதைகேட்க வருவார்கள். பட்டக சாலையில் உள்ள மாடத்தில் இராமர் பட்டாபிஷேகப் படம் கொலுவிருக்கும். அதற்குப் பலவகை அலங்காரங்கள் செய்யப்பட்டிருக்கும் அதன் எதிரில் மரத்தாலான சிக்குப்பல கையில் கம்பராமாயண வசனப் புத்தகம் மஞ்சள்-குங்குமம்-மாலை சார்த்தப்பெற்று மங்கலமாக அமர்ந்திருக்கும். இராமர் படத்திற்கு வழிபாடு நடந்து தீபாராதனை காட்டப்பெறும்; அதன் பிறகு கம்பராமா யணப் புத்தகத்திற்கும் அப்படியே நடை பெறும்.

எல்லாம் ஆன பின் என் தந்தையார் அல்லது என் சிறிய தந்தையார் இறை வணக்கம், பல சுருதி முதலிய பாடல் களைப் படித்தபின், இராம கதையை முதல் நாள் விட்ட இடத்திலிருந்து படிப்பார்கள். இருவருக்கும் இயலாத வேளைகளில் என் னைப் படிக்கச் சொல்வார்கள்.

கம்பன் கவிகளில் சில ஆங்காங்கே காணப்படினும், கதை முழுவதும் வசன மாகவே இருக்கும். பெரியவர்கள் படிக்கக் கேட்கும் பொழுதும், நானே படிக்கும் பொழுதும் பலவித ஐயப்பாடுகளும், குழப்பங்களும் ஏற்படும். அவற்றையெல் லாம் பெரியவர்களிடம் கேட்பதற்கு அச்சம் முறையாக ஆசிரியரை அடுத்து, இலக்கிய இலக்கணப் பாடம் கேட்காத குறை வேறு. இளமைத் துடிப்பும் எதையும் கிண்டல் செய்யும் இயல்பும் சேர்ந்து கொண்டிருந்த காலம். ஆனாலும் தமிழ்ப் படிக்கவேண்டும் என்ற ஆர்வத்தை எந்தைபிரான் கம்பன் எப்படியோ தூண்டிவிட்டு விட்டான்.

என் பனிரண்டாம் ஆண்டில் எங்கள் குடும்ப ஆதரவு பெற்று வாழ்ந்த பண்டிதர் சு. சிதம்பரம் ஐயரவர்களிடம் தமிழ்ப் பாடம் கேட்கத்தொடங்கினேன். ஆறுமுக நாவலர் பால பாடங்கள், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, இலக்கணச் சுருக்கம் முதலியவற்றைப் பாடங் கேட்டேன். பதினாலாவது ஆண் டில் தந்தையாருடன் பர்மாவுக்குப் புறப் பட்டுவிட்டேன்.

பர்மாவில் இரங்கூனில் மூன்றாண் டுகள் வசித்தேன். அப்பொழுது சில தோழர்களின் உதவியுடன் "தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கம்" என்ற பெயரு டன் ஒரு சங்கத்தைத் தொடங்கினேன். அதில் ஞாயிறுதோறும் ஏதாவது சொற் பொழிவு நடைபெற ஏற்பாடு செய்தேன், பெரியவர் ஒருவரைத் தலைமைப் பேச்சுக் கும் மற்றப்படி நாங்கள் இரண்டு மூன்று பேச்சுக்கும் தயார் செய்வோம். கட்டுரைக் கோவை அல்லது ஆனந்தபோதினி போன்ற பத்திரிகைகளில் காணப்பெறும் சிறு கட்டுரைகளை மனப்பாடம் செய்து அதைச் சொற்பொழிவாகச் செய்துவந் தோம் ஓராண்டுக்குப் பிறகு நாமே ஏன் நூல்களைப் படித்துக் குறிப்பெடுத்துக்

கொண்டு பேசலாகாது என எண்ணி னேன். நூல்கள் வேண்டுமே அதற்கு வழி?

இரங்கூனில் 'நவீன கதா புத்தகசாலே' என்ற பெயரில் ஒரு நல்ல புத்தகக் கடை இருந்தது. தேச பக்தி மிக்க, காந்தியடியா ரான, வலங்கிமான் இஸ்லாமியர் ஒருவர் அதை நடத்திவந்தார். அங்கு நல்ல தமிழ் நூல்கள் கிடைக்கும். அவரிடம் எனக்கு வேண்டிய புத்தகங்களை யெல்லாம் தவணை முறையில் வாங்கிச் சேர்த்தேன். அந்நாளில் நல்ல புத்தகங்களே வெளிவந் தன; விலையும் மலிவு. எனவே மூன்றாண்டு களில் சுமார் 800 புத்தகங்கள் சேர்ந்தன. இவ்வளவுக்கும் பணம் வேண்டுமே?

எனக்கு காலே மாலேப்பலகாரம் காபிக் காக நாள் ஒன்றுக்கு ரூபாய் ஒன்று தரு வார்கள் காலே மாலேப் பலகாரங்களைத் துறந்து அந்த ரூபாய்க்குப் புத்தகங்களே வாங்கினேன். அப்படி வாங்கிய நூல்களை நானுகவே முயன்று கற்றேன்.

என் இளமைக் காலத்தில் காரைக்குடி யில் ஒரு சிறந்த கம்பன் அறிஞர் இருந் தார். அவர் தனவைசிய ஊழியன் பத்தி ரிகையில் உதவி ஆசிரியராகப் பணி யாற்றி வந்தார். நல்ல தமிழ்ப் புலமையு டையவர். ஆஜானுபாகுவான உடம்பு, நீண்ட முகம்; பரந்துயர்ந்த நெற்றியில் பட்டை நாமம் பளிச்சிடும். மிக்க ஆசார சீலர். கம்பனை நன்கு தோய்ந்து கற்று ஆய்ந்து அருமையாக உரையாற்றுவார். அக்காலத்துக் கம்பராமாயணப் பிரசங்கி களில் தலையானவர் அவர் என்பது என் கருத்து. "கம்ப நாடர்" என்றொரு மாத இதழும் வெளியிட்டு வந்தார். அதில் கம் பனைப்பற்றிய கட்டுரைகளும், ஆராய்ச்சி களும் அவரே எழுதி வெளியிட்டு வந்தார். வான்மீகத்துடன் ஒப்பிட்டுக் கம்பனின் மேம்பாட்டினை மனமாரப் பாராட்டுவார். அவர்தான் எனக்குக் கம்பனை இனம் காட் டியவர் என்பேன். அவருடைய நேர் மைக்கு ஓர் எடுத்துக் காட்டு: ஏதோ ஒரு கட்டத்தை வான்மீகத்துடன் ஒப்பிட்டுக் கம்பனின் மேன்மையை உயர்த்திப் பாராட்டினர் அப்பொழுது அச்சபையி லிருந்த வடமொழி வல்ல அந்தணர் ஒருவர் எழுந்து,

"கம்பனை வான்மீகியினும் உயர்ந்தவர் என்று ஒரு பிராமணர் கூறலாமா?" என்று ஒருவகை ஆவேசத்துடன் கேட்டார் அதற்கு மோ. வே. கோ. விடுத்த பதில் என்னைப் பெரிதும் ஆட்கொண்டு விட்டது.

"கம்பனின் உண்மையான உயர் வைக் கூற என் பிராமண நிலே தடையாக இருப்பின், ஸ்வாமி! என் பூணூலை இப் பொழுதே அறுத்தெறிந்து விடுகிறேன்" என்பதுதான் அவர் கூறிய பதில்.

அதன் பிறகு வ. வெ. சு. ஐயர் பல மொழி கற்றவர்; சிறந்த தேச பக்தர்; திற னாய்வுத் துறையின் முன்னோடி; கம்பனை உலகறியச் செய்த உத்தமர். அவர் காரைக்குடிக்குப் பலமுறை வந்துள்ளார். அப்பொழுதெல்லாம் கம்பன் பெருமையை எப்படி யெல்லாமோ கூறி என்னை ஆட்கொண்டவர்.

"கம்பன் காப்பியத்திற்கு வான்மீகம் தான் மூலம்; ஆனால் கம்பன் வான்மீ கத்தை மொழிபெயர்க்கவில்லை. முனிவன் படைத்த இறவாக் கதையை மட்டுமே அவன் எடுத்துக் கொண்டான். ஆனல் அந்தக் கதைப்போக்கை மிக நுட்பமாகப் பின்பற்றிக் கொண்டான். என்றாலும் கம்பராமாயணம் முற்றிலும் ஒரு மூலக் காப்பியமே. ஆம்; அது வான்மீகியின் ராமாயணம் அல்ல; ஆனல் அஃதொரு மகோன்னதமான கவிதை;

'கம்பனுடைய சந்நிதானத்திலே உலக மகா கவிகளான மில்டன், போப், ஷேக்ஸ்பியர், தாந்தே, விர்ஜில், ஹோமர், பைரன், ஷெல்லி முதலியவர்கள் மட்டு மின்றி ஆதி கவியான வான்மீகியும் முடி சாய்த்து அடிவணங்கி நிற்கவேண்டிய வர்களே!"

என்றெல்லாம் அளந்து கணித்து அறு தியிட்டு வ. வெ. சு ஐயர் கூறும்பொழுது

தான் கம்பன் வான்முட்டும் பெரும் புகழை அடியனுல் அறிய முடிந்தது.

அதன் பிறகு திருவாளர் பி. ஸ்ரீ. 'குமரன்' பத்திரிகையின் துணை ஆசிரிய ராய் வந்து காரைக்குடியில் பல ஆண்டு கள் வசித்துவந்தார். அக்காலத்தில் அவர் பெரும்பாலும் எங்கள் குழுவிலேயே இருந்துவந்தார். பேச்செல்லாம் தமிழ்; நாடு; இலக்கியம்; காந்தி! இப்படியே போய்க் கொண்டிருக்கும். கவிதைகளை, சிறப்பாகக் கம்பன் கவிதைகளை உள்ளம் கொள்ளுமாறு எடுத்துரைப்பார். சுவையா கவும், நகைமுகத்துடனும் உரையாடல் நடைபெறும். குமரனில் கம்பன் கட்டுரை வாரம் தவருமல் வரும். பி. ஸ்ரீ யின் கை யெழுத்து நன்ருக இருக்காது. அதனுல் அவர் சொல்லப் பிறர் எழுதுவது பெரும் பாலான வழக்கம். அப்படி நான் எழுதிய நிலையும் உண்டு. அதனுல் கம்பன் கருத் தாழம் எனக்குப் புலப்படலாயிற்று.

அந்நாளில் பி. ஸ்ரீ யிடம் பேசிக் கொண்டிருந்த காலங்களில் "திருநெல்வே லியில் டி. கே. சி என்ருெரு பெரியவர் இருக்கிருர். கவிதை நயத்தைச் சுண்டிப் பார்த்து அதன் அருமைப்பாடுகளை விளக் கிக்காட்டி, கேட்போர் உள்ளத்தில் ரசனை ஊட்டுவதில் அவர் ஒரு ரசவாதி" என்று அடிக்கடி கூறுவார். அதன் பயனுக எனக்கு டி. கே. சி. யிடம் காணுமலே காதல் அரும்பிற்று.

இந்த நிலையில் மீண்டும் பர்மா சென் றேன். இப்பொழுது இரங்கூனுக்கடுத்த தோங்குவா என்ற ஊரில் வாழ்ந்து வந் தேன். எங்கள் வீட்டுக்கு அடுத்த வீட் டில் சிவகங்கையைச் சேர்ந்த சேதுப் பிள்ளை என்பவர் ஒரு செட்டியார் கடை மேலவராக இருந்துவந்தார். அவர் ஒரு பெரும் புலவர் என்பதைப் பின்னர்தான் அறிந்தேன். அவரிடம் ஏதாவது பாடம் கேட்கலாமே என்று எண்ணி அவரை அணுகினேன். மிக்க அன்புடன் இசைந் தார்கள். தினமும் காலை பாடம் கேட்ப தென்று ஏற்பாடாயிற்று எடுத்த எடுப்பி லேயே நூலைத் தொடங்கிவிட்டார். ஆம், பாடம் கேட்க நான் கொண்டுசென்ற நூல் கம்பராமாயணம். "'தருகை நீண்ட" "அஞ்சிலே ஒன்று பெற்ருன்' என்பன கம்பன் பாடலாகா; "உலகம் யாவையு" மே அவன் பாடிய முழுமுதல் வணக்கம் என்ருர். இப்படியொரு பட்டிக் காட்டுக் கர்நாடக உருவத்துக்குள் எப்படிப்பட்ட அறிவித் தெளிவு; திறனுய்வுச் செறிவெல் லாம் பதுங்கிக் கிடக்கின்றன என்று வியந்து நின்றேன்.

சுமார் ஏழெட்டு மாதங்களே அப் பெருமான் அடிக்கீழ் இருந்து பாடம் கேட்டேன். என்ன அறிவு; அப்பப்பா! துணைநூல் அல்லது விளக்க நூல் ஏது மின்றி இலக்கணச் சூத்திரங்கள் உள்பட எல்லாவற்றையும் மனப் பெட்டகத்தில் அடுக்கிவைத்துக் காத்துவந்திருக்கிருர்.

தொல்காப்பியம்; நன்னூல், யாப்ப ருங்கலம், வீரசோழியம் போன்ற நூல்கள் மட்டுமின்றி உரையாசிரியர்கள் காட்டும் மேற்கோள் சூத்திரங்களையுமன்ருே மனத் தகத்து அடக்கி வைத்துக் கொண்டிருக் கிருர் என்று பல முறை வியந்து மலைத்து நின்றிருக்கிறேன். அந்த சில மாதங்கள் என் வாழ்வுக்கு வழிகாட்டித் தொண்டுக் குக் கைகொடுத்த காலம் என்று என்றென் றும் அவரை வழிபட்டுக் கொண்டிருக் கிறேன்.

அவர் என்னைவிட்டுப் பிரிந்து தாய் நாடு திரும்பியபின் சுமார் மூன்ருண்டு கழித்து யானும் தாய்நாடு வந்து அவரைச் சில முறை தரிசித்தேன். கம்பன் திருநாள் தொடங்குவதற்கு முன்னமேயே அவர் அமரராகிவிட்டார்.

தாய் நாடு திரும்பியதும் அரசியல் பணியில் முழுமுச்சாக ஈடுபட்டுவிட் டேன் அரசியல் மேடைகளிலும் கம்ப னைப்பற்றிப் பேசுவது இயல்பாகிவிட்டது. 1938 இறுதியில் ரசிகமணி டி. கே. சி. அவர்களைச் சந்திக்கும் பேறு கிட்டிற்று. கம்பன் திருநாளைக்காரைக்குடியில் நடத்த ஏற்பாடுகள் செய்தேன். அப்பொழுது கம்பன் திருநாளுக்கு மிகச் சிலரே ஒத்து

ழைப்பு நல்கினர். அவர்களுள் திரு. சொ. முருகப்பா, அரு. சோமசுந்தரம், VR. M. செட்டியார், நீலாவதி–ராமசுப்பிரமணியம் தம்பதிகள் ஆகியோரே ஒத்துழைப்பு நல்கினர்கள். ரசிகமணி டி. கே. சி. அவர்களே நான்கு நாளும் தலைமை தாங்கினர்கள். சொ. முருகப்பா, அரு. சோமசுந்தரம், VR. M. செட்டியார், நீலாவதி அம்மையார், M. S. பூர்ணலிங்கம் பிள்ளை, ப. ராமசாமி முதலியோருடன் யானும் பேசினேன். இப்படியாக முதல் ஆண்டுக் கம்பன் திருநாள் 1939-ல் நிகழ்ந்தது.

அதன் காரணமாக திரு. டி. கே. சி. அவர்களின் தொடர்பு செட்டிமார் நாட்டிற்கே வலுவாக ஏற்பட்டது. காரைக்குடிக்கு அடிக்கடி வரத் தொடங்கினர்கள். பல சொற்பொழிவுகளை நடத்தினர்கள். வகுப்புகளும் நடத்தினர்கள். கம்பன் பித்தும், கவிதை வெறியும் பெருகத் தொடங்கின. கம்பனுக்குள்ள பெருமைகளை என்னைப் போன்றே ஏராளமானவர்கள் அறியச் செய்த தனிப்பெருமை ரசிகமணி டி. கே. சி. அவர்கட்கே உண்டு.

“காரைக்குடியில் கம்பன் பணி தொடங்கி விட்டது. இனி அது உலகெங்கும் பரவிவிடும்” என்று மனமாரப் பாராட்டி அவர்கள் கூறிய ஆசியும் வாழ்த்துமே கம்பன் கழகத்துக்கு நீரும், உரமுமாய் அமைந்து வளர்த்து வருகிறது. சான்றோர் வாக்குப் பொய்க்காதன்றே?

இங்ஙனம் வளர்ந்த எளியேனின் கம்பன் பக்தி ஆராய்ச்சிப் பேரறிஞர், பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளை அவர்களால் மேலும் வளம் பெற்றது. அவர்களுடன் கம்பன் பதிப்புப் பற்றிச் செய்த சர்ச்சைகள் எல்லாம் நல்ல பாடங்களைத் தேர்ந்தெடுக்கவும், கம்பனின் பல்துறைப் புலமைகளை யெல்லாம் அறியவும் எனக்குச் சுடர்விளக்காய் நின்று உதவுகின்றன.

கம்பனுக்கு ஒரு நல்ல பதிப்பு மலிவு விலையில் கிடைக்கச்செய்யப் பெருமுயற்சி செய்தவர் மர்ரே கம்பெனி அதிபர் திரு எஸ். ராஜம். பாடாந்தரம் கண்டு நல்ல பாடம் தேர்ந்தெடுப்பது உள்படப் பதிப்பு வேலையில் என்னை ஆட்படுத்தியவர் அவரே! கல்விக் கடல் இராமராசன் முதலான நல்ல புலவர்கள் பலருடைய துணையுடன் அப்பணியில் ஈடுபட்டேன். எண்ணற்ற ஏட்டுச் சுவடிகளும் அச்சுப் பிரதிகளும் ஒப்புநோக்கப்பட்டன ஏற்கனவே எடுத்த பாடக் குறிப்புகளையும், புதிதாக நாங்கள் எடுத்த பாடக் குறிப்புகளையும் ஒப்பிட்டுப் பார்த்தோம். பல்வேறு காரணங்களைக்கொண்டு சரியான பாடத்தை ஒருவாறுக நிர்ணயித்தோம். பொருத்தமில்லாத பாடல்களை பிராக்கட்டுள் அடக்கியோ அன்றிப் பிற்சேர்க்கையிலோ வெளியிட்டோம். இப்படிப் பணியாற்ற அடியேற்குக் கிடைத்த வாய்ப்பு ஒரு பெரும் பேருகும். அதனுற் கிட்டிய அனுபவமும் தெளிவும் எழுதிக்காட்ட முடியாத ஒன்ருகும் எந்தைபிரான் கம்பன் அருள்தான் என்னை எப்படியெல்லாமோ ஈடுபடுத்தி என் பணிக்கு ஆக்கம் அளித்து வருகிறது

இங்ஙனம் பல பெரும் அறிஞர்களின் கூட்டுறவும், கம்பன் அடியார்களின் அன்பும் ஏழையேனைக் கம்பன் அடிப்பொடி ஆக்கின. இவர்களிட்ட பிச்சையாலேயே கம்பனின் மேதா விலாசத்தையும் கவிதாசன்னதத்தையும், படைப்பாற்றலையும், பல்துறைப் பலமொழிப் புலமையையும் அடியேனும் கூடக் கண்டு மகிழ முடிகின்றது. இப்பொழுதெல்லாம் எளியேன் கம்பனை அணுகும்போது அவன் பெருமைக்கு முன் என் சிறுமையும் தோன்றுவதால் ஒருவித பயமே, பத்தியால் ஏற்பட்ட ஓர் அச்சமே (Reverential fear) என்னை ஆட்கொண்டு விடுகின்றது. எனவே இன்று நான் ஒரு கம்பன் அடிமை!

கம்பனெனும் கார்முகில்பெய்
கவிமழைநீர் திரண்டோடி
ஐம்புலனும் நிலம்திருத்தி
அன்பறமாம் பயிர்வளர்த்துத்
தம்பொருவில் ‘இராமாவ
தாரம்’ எனும் தனியாருய்ப்
பம்புதமிழ் எனும்கடலில்
பரந்துநலம் சுரந்திடுமால்!

# கம்பனை எனக்குக் காட்டியவர்கள்

நா. வரதராஜுலு நாயுடு

### என் தந்தையார் — பெரிய தந்தையார்

முதன் முதல் கம்பனை எனக்குக் காட்டியவர் என் தந்தையார்: பூளைமேடு மு. நாராயணசாமி நாயுடு அவர்கள்.

எனக்கு அப்போது 10 வயது இருக்கும். ஒரு நாள் என் தந்தையார் பழைய மரப்பெட்டியில் இருந்த கருப்பு காலிகோ பைண்ட் செய்யப்பட்டிருந்த புத்தகம் ஒன்றை என்னிடம் தந்து, 'படி' என்றார். பிரித்துப் பார்த்தேன். 'கம்ப ராமாயணம் உயுத்த காண்டம். துறையூர் உபாத்தியாயர் மு. கோவிந்த பிள்ளையவர்களால் பரிசோதிக்கப்பட்டு மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. ரக்தாக்ஷி ஸ்ரீ', என்று இருந்தது கிறிஸ்து சகாப்தத்தின்படி அந்த ஆண்டு 1864–65: நூல் என் கைக்கு வந்தபோதே அதற்கு 58 ஆண்டு வயது ஆகி இருந்தது.

மூலம் மட்டுமே இருந்தது. பொருள் சற்றும் விளங்கவில்லை. தந்தையார் சொன்னார்: 'பாட்டைப் பாடம் பண்ணிக் கொள்; பெரியவன் ஆனபிறகு பொருள் தெரிந்துகொள்ளலாம்'. அது அக்கால வழக்கம். ஒன்றுமே விளங்கா விட்டாலும், பல நூல்களை அவ்வாறு மனப்பாடம் செய்தது நாளடைவில் பயன் தந்தது வயதான பிறகு பொருள் விளங்கலாம்; ஆனால், பாடம் செய்யமுடியாது. மனப்பாடம் செய்த முதல் பாட்டு கருடன் வருகையைச் சொல்லும்

'இத்தன்மை யெய்துமளவின் கணின்றவிமையோர்
களஞ்சி யிதுபோ
யெத்தன்மை யெய்தி முடியுங்கொலென்று
குலைகின்ற வெல்லையிதன்வா
யத்தன்மை கண்டுபுடை நின்றவன்னல்
கலுழன்றனன்பின் மிகையால்
கித்தங்கலங்கியிதுதீர மெள்ளவிருளூடு
வந்துதெரிவான்'

(நாகபாசப் படலம் 243)

என்பது. சீர். சந்தி பிரிக்கவில்லை; நிறுத்தல் குறி, வினாக்குறி. வியப்புக்குறி போன்றன அறவே இல்லை. ஆனால், பாட்டைப் படிப்பவர்கள் ஒருவகைச் சந்தத்தில் பாதி படிப்பதும் பாதி பாடுவதுமாக அமையும்போது சீர். சந்தி, குறிகள் தானாக வந்து விழும். 'அசையாத சிந்தை அரவால் அனுங்க, (கருடன்) அழியாத உள்ளம் அழிவான்' என்னும்போது இரக்கக் குறிப்பும். 'எல்லைக் குயிர்ரி எரிகின்ற மோலி இடைநின்ற மேரு எனும் அத் தொல்லைப் பொருப்பின் மிசைபோ விளங்கு சுடரோனின் ஏம்மைச் சுடர' என்னும்போது பெருமிதமும், 'படிமேல் எழுந்து வருவான். விரைந்து பலகால் நினைந்து பணிவான்' என்னும்போது பக்தியும், ஒலியிலும் முகபாவத்திலும் தோன்றும்.

நான் பொருள் தெரிந்துகொள்ளும் முதிர்ச்சி பெறுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே, என் 13-வது வயதில் என் தந்தையார் காலமாகி விட்டார்.

என்னுடைய பெரிய தந்தையார் வித்வான் மு. வேணுகோபாலசாமி நாயுடு

அவர்கள் என்னுடைய இரண்டாம் ஆண்டிலேயே காலமாகிவிட்டார். அவர் அக்காலத்தில் பெரும் புலவராகவும் புரவலராகவும் மதிக்கப்பட்டார். சென்னை ப்ரஹ்மஸ்ரீ வை. மு. சடகோப ராமானுஜாசாரியார், திரிசிரபுரம் மஹா வித்வான் தியாகராஜ செட்டியார், துறையூர் கோவிந்த பிள்ளை, டாக்டர் உ. வே. சாமிநாதையர் போன்ற பேரறிஞர்களை அவர் நேரில் அறிந்தவர். டாக்டர் ஐயரவர்கள் ஏடுதேடும் காலத்து எம் இல்லத்திற்கு எழுந்தருளி இருந்தமையை அவரே என்னிடம் கூறியுள்ளார். பெரிய தந்தையார் அவர்களிடம் கம்பராமாயணம் கேட்ட சிலர் என்னிடம் கூறிய செய்திகள் சில வற்றை இங்கு தருகிறேன்:

"ஆள், ஐயா, உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயின கண்டனை"

(முதற் போர்புரி படலம் 255)

என்பதே சரியான பாடம்: போரில் தோற்று, வெறுங்கை நாற்றி நின்ற வீரனை 'ஐயா' என விளித்தல் சக்ரவர்த்தித் திருமகனுடைய பெருமைக்கு ஏற்கும்," என்பாராம். அண்மைப் பதிப்புக்களில் இப்பாடத்தையே கொண்டுள்ளனர்; சில பழைய பதிப்புக்களில் 'ஆள யா உனக்கு அமைந்தன' என்று உள்ளது.

(எங்கள் ஊர் இப்போது 'பீளமேடு' என்று அழைக்கப்படும் 'பூளைமேடு'. ஒரு காலத்தில் அது பூளைப் பூக்கள் நிறைந்த மேடாக இருந்தது போலும். அண்மைக் காலம் வரை அதைப் பூளைமேடு என்றே எழுதியும் சொல்லியும் வந்தனர்; இன்றும், தெலுங்கர் அவ்வாறே சொல்லுவதுண்டு.)

"இப் பாட்டில் கம்பன் 'கோசல நாடுடை வள்ளல்' என்றது இராவணன் 'சிறையில் வைத்தவள் தன்னைவிட்டு, தம்பியை (விடணனை) இராக்கதர் முதல் பேர் இறையில் வைத்து' இருந்தால், பெருமாள் தன் கோசல நாட்டை இராவணனுக்கு 'உதவி புகழ் கைக் கொண்ட வள்ளல்' ஆகக் கூடும் என்பதை உன்னி" என்பாராம்.

2. அவர் நாள்தோறும் இரவில் வீட்டு வெளித் திண்ணையில் அமர்ந்து இராமாயணப் பாட்டுக்களைப் பாடிப் பொருள் கூறுவது வழக்கமாம். வேற்றூர்க்காரர் ஒருவர் அவ்வழியே போய்க் கொண்டிருந்தவர் அன்று கேட்ட பாட்டை நினைந்து, நினைந்து, மயிர்ப்புளகுற்று, கண்ணீர் மல்க, கசிந்து, பல ஆண்டுகளுக்குப்பிறகு என்னிடம் உருகியுள்ளார். பாட்டின் ஓசை இன்பத்தையும் தாம் கேட்டபடி, பாடிக் காட்டினர். அப்பாட்டு 'வெய்யோ னொளி' என்ற பாட்டு (கங்கைப் படலம்) 'ஐயோ, இவன் வடிவு' என்ற இடத்தில் இராமனுடைய ஸௌகுமார்யத்தையும், ஸௌந்தர்யத்தையும், லாவண்யத்தையும், அநுபவித்த விசுவாமித்திரன், மிதிலைப் பெண்கள், தண்டக முனிவர், சூர்ப்பணகை, முதல் அனைவருடைய நுகர்விலும் வித்வான் அவர்கள் தோய்ந்து போவாராம். அத் தோய்வில் ஈடுபட்ட இவர் வித்வான் அவர்கள் ஆயுட் காலம் வரை அவருக்குப் பணிவிடை புரிந்து, அவருக்குப் பின் பல பொதுப் பணிகளில் ஈடுபட்டிருந்தார்.

3. என் தந்தையாரும் பெரிய தந்தையாரும் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஊறியவர்கள். இராமன், சீதை, சுக்ரீவன், அனுமன் என்ற பெயர்கள் அவர்கள் வாக்கில் வழங்கா: சக்ரவர்த்தித் திருமகன், பிராட்டி, மஹாராஜா, திருவடி அல்லது சிறிய திருவடி என்றே வழங்குவார்கள். அவ்வாறே, பரதாழ்வான், இளைய பெருமாள், சத்துருக்ன ஆழ்வான், குகப்பெருமாள் தாம்.

இவை என் மிக இளமை நினைவுகள்.

**கோவிந்தராஜ ஐயங்கார் — பி. ஸ்ரீ —**
**T. N. சேஷாசலம் ஐயர்**

பள்ளிப் படிப்பு முடியும் காலத்தில் புராணப் பிரசங்க வாயிலாகவும், கட்டுரை வாயிலாகவும் கம்பனை என் மனத்தில் நுழைத்த பெரியோர்கள் அமரர்கள் காரைக்குடி கோவிந்தராஜ ஐயங்காரும், சேஷாசலம் ஐயரும், இன்றும் நம்முடன் இருக்கும் பி. ஸ்ரீ. அவர்களும். அக்காலத்

தில், கம்பனுக்கென்றே ஒரு மாத இதழ் வெளிவந்து கொண்டிருந்தது என்பது இன்று பலருக்கு வியப்பளிக்கும். ஆம், 50 ஆண்டுகளுக்கு முன்பு 'கம்ப நாடன்' என்ற மாத இதழ் பெரும்பாலும் கம்பன் பாடல்களுக்கு உரையுடனும், சிறு பான்மை கட்டுரைகளுடனும், காரைக்குடி யிலிருந்து வந்துகொண்டிருந்தது. அதன் ஆசிரியர் கோவிந்தராஜ் ஐயங்கார். அவர் எழுதுவது மட்டும் அன்றி, ஊர் ஊராய்ச் சென்று பிரசங்கமூலம் கம்பன் புகழைப் பரப்பி, கம்பனைப் படிக்கும் ஆசையை மக்களுக்கு ஊட்டி வந்தார். ஆனல், நல்ல பதிப்பு இல்லை. (மேலே கூறிய துறையூர் கோவிந்த பிள்ளை அவர்கள் பதிப்பு தவிர சில காண்டங்களுக்கு இராமரத்னம் ஐயர் பரிசோதித்தனவும், அயோத்தியா காண்டம் T. C. பார்த்தசாரதி அய்யங்கார் பரிசோதித்ததுவும், கிட்கிந்தா காண்டம் ம. சண்முகம் பிள்ளை பரிசோதித்ததுவுமே நான் தேடி விலைக்கு வாங்கியவை. எவற்றிலும் சீர், சந்தி பிரிப்பு கிடையாது சிலவற்றில் படல உள்தலைப்புக்கள் உண்டு).

திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் அவர்கள் தமிழ் உலகிற்கு இலக்கியம், சைவம், அரசியல், தொழிற் சங்கங்கள் என்ற பல துறைகளில் ஆற்றிய தொண்டு சாலப் பெரிது. அவற்றுள். அக்காலத்தில் அவருடைய இலக்கியத் தொண்டால் பயன் பெற்றவர் பலருள் யான் ஒருவன். வாரந்தோறும் பி. ஸ்ரீ. 'இலக்கியப் பூஞ்சோலை' என்ற தலைப்பில் 'நவசக்தி'யில் வந்துகொண்டிருந்த கட்டுரையைத் தவருது படித்தேன்; பல பாடல்களைப் பாடம் செய்தேன். அவர் பொருள் விளக்கிய 'உழுகின்ற கொழுமுகத்தின்' என்ற பிராட்டியின் திரு. அவதாரப் பாட்டு (கார்முகப் படலம் 17) இன்னமும் என் மனக்கண் முன் நிற்கிறது; 'முதிரா இளமை'யில் மனத்தில் பதிந்த பாட்டுப் படிவங்கள் பின் அவரே எழுதிய 'சித்திர ராமாயண'த்தைப் படித்த முதிர்ந்த இளமைப் பருவத்தில் பதியவில்லை.

T. N. சேஷாசலம் ஐயரவர்களின் 'கலா நிலையம்' உயர்ந்த, தரமான வார இதழ். கலையே அதன் உயிர்நாடி: ஐயர் அவர்கள் கம்பன் கலையைச் சுவைத்து எழுதினர். எனக்கு அக்காலத்தில் அக் கலையை நுகரும் ஆற்றல் இல்லை; எனினும் அக்கலை பெரிது, வலியது, சிறந்தது, முயன்று கற்க உரியது. என்பதையேனும் அறிந்தேன்.

இவை தவிர. 50 ஆண்டுகளுக்கு முன், தமிழ் நாட்டில் இலக்கிய இதழ்கள் பல இருந்தன. சொ முருகப்பாவின் 'குமரன்' வ. வெ. சு. ஐயரின் 'பால பாரதி' நினைவுக்கு வருகின்றன. ஸம்ஸ்க்ருத மொழியில், திருவையாற்றிலிருந்து 'உத்யான பத்ரிகா' என்ற மாத இலக்கிய ஏடு வந்து கொண்டிருந்தது.

இக்காலத்தில், படிப்போர் தொகையும், ஏடுகளின் எண்ணிக்கையும் பன்மடங்கு பெருகியும், அக்கால இலக்கிய ஏடுகளோடு வைத்தெண்ணக் கூடிய ஏடுகளும். இலக்கியப் பகுதிகளும் இல்லை என்பது நாணுறத் தக்கது.

### கம்பராமாயணம் வாழ்க்கையோடு இணைந்த நூல்

கம்பனைப்பற்றி 'விநோத ரஸ மஞ்சரி' யில் பல கதைகள் உள்ளன. ஆனல், எக் காலத்துப் புலவரும் அவற்றுக்கு வரலாற்றுப் பெருமை தரவில்லை. கம்பன் பொது மக்களால் போற்றப்பட்டிருக்கலாம்; அரசராலும் மதக் குரவர்களாலும் போற்றப் படவில்லை என்பது மட்டும் தெரிகிறது.

கம்பன் காவியப் பாத்திரங்களோடு ஒன்றி, அவர்களுடைய உணர்ச்சிகளைப் பிரதிபலித்திருக்கிறன் என்பது நன்ருகப் புலப்படுகிறது. அவ்வாறு ஒன்றுவதற்கு, கம்பன் மனித வாழ்க்கையைப் பல கோணங்களிலிருந்து நோக்கி இருத்தல் வேண்டும். அவனுடைய நேரடியான அநுபவத்திலும், அவன் அறிந்த பிறருடைய அநுபவத்திலும் தோய்ந்தே காவியத்தில் உணர்ச்சி மிகுந்த கட்டங்களை அவன் வகுத்திருக்க வேண்டும். சுவை ததும்பும் பல பகுதிகளுக்கிடையே,

வெறும் மரபை ஒட்டி எழுந்த கவிகளும் இருப்பதே, இவ் வகுப்புக்கு எடுத்துக் காட்டு.

'கண்ணொடு கண் இணை கௌவி, ஒன்றை ஒன்று உண்ணவும், நிலைபெறுது, உணர்வும் ஒன்றிட, அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்' (மிதிலைக் காட்சி படலம் 35) என்பது இராமனையும் சீதையையும் சுட்டுவது மட்டும் அன்று. எத்தனை சுப்பனும் சுப்பியும் கௌவி, நிலைபெறுது, ஒன்றிட, நோக்கியுள்ளனர்! இது நம் அநுபவத்திலும் நம் நண்பர் பலர் அநுபவத்திலும் உண்மையாக நிகழ்ந்ததே, நிகழ்வதே. காவியத்தில், நாடகத்தில் அல்ல: வாழ்க்கையில்.

வாழ்க்கையோடு இணைந்த, உண்மை நிகழ்ச்சிகள் சிலவற்றை. யான் அறிந்தனவும், பெரியோரிடம் கேட்டனவும் தருகிறேன்.

இந்த நிகழ்ச்சிகளில் கூறப்படுவோர் சிறந்த ரஸிகர். "அந் நிகழ்ச்சிகளையும், அவற்றில் எழுந்த உணர்ச்சிகளையும்கூறும் திறமை எனக்கில்லை, என்பதை உன்னி, கம்பன் எனக்காக இப்படிப் பாடி வைத்தானோ?" என வியந்தவரை நான் அறிவேன் அவற்றில் சம்பந்தப்பட்டவர் சிலர் இன்னம் இருக்கின்றனர்.

1. ஊரில் ஒரு பணக்காரர்; பெருநிலக்கிழார். அவருடைய நிலத்தைச் சார்ந்து ஒரு ஏழைக் குடியானவர் தன் சிறிதளவு நிலத்தை 'வறிஞன் ஓம்பும் ஓர் செய் எனக் காத்து' வந்தார். இருவருமே படித்தவர்கள் எக் காரணத்தாலோ, பணக்காரருக்கு ஏழையின் நிலத்தை வவ்வும் ஆசை பிறந்தது. அவர் ஏதோ மோசடி செய்து அந்த நிலத்தைப் பிடுங்கிக் கொண்டார். ஏழை ஊரைவிட்டு வெளியேறும்போது நிலக்கிழாரிடமும் ஊராரிடமும் சொன்னார்: "உன் செல்வம் பாற்கடல் போலப் பரந்தது. என் சிறு நிலம் பிரை. அக்கடலில் தெரித்ததால், அக்கடலே திரிந்துவிடும். 'திரை கடையிட்டு அளப்பரிய வரம் என்னும் பாற்கடலைச் சீதை என்னும் பிரை கடையிட்டு அழி'ந்தது (இராவணன் வதைப் படலம் 241) நினைவு இருக்கட்டும்" அவ்வாக்கு பலித்தது.

2. இரு நண்பர்கள் இருந்தனர். ஒருவர்மீது கடுமையான பொய்க்குற்றம் சுமத்தப்பட்டது. குற்றம் செய்ததாகக் கூறப்பட்ட நாளில் நண்பர் இருவரும் ஓரிடத்து இருந்தனர். ஆனால், அந்த நண்பர் வேறு அழுத்தல்களால் உண்மையை நீதிமன்றத்துக்கு வந்து கூற மறுத்துவிட்டார். பொய்ச் சாட்சிகளால் குற்றம் நிரூபணமாகி, அவர் தண்டனை பெற்றார். சிறையிலிருந்து மீண்ட பிறகு, பழைய 'நண்பர்' அவரைக் காணச் சென்றார். பலர் முன்னிலையில் அவர் அந்நண்பரைக் காறி உமிழ்ந்து சொன்னார்: "திறன் இலா, வஞ்சர் தீவினைகளால் மானமா மணி இழந்து. எஞ்சினர் நெஞ்சுபோல் என்றும் ஊறாது அரோ", அந்நெஞ்சு இன்னம் ஆறவில்லை. (தாடகை வதைப் படலம் 7)

3. வளமான குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் தன் ஒரே மகனுக்குச் செல்வம் மிக்க குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணை மணம் செய்வித்தார். அப்பெண்ணின் பெயர் சானகி. திருமணமான சில ஆண்டுகளில் அவர் வியாபாரத்தில் நஷ்டம் அடைந்ததால், குடும்பத்தின் நிலை சிறிது தளர்ச்சி உற்றது. அவர் வீட்டை விட்டு வெளியேறி, வேற்றூரில் வாழ்ந்து வந்தார். அதைக் கண்ட அவருடைய நண்பர்கள் சொன்னது:

"வான் நதும், மண்ணும் எல்லாம் நதும்,
நெடுவயிரத் தோளான்
நான் நது மகைஞர் எல்லாம் நதவர்' என்று,
அதற்கு நாணுன்;
வேல் நது நெடுங்கண், செவ்வாய், மெல்லியல்......
சானகி நதுவள்-என்றே நாணத்தால் சாம்புகின்றான்"

(கும்பகருணன் வதைப் படலம் 11)

4 அரபுக் கடல் தென்மேற்கு பருவக் காற்று அடிக்கும்போது கொந்தளிக்கும்.

அலைகள் கப்பலின் மேல் தளத்தில் ஓயாது அடிக்கும். கீழ்த் தளங்களில் உள்ள அறைகளில் வெப்பமும் புழுக்கமும் அதிகம். கப்பல் பிரயாணிகளின் ஆடை மேல் தளத்துக்கு வரும்போது நீர்த்திவலை களால் நனைவதும், கீழ்த் தளத்துக்குப் போக புலர்வதுமாக ஒரு நிலை உருது கம்பன் அசோக வனத்துச் சீதையைப் பாடியது ஒருவருக்கு நினைவு வந்தது.

"அப்பிறல் நனைந்து அருந்துயர் உயிர்ப்புடையாக்கை
வெப்பிறல் புலர்ந்து ஒருநிலை உருத மென் துகிலாள்'

(காட்சிப் படலம் 8).

5. முதிர்ந்த காதலில், ஒருவன் ஒருத்தியிடமே தன் முழு மனத்தையும் ஆற்றலையும் மையம் கொண்டிருக்கிறான் என்பது தவறு. பெண்குலத்தின் பெருமை எல்லாம் தன் காதலியிடம் குடி கொண்டமையால் எப்பெண்ணிடம் எந்த நற்குணத்தைக் கண்டாலும் அது தன் காதலியின் நற்குணங்களுள் ஒன்று எனவும், எப்பெண்ணிடம் எச்சிறப்புக்கண்டாலும் அது தன் காதலியின் சிறப்புக்களுள் ஒன்று எனவும், பரந்த நோக்கம் காதலனுக்கு உண்டாகிறது. மற்ற பெண்கள் தன்னிடம் காட்டும் இரக்கம், அன்பு, இன்சொல் போன்றவற்றில் தன் காதலியைக் காண்கிறான்: அப்பெண்ணின் அழகைத் தன் காதலியின் அழகில் ஒரு பகுதியே என நினைக்கிறான். இதை அநுபவித்த ஒருவர் 'பெண் எலாம் நீரே ஆக்கி, பேர் எலாம் உமதே ஆக்கி, கண் எலாம் நும் கண் ஆக்கி' (மாயா சனகப் படலம் 12) என்ற கம்பன் வாக்கின் உண்மையை அறிந்தார்.

6. ஒரு முயற்சியில் பலர் வெவ்வேறு காரணங்களுக்காக ஈடுபடுகின்றனர்: அவரவருடைய கொள்கை, குறிக்கோள், தன் நலம், சமூக நலம், சூழ்நிலை, போன்றவை முயற்சியின் விளைவு, காரியம், இவ் அனைத்தின் ஒப்பு நிலை, திறன்களின் சமன் தொடர் (equation of forces) ஆகும் நாம் அறியாத திறன்களும் விளைவுக்குச் செயல் படலாம். முடிவுக்கு அம் முயற்சியோ, கொள்கையோ, குறிக்கோளோ, எண்ணி ஈடுபட்டவருடைய திண்மையோ, காரணம் எனத் தெளிவாகக் கூறமுடியாது. நம் நாட்டில் ஆராய்ந்து, சூழ்ந்து எண்ணி வகுக்கப்படும் திட்டங்களின் முயற்சியையும் விளைவையும் தம் அநுபவத்தில் கண்ட ஒருவர்:

"காந்தையருக்கு அணி அனைய சானகியார்
பேர் அழகும், அவர்தம் கற்பும்
ஏந்துபுயத்து இராவணனார் காதலும், அச்
சூர்ப்பணகை இழந்த மூக்கும்,
வேந்தர்பிரான், தயரதனார் பணியதனால், வெங்கானில்
விரதம் பூண்டு
போந்ததுவும், கடைமுறையே இந்திரனார்
பெருந்தவமாய்ப் போயிற்று அம்மா"

(இராவணன் வதைப் படலம் 229) என்ற பாட்டை நினைவுகூர்த்தார்.

7. நாட்டிற்கு ஏற்ற சமூக அமைப்பு உற்பத்தி சாதனங்கள் பொது உடைமையாக இயங்குவதா? (socialism) அன்றி, அவை தனி உடைமையாக இயங்குவதா? (capitalism) என்று மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. அண்மையிலேயே, பொது உடைகைக் கருத்தை நம் அரசியல் சாஸனத்தில் ஏற்றுக் கொண்டுள்ளோம். எனினும், இவ் இரண்டையும் இணைத்த கூட்டு அமைப்பு (Mixed economy) ஏற்படுத்த முடியும், அதுவே நாட்டுக்கு நல்லது என்ற கொள்கையும் உண்டு. சில தொழில்களும், முதலீட்டுக் கழகங்களும் பொது உடைமை (public sector) யாகவும் வேறு சில தனி உடைமை (private sector) யாகவும் இயங்கலாம் என ஒரு தொழிலைத் தேசியம் ஆக்கியபோது ஒருவர் சொன்னார்:

"அருமையும் அடர்ந்துநின்ற பழியையும்
அயர்ந்தாய் போலும்
இருமையும் கெடுத்தாய் அன்றே; என நினைந்து
என் செய்தாய் நீ"

(மகுட பங்கப் படலம் 37)

முடிவுரை

கம்பனை மக்களுக்குக் காட்டுவதற்கு, சிறந்த இலக்கியப் பத்திரிகைகளும், பிற பத்திரிகைகளில் ஒழுங்காக இலக்கியப் பகுதிகளும் வேண்டும். படிக்கும் மக்கள் தரத்தை உயர்த்தவேண்டும்; கட்டுரைக ளின் தரத்தைத் தாழ்த்தக் கூடாது.

ஆடல், பாடல், நாடகம், சிற்பம், ஓவியம் போன்ற கலைகளில் மக்கள் கம் பனைக் காணவேண்டும்: அவற்றின் மூல மாக மக்களுக்குக் கம்பனைக் காட்ட வேண்டும்.

நம் அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சி களையும், அவற்றால் நம் மனத்தில் எழும் உணர்ச்சிகளையும் கம்பன் தன் புலமைத் திறத்தால் ஊடுருவ நோக்கி, கவிதையா கப் பொழிந்துள்ளான். நம் வாழ்க்கைக்குப் புறம்பான பொருளையோ, நம் அறியவோ அநுபவிக்கவோ இயலாத உணர்ச்சி யையோ, அவன் பாடவில்லை. அவன் பாட்டும், பாட்டில் கூறப்படும் பொருளும், பொருளில் பொதிந்த உணர்ச்சியும் நம் மில் ஒருவருக்கோ, பலருக்கோ. இன்றோ, நேற்றோ உண்டான அநுபவமே. இதை எண்ணி, மக்கள் கம்பனைத் தம் வாழ்க் கையோடு இணைத்துக் காணவேண்டும்.

மறைந்த பெரியார்களை நினைவுகூர்ந்து அஞ்சலி செய்யும் வாய்ப்பு தந்ததற்கும், பழைய நினைவுகளைப் புதுப்பித்து இன்பம் பெற்றதற்கும், புதுவைக் கம்பன் கழகத் தார்க்கு என் நன்றி!

# கம்பனை எனக்குக் காட்டியவர்கள்

கண்ணதாசன்

மூப்பத்தாறு ஆண்டுகளுக்கு முன்னால், அப்போது எனக்குப் பதினாலு வயது.

காரைக்குடியில் கம்பர் விழா தொடங்கி மூன்றாண்டுகளாகியிருந்தன.

அமராவதி புதூர் சுப்பிரமணியன் செட்டியார் குருகுலத்தில் நான் எட்டாம் வகுப்புப் படித்துக் கொண்டிருந்தேன்.

மூன்றாம் ஆண்டு கம்பன் விழாவுக்கு குருகுலத்தில் ஆறு, ஏழு, எட்டு வகுப்புகளில் படித்துக் கொண்டிருந்த மாணவர்களையெல்லாம் கால் நடையாகவே ஆசிரியர்கள் அழைத்து வந்தார்கள்.

குருகுலத்தில் இருந்து கம்பர் விழா நடக்கும் காரைக்குடி உயர்நிலைப் பள்ளி ஐந்து மைல் தூரத்தில் இருந்தது.

பந்தலில் நாங்கள் வந்து அமர்ந்ததும் முதலில் பேசியவர் ரசிகமணி டி. கே. சி.

கம்பர் சடையப்ப வள்ளலைப் பற்றிப் பாடிய, 'ஆண்பாலும் தேனும் அரம்பை முதல் முக்கனியும்' என்ற வெண்பாவை அவர் நிறுத்தி நிதானித்துப் பதம் பிரித்து அழகாகச் சொன்னார்.

நான் அதை அப்படியே நோட்டுப் புத்தகத்தில் எழுதிக் கொண்டேன்.

அடுத்து, "வாணன் புகழுரையா வாய் உண்டோ" என்ற வெண்பாவைப் பாடினார்; அதையும் நாங்கள் குறித்துக் கொள்ளக் கூடிய அளவுக்கு நிதானமாகப் பாடினார், நான் குறித்துக் கொண்டேன்.

அவரது கம்பராமாயண விரிவுரை என்னைக் கவர்ந்தது.

அதில், "வெள்ளெருக்கஞ் சடை முடியான்" என்ற பாடலைக் குறித்துக் கொண்டேன்.

அவருக்குப் பிறகு பேசியவர், யார் என்பது நினைவில் இல்லை. ஆனால் அவர் பேசும் போது, "டி. கே. சி. தான் பேச நினைத்ததெல்லாம் பேசி விட்டதாகவும், முதலியார் எப்போதும் முதல் ஈயார்," அதாவது எந்தப் பொருளையும் பிறருக்குக் கொடுக்க மாட்டார் என்றும் பேசினார்.

அந்தப்பதினான்கு வயதில் மூன்றுமணி நேரமும் ஆடாமல் அசையாமல் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறேன்.

'இங்கே தினமும் அழைத்து வர மாட்டார்களா' என்ற ஏக்கமே எனக்கு அதிகரித்தது.

நல்லவேளையாக அதே வருஷம், குருகுலத்தில், வித்துவான் பட்டப் படிப்புத் தொடங்கினார்கள்.

'Entrance' என்று சொல்லப்படும் தொடக்க வகுப்பில் நான் சேர்ந்து கொண்டேன்.

அந்தப் பாடத்திட்டத்தில், கம்ப ராமாயணத்தில் இருந்து நாற்பது பாடல்கள் வைத்திருந்தார்கள்.

'குகப்படலம்' முழுவதையும் நான் பாடம் செய்தேன்.

அந்த நேரத்திலேயே என்று கருதுகிறேன், ஆனந்தவிகடனில் பி. ஸ்ரீ. எழுதிய ராமாயண விளக்கத்தையும் நான் படித்து வந்தேன்.

1949-ல் திராவிட முன்னேற்றக் கழகம் ஆரம்பிக்கப்பட்டபோது அதில் சேர்ந்த நான், அந்த இயக்கம் கம்பனை எதிர்ப்பதில் காட்டிய அக்கறையிலும் கலந்து கொண்டேன்.

அண்ணுதுரை எழுதிய கம்பரசத்தையும் படித்தேன்.

கம்பனைக் கேலி செய்வதைப் பெருமையாக ஒரு கூட்டம் கருதிற்று.

அதில் முன்னணியில் நிற்க நான் ஆசைப்பட்டு, கம்பனை விமர்சிப்பதற்காகவே, டி. கே. சி யின் கம்பராமாயணப் பதிப்பு ஒன்று வாங்கிப் படிக்க ஆரம்பித்தேன்.

படிக்கப் படிக்க நாளடைவில் நான் கம்பனிடம் சரணடைந்தேன்.

ஒரு வகையில், நான் அதிகம் கம்பனைப் படிப்பதற்குக் காரணமாக இருந்த தே, தி. மு. கழகம்தான் என்று சொல்ல வேண்டும்.

கம்பனிடம் அளவற்ற ஈடுபாட்டை அங்கிருந்துதான் நான் பெற்றேன்.

பல விழாக்களிலும், கட்டுரைகளிலும் மேற்கோளாகக் காட்டப்பட்ட கம்பன் பாடல்களைத்தான் நான் அதிகம் படித்தேன்.

இன்று ஓரளவு எனக்குக் கம்பராமாயணப் பயிற்சி இருப்பதற்கு இவையே காரணங்கள்.

'கம்பனைப் படித்து அறிவதைவிட கேட்டு அறிவதே அழுத்தமாகப்பதிகிறது' என்பது என் அனுபவம்.

இப்போது நடைபெறும் கம்பர் விழாக்களிலே, நான் பேசுவதைவிடப் பிறர் பேசுவதைக் கேட்பதே எனக்குப் பலன் தருகிறது.

# கம்பனை எனக்குக் காட்டியவர்கள்

மு. சண்முகம் பிள்ளை

### இராமாவதாரப் பெருங்காவியம்

சோழப் பேரரசு திக்கெலாம் செயத் தம்பம் நாட்டி, எங்கும் அவர்தம் வெற்றிக் கொடியே பறக்கப் பெருஞ்சிறப் போடு திகழ்ந்த காலத்தில் தோன்றியவன் கம்பன். அவன் ஆக்கித்தந்த இராமாவ தாரப் பெருங்காவியம் தமிழன்னையின் முடி மணியாய்த் திகழும் பெருமை வாய்ந்தது. கற்றோரும் மற்றோரும் கம்பன் தந்த காவியத்தைக் கற்றும் கேட்டும் போற்றிவரலானார்கள்.

> 'இம்பர் நாட்டில் செல்வமெலாம்
> எய்தி அரசாண்' டிருந்தாலும்,
> உம்பர் நாட்டில் கற்பகக்கா
> ஒங்கும் நீழல் இருந்தாலும்,
> செம்பொன் மேரு அனையபுயத்
> திறல்சேர் இராமன் திருக்கதையில்
> கம்ப நாடன் கவிதையிற்போல்
> கற்றோர்க் கிதயம் களியதே'.

என்று கம்பன் கவிதையைப் போற்றி யுரைக்கிறது ஒரு தனிப் பாடல்.

### கம்பராமாயணப் பிரசங்கம்

கம்பன் வாழ்ந்த நாளிலேயே அவனுடைய காவியம் மக்களிடையே பிரசங் கித்து விளக்கப்பட்டது என்று ஒரு செவி வழிச் செய்தியும் உண்டு. கம்பராமா யணப் பிரசங்கம் நிகழ்ந்த ஓர் இடத் திற்குக் கம்பன் ஒரு முறை சென்றிருந் தானாம். அங்கு எடுத்து விளக்கப்பட்ட பாடல்களையும், பொருள்களையும் நீண்ட நேரம் அவன் கேட்டுக்கொண்டிருந் தானாம். பல போலிப் பாடல்களோடு இடையிடையே தான் பாடிய இராமா யணக் கவிகளும் சிலசில உள்ளன என்று கூறினானாம். கம்பராமாயணத்தில் இடைச் செருகல்களும் பாடமாறுதல்களும் மிகுதி யாக ஏற்பட்டுள்ளமைக்கு இந்தச் செவி வழி வரலாறு சொல்லப்படுவதுண்டு எவ் வாறாயினும் கம்பன் தந்த பெருங்காவியம் மக்களிடையே மிக விரைவில் பரவியது என்பதற்கும், மக்கள் அக் காவியக்கதை களிலே பெரிதும் ஈடுபட்டார்கள் என் பதற்கும் இந்தக் கதையையே சான்றாகக் கொள்ளலாம்.

### தென்னாடெங்கும் கம்பன்

கம்பராமாயணப் பிரசங்கங்கள் தமிழ கத்தில் மட்டுமன்றிக் கன்னட, மலையாள மொழி வழங்கிய இடங்களிலும் கூட நடை பெற்றனவாம். கன்னட தேசத்தில் கம்ப ராமாயணம் பிரசங்கம் செய்துவந்த இருவர், 'கம்பராமாயணம் நாராயணர். கம்பராமாயணம் இராமப்பன்', என்ற சிறப்பு அடைமொழிகள் சேர்த்து வழங் கப்பட்டனர் எனப் பதினைன்காம் நூற்றாண் டின் பிற்பகுதியில் பொறிக்கப்பட்ட ஒரு கன்னடச் சாசனம் தெரிவிக்கிறது.*

மலையாள நாட்டில் பாடகம் சொல்வது என்றொரு முறையுண்டு. இதில்

*கம்பன் காவியம்-பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, பக். 56-57.

கம்பராமாயணப் பாடல்களைப் பயன் படுத்திவந்தனர் எனக் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் தெரிவித்துள் ளார்கள்.

> "மலையாள நாட்டில் பாடகம் சொல் லும் வழக்கம் இருக்கிறது. அதாவது காவியம், இதிகாசம், புராணம் என் பவற்றிலுள்ள யாதானும் ஒரு பகுதி யை எடுத்துக்கொண்டு ஆடிப்பாடி அபிநயித்துக் காட்டுவதாகும். இதற் குக் கம்பராமாயணப் பாடல்களைப் பயன்படுத்தி வந்ததாகப் பழைய ஏடுகள்கொண்டு அறியமுடிகிறது,"*

என்பது கவிமணியவர்கள் தரும் செய்தி. இத்தகைய சில குறிப்புகளால் கம்பராமா யணம் தென்னாட்டு மக்களிடையே பெரிதும் போற்றப்பட்ட சிறப்புடைய தாய், அது தோன்றிய காலம் முதலே விளங்கிவருகிறது என்பதும் தெரியவரும்.

### நாஞ்சில் நாட்டில் கம்பன்

கம்பராமாயணம் தமிழகத்தின் தென் கோடியாகவுள்ள கன்னியாகுமரியை உள் ளடக்கிய நாஞ்சில் நாட்டில் பெரிதும் போற்றப்பட்டு வந்திருக்கிறது. காலந் தோறும் பலர் கம்பராமாயணத்தைப் பொது மக்களிடையே பிரசங்கம் செய்து வந்திருக்கிறார்கள் கம்பராமாயணத்தை அறிமுகப் படுத்தியவர்கள் 'கம்பராமா யணம்' என்னும் சிறப்படையுடன் வழங் கப்பட்டுள்ளனர். கவிமணி தேசிக விநா யகம்பிள்ளை யவர்களின் தாய் மாமனார் கம்பராமாயணம் முதலிய இலக்கியங்க ளிலே வல்லவராய்ப் பிரசங்கம் புரிந்து வந்தனர். இதனால் அவரைக் 'கம்பராமா யணம் பாலசுப்பிரமணிய பிள்ளை' என்று மக்கள் சிறப்புப் பெயருடன் வழங்கி வந்தனராம்.

### கம்பராமாயண வாசிப்பு

இத்தகைய நாஞ்சில் நாட்டில் பிறந்து இளமைப் பகுதியைக் கழித்த எனக்கு அங்கு அடிக்கடி நடைபெறும் 'கம்பராமா யண வாசிப்பு' முறைதான் முதன்முதலில் கம்பனை அறிமுகப்படுத்தியது. கம்பராமா யணப் பிரசங்க முறைகளுள் இஃது ஒரு தனிமுறை.

கோயில்களிலே திருவிழா நடை பெறும் காலங்களில் கம்பராமாயண வாசிப்பும் இடம் பெறுவதுண்டு. தவிர, வேனிற் காலமாகிய பங்குனி சித்திரை மாதங்களில் — உழவு வேலை முதலியன இல்லாத காலங்களில் — ஊர்ப் பொது வீடங்களில் பல நாள் தொடர்ந்தும் அங் கங்கே கம்பராமாயண வாசிப்பு நடை பெறுவது வழக்கமாகும். ஆடவரும் பெண்டிரும் பெருந் திரளாக வந்து இவ் வுரைகளைக் கேட்டு மகிழ்வர்.

### வாசிப்பு முறை

'கம்ப ராமாயண வாசிப்பு' முறையில் கம்பராமாயணப் பாடல்கள் எல்லாம் முறையாக வாசிக்கப்பட்டு ஒவ்வொரு பாடலும் நன்கு விளக்கிச் சொல்லப்படும். அதனோடு தொடர்புடைய கதைப் பகுதி களும் கவிதை நயங்களும் ஒப்புமையான வேறு இலக்கியச் செய்திகள் முதலிய னவும் எடுத்துரைக்கப்படும். கையேடு வாசிப்பவர் பக்கத்தில் அமர்ந்து ஆர்மோ னிய மெல்லிசையுடன் பாடலை முறைப்படி வாசிக்கக் கம்பராமாயணத்தை நன்கு கற்றுத் தேர்ந்தவர் பொருள் விளக்கம் செய்துவருவார். ஒவ்வொரு பாடலையும் கையேடு வாசிப்பவர் முதலில் முழுமை யாய் வாசிப்பார். பின் விளக்கம் சொல்ப வர்க்குத் துணையாகப் பகுதிபகுதியாகவும் அவருடைய உரைகளுக்கிடையே அடி யெடுத்துக் கொடுப்பார். பெரும்பாலும் சுமார் மூன்று மணி நேரங்கூடத் தொடர்து வாசிப்பு நிகழும்.

ஒவ்வொரு நாளும் வாசிப்புத் தொடங் கும்போது, 'தருகை நீண்ட தயரதன்' 'அஞ்சிலே ஒன்று பெற்றான்', 'பொத்தகம் படிகமாலை', 'நன்மையும் செல்வமும்'

* கவிமணியின் உரைமணிகள், பக். 18.

என்று தொடங்கும் தனியன் பாடல்களைச் சொல்லி, 'உலகம் யாவையும்' என்னும் முதற் பாடலையும் கையேடு வாசிப்பவர் பாடிய பின்னர், நூலுள் அன்று தொடங்க வேண்டிய பகுதிக்கு வருவார். பின் முறைப் படிப் பாட்டும், விளக்கமும் தொடர்ந்து நடைபெறும். சொல்லும் பகுதியில் வரும் பொருளுக்குப் பொருத்தமான சில உலகியல் நிகழ்ச்சிகள், வேடிக்கை விநோதக் கதைகள் முதலியவற்றையும் சொல்லி அவையோரைச் சிரித்து மகிழச் செய்வதும் உண்டு.

### கம்பராமாயணம் குமரேசப் பிள்ளையும் பிறரும்

கம்பராமாயணம் வாசிப்பதையே தம் வாழ்க்கைப் பெரும் பணியாகக்கொண்டு வாழ்ந்தவர் கம்பராமாயணம் குமரேசப் பிள்ளையவர்கள். என் இளமை நாளில் இவர்களுடைய முறையைப் பற்பல காலங்களில் கேட்டு, அதில் பெரிதும் ஈடு பட்டதுண்டு. இவர்களை மக்கள் 'கம்பராமாயணம் குமரேசப் பிள்ளை' என்றே அழைத்து வந்தனர். இவருக்குக் கையேடு வாசித்தவர் திரு. பரமார்த்தலிங்கம் பிள்ளை என்பவராவர். இவர்கள் நாஞ்சில் நாட்டில் மட்டுமன்றித் திருநெல்வேலி, திருவனந்தபுரம் முதலிய பிற இடங்களுக்கும் சென்று கம்பராமாயணம் சொல்லிவருவதுண்டு. இவருடைய வாசிப்பைக் கேட்பதற்கு அந்நாளில் மக்கள் பெருந்திரளாய் வந்து கூடினர்.

இவர்களுடைய முறையைப் பின்பற்றி இறைச்சகுளம் திரு. இராமகிருஷ்ணப் பிள்ளை என்பார் புத்தேரி திரு. செல்லம்பிள்ளை என்பார் கையேடு வாசிக்கக் கம்பராமாயணம் சொல்லி வந்தனர். இவருடைய உரை விளக்கத்தையும் கேட்டு அனுபவித்திருக்கிறேன். இப்பொழுதும் பலர் நாஞ்சில் நாட்டில் கம்பராமாயண வாசிப்பு முறையில் பிரசங்கம் செய்து வருகின்றனர்கள்.

### சிவராஜபிள்ளையின் பணி

கம்பராமாயணம் குமரேச பிள்ளையவர்களின் தம்பியாரே சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் முதல் தலைவராய் விளங்கிய (1927-1934) திரு கெ. என். சிவராஜபிள்ளையவர்கள். இவர்களுடைய ஆராய்ச்சி நூல்களும் "நாஞ்சி வெண்பா" முதலிய கவிதை நூல்களும் தமிழுலகம் நன்கறிந்தவை.

பேராசிரியர் கெ. என். சிவராஜபிள்ளையவர்கள் நாஞ்சில் நாட்டைச் சார்ந்தவர்களே. இவர் தமிழ் ஆங்கிலம் என்னும் இரு மொழியிலும் வல்ல பி. ஏ. பட்டதாரி; பேராசிரியர் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையவர்களோடு தொடர்பு கொண்டிருந்தவர். அவருடைய மறைவுக்குப் பின்னர் அவர் வெளியிட்டுவந்த ஆங்கில இதழை நடத்தியவரும் இவரே. திருவனந்தபுரத்தில் சில ஆண்டுகள் வாழ்ந்து இவர் ஆற்றிய தமிழ்த்தொண்டு — சிறப்பாகப் பத்திரிகைத் தொண்டு அந்நாளில் எல்லாருடைய போற்றுதலையும் பெற்றது.

இவர் கம்பராமாயணம் குறித்து ஆய்வுரைகள் எழுதி அறிமுகஞ் செய்துள்ளார். அந்நாளில் யாழ்ப்பாணத்திலே சிறப்புடன் விளங்கிய பெரியார் சர் பொன்னம்பலம் இராமநாதன் அவர்களுக்குக்கம்பன் கவிப் பொருள்களை ஆங்கிலத்தில் இவர் உரைத்துள்ளார். இதன் பொருட்டுச் சுமார் மூன்றாண்டுகள் இவர் யாழ்ப்பாணம் சென்று தங்கியிருந்தார்; திரு. இராமநாதன் அவர்களால் பெரிதும் போற்றப்பட்டார்.

### கம்பன் கவித்திறம் கூறல்

கம்பராமாயணம் குறித்துப் பெரிதும் ஈடுபாடு கொண்டவராய்த் திறனாய்வு முறையில் பேச்சுரைகளும் இவர் வழங்கி வந்திருக்கிறார். இவ்வாறு இவர் பேசிய பேச்சு ஒன்று, 'தமிழ்க் கவிவாணருக்கு ஒரு வேண்டுகோள்' என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. செந்தமிழ்ப் பத்திரிகை பத்தொன்பதாம் தொகுதியில் (1921-1922: பக். 69 — 198) வெளிவந்துள்ளது.

### கம்பராமாயணக் கவுத்துவம்

மற்றும் சிவராஜ பிள்ளையவர்கள் கவிதையிலேயே கம்பனுக்குத் திறனாய்வு நூல்

ஒன்றையும் படைத்துள்ளார். இதற்கு இவர் 'கம்பராமாயணக் கவுத்துவம்' என்று பெயர் சூட்டியுள்ளார். 'கவுத்துவம்' என்பது திருமாலின் மார்பில் விளங்கும் தெய்வமணி மாலையாகும். அது போலவே கம்பனின் காவியப் பெருங் கோயிலுக்குச் சூட்டப்பெற்ற அழகிய தோரணவாயில் தொங்கல் மாலையாய் இயங்குகிறது. சிவ ராஜ பிள்ளை யவர்களின் கவுத்துவ மணி மாலை.

கம்பராமாயணக் கவுத்துவ மணிமாலை யில் உள்ள 422 பாடல்களுள் முதல் பகுதி 105 பாடல்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தி லிருந்து வெளிவரும் செந்தமிழ்ப் பத்தி ரிகை 28ஆம் தொகுதியில் ஆசிரியரால் வெளியிடப்பட்டது. நூல் முழுமையும் இன்னும் அச்சிடப்படவில்லை. இதன் மூலப் பிரதி இப்பொழுது சிவராஜ பிள்ளை நினைவு மன்றத்தின் செயலாளனாகிய என் னிடமே உள்ளது.

இந்நாலுள் இவர்கள் வகுத்துரைத்த படலப் பெயர்களை நோக்கினாலும் கம்ப ராமாயணத்தை இவர் எந்தெந்த முறை களில் அணுகி நுணுகி நோக்கியுள்ளார் என்பது புலனாகும். முன்னுரைப் படலம், ஆக்கியோன் படலம், உவமைப் படலம், இயற்கை வருணனைப் படலம், கதைமக் கட் படலம், மெய்ப்பாட்டு வருணனைப் படலம், சொல்நடை வனப்புப் படலம், புலமைத்திறன் படலம், அறிவுரைப் பட லம், கவி இலக்கணப் படலம் எனப் பத்துப் படலங்கள் இதில் உள. தமிழ் இலக்கிய உலகிற்கு இந்த நூல் பேராசி ரியன் ஒரு பழமைப் பெருங் கொடை யாகும். அச்சில் இது வெளிவரின் கம் பனைக் கற்பார்க்குச் சிறந்த ஓர் அறிமுக நூலாய் என்றும் விளங்க வல்லதாகும். சிவராஜபிள்ளை யவர்களின் எழுத்துகளும் கம்பனைக் கற்கும் ஆர்வத்தை எனக்குத் தோற்றுவித்தவைகளுள் ஒன்றும்.

**கம்பன் சொற் பெருக்கு**

சுசீந்திரம் திருக்கோயில் நாஞ்சில் நாட்டிலே மிகவும் சிறப்புடன் திகழும் சிவன் திருக்கோயிலாகும். இங்கு மார்கழி யிலும்' சித்திரையிலும் பெரு விழாக்கள் நடைபெறும். இந்த விழாக்களை ஒட்டி மாலை வேளைகளில் தமிழிலும் சமயத்திலும் ஈடுபாடுடைய பெரியார்களை வரவழைத்து சொற்பொழிவு நிகழ்த்துவிப்பது வழக்க மாகும். இந்த வரிசையில் நான் கேட்ட ரசிகமணி டி. கே சிதம்பரநாத முதலியார் பி. ஸ்ரீ. ஆச்சாரியா முதலியோரின் சொற் பொழிவுகள் கம்பன் கவியழகினை நன்கு எடுத்துக் காட்டுபவையாய் இருந்தன.

திருநெல்வேலியில் கம்பன் புகழ் பரப்பி வந்தவர்களுள் பெரியார் ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் 'அவர்கள் முதலில் வைத்துப் போற்றத் தக்கவராவர். இவர்கள் வீட்டு 'வட்டத் தொட்டி'யில் கம்பன் கவியமுதருந்திச் சிறப்படைந்தார் பலராவர். தென்திருப்பேரை பி. ஸ்ரீ ஆச் சாரியா அவர்களும் கம்பனிலும் தமிழிலக் கியங்களிலும் தோய்ந்தவர். இந்த இரு பெரியார்களும் சுசீந்திரம் திருவிழாவை ஒட்டி நடைபெற்ற கூட்டத்தில் கலந்து கொண்டு சொற்பெருக் காற்றினர்கள். இவர்கள் ஆற்றிய கம்பன் சொற்பொழி வுகள் எல்லார் உள்ளங்களையும் பிணிக்க வல்லனவாயிருந்தன. இளம்பிள்ளையாகிய எனக்கு அப்பொழுது இவர்களுடைய சொற்பொழிவுகள் மிகவும் வியப்பைத் தந்தன. அவ்விருவரும் ஆற்றியதுபோன்ற உணர்ச்சி பாவத்துடன் கூடிய சொற் பொழிவை நான் அதுவரை கேட்டதே யில்லை.*

அதன்பின் ஒருசமயம் திருநெல் வேலியில் சொல்லின் செல்வர் டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளையவர்களின் கம்பன் சொற்பொழிவைக்கேட்டு அவர்களுடைய சொல்விருந்தில் பெரிதும் திளைத்தேன்.

* திருவாளர் பி. ஸ்ரீ. அவர்கள் பின்னாளில் ஆனந்த விகடனில் 'கம்ப சித்திரம்' வரைந்தும், ரசிகமணி அவர்கள் 'கல்கி' பத்திரிகையில் 'கம்பர் தரும் ராமாயணம்' எழுதியும் தமிழு லகில் கம்பன் பெருமையைப் பறைசாற்றியமை தமிழுலகம் அறிந்த ஒன்றாகும்.

இத்தகு பெரியார்களைப் பின்னாளில் சென்னையில் பலமுறை சந்திக்கவும் பழகவும் வாய்ப்புக்கிட்டியது. எத்தனையோ முறை அவர்களுடைய உரைகளையும் எழுத்துகளையும் கேட்டும் படித்தும் இன்புற்றுள்ளேன். என்றாலும், இளமையில் கேட்ட இப் பெரியார்களின் சொற்பொழிவுகள் கம்பனில் பேரீடுபாடு கொள்ளத் தூண்டுதலாயிருந்ததோடு தமிழின் இனிமையை உணரவும் வாய்ப்பாய் அமைந்திருந்தன என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது

**வித்துவான் வகுப்புப் பாடம்**

*1937–1941*–ஆம் ஆண்டுகளில் நான் தஞ்சாவூருக்கு அண்மையில் உள்ள திருவையாற்றில் விளங்கும் சரபோஜீ அரசர் கல்லூரியில் தமிழ் வித்துவான் வகுப்பில் வாசித்துவந்தேன் அயோத்தியாகாண்டம் முழுமையும் அப்பொழுது எனக்குப் பாடமாயிருந்தது. மதிப்பிற்குரிய மறைந்த பேராசிரியர் பு. ரா. புருஷோத்தம நாயுடு அவர்கள் அங்குப் பாடம் சொன்னார்கள். அப்பொழுது கம்பன் கவிதை நயங்களில் ஆழ்ந்து தோய்ந்து கற்காவிடினும் கம்பன் கவிதைகளின் பொதுப்படையான ஒரு போக்கினையும் அவற்றின் இனிய பண்புகளையும் ஒருவாறு உணர இயன்றது.

**வையாபுரிப் பிள்ளையவர்களின் தொடர்பு**

*1941*–ஆம் ஆண்டுத் தொடக்கமாகப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் மறைவது வரையிலும் (1956) அவர்களுடைய மாணவனாயிருந்து தமிழ்ப்பணி புரிந்துவந்தேன். இப்பொழுதுதான் கம்பராமாயணத்திற்குரிய பல பதிப்புகள், உரைநூல்கள் முதலியவற்றைப் பார்க்கும் வாய்ப்புக்கிட்டியது. கம்பராமாயண ஏட்டுச் சுவடிகள் பலவற்றையும் அவர்கள் சேர்த்துவைத்திருந்தார்கள். இவைகளுள் பல நாஞ்சில் நாட்டுப் பகுதியிலிருந்து கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் தேடித்தந்தனவாகும் *

**பேராசிரியரின் கம்பன் ஈடுபாடு**

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் கம்பராமாயணத்தில் பல்லாண்டுகள் பயிற்சியுடையவர்கள். அவர்கள் திருவனந்தபுரத்தில் வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்டிருந்தபோது கம்பராமாயணத்தை அங்குள்ள அரண்மனை நூல் நிலையத்திலிருந்து கிடைத்த பழைய ஏட்டுப் பிரதியுடன் ஒப்பிட்டுப் பார்த்துப் பாடபேதங்களை குறித்துக்கொண்டு வாசித்துள்ளார்கள். பின்னர் அவர்கள் 1923-ஆம் ஆண்டு திருநெல்வேலிக்கு வந்து வழக்கறிஞர் தொழில் பார்க்கத் தொடங்கிய காலத்திலும் கம்பராமாயணம் முதலிய நூல்களை முறையாகக் கற்று வந்தார்கள்.

பிள்ளையவர்களின் குடும்பம் தமிழிலும், சைவத்திலும் ஊறிய குடும்பம். இவர்தம் தந்தையார் சரவணப் பெருமாள் பிள்ளை சைவ ஒழுக்க நெறி பிறழாது வாழ்ந்தவர்; தேவாரம், பெரியபுராணம் முதலிய நூல்களிலும் ஆழ்ந்த பயிற்சியுடையவராயிருந்தார். இவர்களுடைய தந்தை வழிப் பாட்டனார் சங்கரலிங்கம் பிள்ளை ஒரு கவிஞரே. 'பொருநை மாதாவின் புராண'மும் குறுக்குத்துறை முருகப் பெருமான் மீது சிறுபிரபந்தங்களும் இவர் பாடியுள்ளார். பாம்பன் ஸ்ரீ குமரகுருதாச சுவாமிகளுக்கு உற்ற நண்பராயும் இருந்தவர், இவ்வாறு வழிவழியாய்ப் பெருகி வரும் தமிழூற்றுப் பேராசிரியர் அவர்களிடமும் இயற்கையாகப் பெருகியது.

*1923*–ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் வையாபுரிப் பிள்ளையவர்கள் தம் நண்பர்களான திரு. சக்கரபாணி நம்பியார், திரு. சுப்பையா முதலியார் முதலியோர் துணையுடன் கம்பர் கழகம் ஒன்றைத் திருநெல்வேலியில் நிறுவினர். கம்பர் விழாவும் அந்த ஆண்டு விமரிசையாக எடுத்

* பிள்ளையவர்கள் தொகுத்து வைத்திருந்த ஓலைச்சுவடிகளும், நூல்களும் அவர்களுடைய கால்வழியினரால் கல்கத்தாவில் உள்ள தேசிய நூலகத்திற்கு வழங்கப்பட்டுள்ளன. அந்நூலகம் செல்வார், பிள்ளையவர்களின் தொகுப்பைக் காண இயலும்.

தனர்*, அவ்விழாவிற்கு மகா வித்துவான் ரா. இராகவையங்கார் தலைமை வகித்தார். இவ்விழா நிகழ்ச்சிகளுள் இரண்டு முக்கிய மாகக் குறிப்பிடத்தக்கன. திரு. கே என். சிவராஜ பிள்ளை கம்பனது கவித்துவம் பற்றி ஆங்கிலக் கட்டுரை படித்தது ஒன்று. மற்றொன்று வையாபுரிப் பிள்ளையவர்கள், 'கம்பன் திருநாள்' என்பது குறித்து எழுதி வாசித்த பாவனைக் கட்டுரை.§ கம்பன் திருநாள் பற்றிய கட்டுரை பின்னர்ச் 'செந் தமிழ்'லும் 'தமிழர் நேச'னிலும் அடுத் தடுத்து வெளிவந்தது. இங்ஙனமாகப் படிப்பும், ஆய்வும் எழுத்தும் அவர் களுக்கு இன்பப்பொழுது போக்காய் அமைந்திருந்தன.

### சுவடி நோக்கிப் பாடங்களை ஆராய்ந்தமை

பின்னர்ப் பேராசிரியர் பிள்ளையவர்கள் தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரியராய்ப் பதவிஏற்றுச்(1926) சென்னைக்கு வந்தபின் பல நூலாராய்ச்சிகளோடு கம்பராமாய ணத்திலும் மிகுந்த கவனம்செலுத்தி ஆரா ய்ந்து வந்தார்கள். கம்பராமாயண ஏட்டுச் சுவடிகளைப் பல இடங்களிலிருந்தும் திரட் டினார்கள். அவகாசம் வாய்த்தபோதெல் லாம் சுவடிகளுடன் ஒப்புநோக்கிப் படித் துப் பாடபேதங்களை இடையிடையே காகிதம் வைத்துப் பைண்டு செய்த தம் நூலுள் குறித்துவந்தார்கள். இவர்கள் குறித்து வைத்திருந்த பாட பேதங்களைத் திரு. வை. மு கோபாலகிருஷ்ணமாச்சாரி யார் பயன் படுத்தியுள்ளார். ஏட்டுச் சுவடி களும் ஆச்சாரியார் அவர்களுக்கு இவர்கள் அளித்ததுண்டு, இச்செய்திகளை திரு. ஆச்சாரியார் அவர்கள் தம் உரை நூலின் முகவுரைகளில் நன்றியுடன் குறிப் பிட்டிருத்தல் காணலாம்.

> "இந்த யுத்த காண்டத்திற்கு உரை யெழுதி வெளிப்படுத்த வேண்டு மென்று கருதியிருக்கையில் அப் போது எனது உத்தியோகசாலையில் தலைவராயிருந்த திருவாளர் ராவ் ஸாஹெப் S. வையாபுரிப் பிள்ளை B. A. B. L., அவர்கள் தாம் பல ஏட்டுப் பிரதிகளை ஒப்புநோக்கிப் பாடபேதங்களைக் குறித்து வைத் திருந்த தமது புத்தகத்தைத் தந்த தோடு சில ஏட்டுப் பிரதிகளையும் தந்தனர். அன்னார் புரிந்த உதவி தான் பலவகைப் பாடபேதங் களோடு இந்த யுத்த காண்டத்தை உரைகண்டு எழுதுவதற்குப் பெருங் காரணமாயிற்று. ஆதலால், அவர் கள் செய்த உதவிகளை யானும் இப் பதிப்பாற் பயனை நுகர்வோரும் அவர்கள் திறத்து நன்றிபாராட்டக் கடமைப்பட்டுள்ளோம்."†

### கம்பன் கொண்ட பாடம் காணல்

கம்பராமாயணத்தில் பாடபேதங்கள் பலவாகப் புகுந்துவிட்டமை கண்டு அவற் றைத் தொகுத்து, அவற்றுள் கம்பன் கொண்ட பாடம் எதுவாக இருக்கலாம் எனக் காணும் ஆராய்ச்சியிலும் பேராசி ரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் ஈடு பட்டு உழைத்து வந்தார்கள். 1932ஆம் ஆண்டு யுத்த காண்டத்தின் முதல் மூன்று படலங்களைப் (கடல்காண் படலம், இராவணன் மந்திரப் படலம், இரணியன் வதைப் படலம்) பாட பேதங்களுடன் பிள்ளையவர்கள் வெளியிட்டுத் தமது உழைப்பின் நோக்கத்தை உலகிற்கு வெளியிட்டார்கள்.

### கம்பராமாயணம் பற்றிய கட்டுரைகள்

கம்பராமாயணம் குறித்துப் பலவகை யான கட்டுரைகளையும் அவ்வப்போது அவர்கள் சொல்லக் கேட்டு எழுதியும், பின் அவற்றைச் செம்மையாய்ப் பிரதி செய்தும் வந்துள்ளேன். இதனால் கம்பரா

---

* அகராதி நினைவுகள்: பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, பக். 5-6.

§ இக்கட்டுரையை இப்பொழுது, 'தமிழ்ச் சுடர்மணிகள்' என்னும்பேராசிரியரின் கட்டுரைத் தொகுதியில் காணலாம்.

† கம்பராமாயணம் யுத்த காண்டம் வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார்; முகவுரை, பக். 11.

மாயண நுட்பங்கள் பல தெரியவந்தன. அவர்கள் எழுதி வெளியிட்ட கட்டுரைத் தொகுதிகளுள் 'கம்பன் காவியம்' என்னும் தொகுப்பு நூல் முற்றும் கம்பராமாயணம் பற்றியதே. தவிரவும் தமிழ்ச்சுடர் மணிகள், தமிழர் பண்பாடு என்னும் அவர்களுடைய நூல் தொகுதிகளுள்ளும் கம்பன் கட்டுரைகள் உள.

சில சமயங்களில் பிள்ளையவர்கள் கம்பன் கவிதைகளில் தோய்ந்து தாமே பாடியனுபவிப்பதும் உண்டு. உணர்ச்சியுடன் அவர்கள் பாடுதலைக் கேட்கும் சந்தர்ப்பங்களும் பல வாய்த்ததுண்டு. கம்பன் கவிதைகளில் நன்கு தோய்ந்து அவற்றின் அழகில் தம்மைப் பறிகொடுத்த அனுபவ உணர்வின் வெளிப்பாடே இத்தகு நிலை.

### சென்னையில் கம்பராமாயணம்

சென்னையில் கம்ப ராமாயணத்தை வாரம் தோறும் முறையாகப் பாடம் சொல்லி வந்தவர்களைப்பற்றியும் கேள்விப்பட்டேன். புரசைப்பாக்கத்தில் வாழ்ந்த வழக்கறிஞர் திரு. T. N. சேஷாசலம் ஐயர் அவர்கள் இந்தவகைப்பணியில் முற்படக் கூறத்தக்கவர். பல காலம் இவர் சென்னையில் கம்பராமாயண வகுப்புகளை நடத்தித் தமிழ்ப்பணி புரிந்திருக்கிருர். பாலகாண்டத்திற்கு ஓர் உரையும் இவர் எழுதியுள்ளார். இதனைச் சென்னையிலுள்ள பி. ஜி. பால் கம்பெனியார் வெளியிட்டுள்ளனர். எனக்கு அக் கம்பெனியாரோடு நெருங்கிய தொடர்பு இருந்து வந்த பின்னுளில் அதன் தலைவர் திரு. கே. நீலகண்டன் அவர்கள் அதன் பிரதி ஒன்றை எனக்கு அன்பளிப்பாகத்தந்தார்கள்.

திரு. ஐயர் அவர்களைப் போன்றே வேறுசிலரும் கம்பன்புகழ் பரப்பிவந்துள்ளனர். சொல்லின் செல்வர் டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள், ஒய். எம். சி. ஏ. பட்டி மன்றத்தில் ஆற்றிவந்த கம்பராமாயணத் தொடர் சொற்பொழிவுகள் பலரையும் கம்பன் காவியத்தில் ஈடுபடச் செய்தது. இவர்களுடைய சொற்பொழிவுகளை யானும் பலமுறை கேட்டிருக்கிறேன். அண்மைக்காலத்தில் 'கம்பரப்பர்', எனப் புனை பெயர் கொண்ட பெரும் புலவர் அ. கு. ஆதித்தர் அவர்கள் மயிலைசீனிவாசராவ் சாலையிலுள்ள தம் இல்லமாகிய 'கம்பர் வளாக'த்தில் கம்பன் வகுப்புகள் பலகாலம் நடத்தி வந்துள்ளார்கள். இப்போது சென்னைக் கம்பன் கழகம் ஒவ்வொரு வாரமும் சனிக் கிழமை தோறும் கம்பராமாயணத்தைமுறையாகப்பாடம் சொல்லி வருதலும் இங்குக் கருதத்தக்கது. இது சென்னையின் பழ மரபு புத்துருவம் பெற்ற நிலையாகும்.

### சென்னைக் கம்பர் கழகம்

எழும்பூரிலே திரு. க. சோமசுந்தரம் 1 அவர்களைச் செயலாளராகக் கொண்ட 'சென்னைக் கம்பர் கழகம்' என்னும் ஓர் அமைப்பு முன்பு இருந்தது. இக் கழகத்தார் ஆண்டுதோறும் கம்பனுக்கு விழா எடுத்தும் மலர் வெளியிட்டும் கம்பன் புகழ் பரப்பினர். 1944 ல் நடைபெற்ற விழாவை ஒட்டி 'கம்பன் மலர்' என்னும் பெயரில் அறிஞர் பலர் எழுதிய கட்டுரை கவிதைகளைக் கொண்ட தொகுதி ஒன்றை வெளியிட்டனர். 1945 ஆம் ஆண்டு நடைபெற்ற விழாவிலே 'கம்பன் கவியமுதம்' என்னும் பெயரில் மற்ருெரு தொகுதியை வெளியிட்டனர். 2 இந்தத் தொகுதியில் 'கம்பனது கதாநாயகி' என்னும் தலைப்பில் யானும் ஒரு கட்டுரை வழங்கியுள்ளேன். இக்கட்டுரையை எழுத எனக்கு வழிகாட்டியதோடு எனது கட்டுரையையும் பேரா

---

1. இவர் சிறந்த தமிழன்பர்; எழுத்தாளர்; தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கத்தின் செயலாளராயிருந்து அரும்பணி பலபுரிந்துள்ளார். பொதுநல இலக்கியத் தொண்டராகிய இவர் அண்மையில் மறைந்துவிட்டார்.

2. இங்குக் குறிக்கப்பட்ட இரு கட்டுரை தொகுதிகளையும் சென்னைக் கம்பர் கழகத்தின் இசைவுடன் தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம் இப்பொழுது தொடர்ந்து வெளியிட்டு வருகிறது.

சிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் செம்மைப்படுத்தித் தந்தார்கள். இது கம்பனைப் பற்றிய நான் எழுதிய கட்டுரைகளுள் முதலாவதாகும்.

### கம்பன் மாதிரிப் பதிப்பு

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்களின் கம்பராமாயணப் பாடபேதத் தொகுப்பிற்கு அவ்வப் போது வழக்கறிஞரும் பிரபல தமிழ் எழுத்தாளருமாகிய திரு. பெ. நா. அப்புஸ்வாமி ஐயர் அவர்களும் உடனிருந்து உதவிவந்தார்கள். திரு ஐயர் அவர்கள் பிள்ளையவர்களோடு திருநெல்வேலியிலே பள்ளியில் பயின்ற தோழர். பிள்ளையவர்கள் தமிழ் லெக்ஸிகன் பதிப்பாசிரியராகச் சென்னைக்கு வருவதற்குக் காரணமாயிருந்தவர்களும் அவர்களே. சென்னையில் பிள்ளையவர்களின் இல்லத்திற்கு அண்மையிலேயே அவர்கள் வாழ்ந்து வந்தார்கள். அடிக்கடி சந்தித்து இருவரும் மிகவும் நெருங்கிப் பழகி வந்தார்கள்; ஒருவருக் கொருவர் உற்ற துணையாயுமிருந்தார்கள். இவர்களை 'இரட்டையர்' என்று பிறர் போற்றிப் புகழுமளவுக்கு இருவரும் என்றும் இணைபிரியாது வாழ்ந்து வந்தனர்.* தாம் தொகுத்த பாடபேதக் குறிப்புகளுடன் பால காண்டத்தில் தாடகைவதைப் படலம் முடிய முதலேழு படலங்களைப் பேராசிரியர் பிள்ளையவர்கள் ஆழ்வார் திருநகரிப் பெரியன் ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அவர்களைக்கொண்டு 1973-ல் வெளியிடச் செய்தார்கள். இது திரு. பெ. நா அப்புஸ்வாமி ஐயருடன் சேர்ந்து பதிப்பித்தபதிப்பாகும்.

சில ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிட்ட யுத்த காண்டத்தின் முதல் மூன்று படலங்கள் கொண்ட வெளியீடுபோலவே இதுவும் பாடபேதங்களுடன் கம்பராமாயணம் வெளியிடப்படவேண்டும் என்றும் அவர்களுடைய பெருவிருப்பினை உலகத்திற்கு வெளிப்படுத்திய மாதிரி வெளியீடாகும்.

### ஆராய்ச்சிப் பதிப்பு

கம்பராமாயணத்திற்குக் கிடைக்கும் ஏட்டுப் பிரதிகளை எல்லாம் திரட்டிப் பல்வேறு வகையான பாடபேதங்களையும் தொகுத்துக் கொடுத்துத் திருந்திய முறையில் ஆராய்ச்சிப் பதிப்பு ஒன்றனை வெளியிடவேண்டும் என்னும் பேரவா விடாது தொடர்ந்து அவர்களை ஆட்கொண்டிருந்தது. ஒருமுறைக்கு இருமுறை முயன்றும் ஏற்ற சூழலும் கருவியும் வாயாமையால் அவர்களுடைய முயற்சி கைகூடாமல் போயிற்று அவர்கள் ஆய்ந்து கண்ட முறையில் கம்பராமாயண மூலபாடப் பதிப்பொன்று வாராமல் போனது தமிழகத்தின் தவக்குறைவே. பேராசிரியர் அவர்களின் முயற்சிகளை உடனிருந்து அறிந்தவனதலின் இம்முயற்சிகளைமட்டும் சுருக்கமாக இங்கே குறிப்பிட்டு மேலே சொல்லலாம் என்று கருதுகிறேன்.

### காரைக்குடிக் கம்பன் கழக முயற்சி

காரைக்குடிக் கம்பன் கழகத்தார் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்களைக்கொண்டு ஆராய்ச்சிப் பதிப்பு ஒன்றை வெளியிட முனைந்தார்கள். செயலாளர் திரு. சா. கணேசன் அவர்களுடைய முயற்சியும் தூண்டுதலும் அவர்களை இதில் ஈடுபட வைத்தது. 1950-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் காரைக்குடியில் கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பின் தொடக்க விழா நடைபெற்றது. அப்பொழுது இந்து அறநிலையப் பாதுகாப்புத் தலைவராயிருந்த திரு. சின்னையாப் பிள்ளையவர்கள் தலைமையில் இவ்விழா நடைபெற்றது அப்பொழுது பிள்ளையவர்கள் தாம் செய்ய முனைந்துள்ள ஆராய்ச்சிப் பதிப்பின் நெறிமுறைகளைக் குறித்து விரிவான ஓர் உரை

* இப்பொழுது திரு. பெ. நா. அப்புஸ்வாமி ஐயர் அவர்கள் பாளையங்கோட்டை மகாராஜ நகரில் தம் இளையமகள் அம்மணியம்மாளின் இல்லத்தை ஒட்டி வாழ்ந்து வருகிறார்கள். இப்பொழுதும் இவர்கள் படிப்பும் எழுத்துமாய்ப் பொழுதுபோக்கி வருகிறார்கள்.

நிகழ்த்தினுர்கள். இவ்வுரையைக் 'கம்பன் காவியம்' என்னும் நூலில், 'கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு' என அமைந்துள்ள பகுதியில் (பக். 35-69) பரக்கக் காணலாம். இவ்வுரையில் அதுவரை வந்த கம்பராமாயணப் பதிப்பு வரலாறும், தாம் கொண்டுள்ள கொள்கைகளும், செய்யக் கருதியுள்ள முறைகளும் குறித்து விரிவாக எழுதியுள்ளார்கள். இந்தப் பதிப்புப் பணி பல வசதிக்குறைகளால் தொடர்ந்து நடைபெறவில்லை.

### திருந்தமான மூலபாடப் பதிப்பு

ஆராய்ச்சிப் பதிப்பு முயற்சி நடைபெறுமல் போகவே அந்த எண்ணத்தை விடுத்துத் தாம் பாடபேதங்கள் பார்த்து ஆராய்ந்து கண்ட முறையில் திருந்திய தொரு மூலபாடப் பதிப்பினைக் கதைச் சுருக்கம் அரும்பதவுரை முதலியவற்றுடன் வெளியிட்டுவிடுவது என்று பேராசிரியர் கருதினுர். இது குறித்துச் சென்னை இராயப்பேட்டை மோபரீஸ் ரோடு, 115 ஆம் எண். வீட்டில்* முன்பு வசித்த சக்தி காரியாலயம் அதிபர் திரு. வை. கோவிந்தன் அவர்களோடு 1952–ஆம் வருடம் நவம்பர் மாதம் 28–ஆம் தேதியில் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். 1953 ஆம் ஆண்டு ஜூன் மாதம் தொடங்கி 1956 ஆம் ஆண்டு ஜூன் மாதம் முடிவிற்குள் ஆறு காண்டங்களையும் வெளியிட்டுவிட வேண்டும் என்றும் திட்டம் தீட்டினுர்கள். ஆறு காண்டங்களுக்கும் புத்தக விலை ரூ. 45 வைத்து, அதில் 15 சதவீதம் ராயல்டி பெற்றுக்கொள்வதாகவும் ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. இந்த ஒப்பந்தத்தில் சாட்சிக் கையெழுத்திட்டவனும் நானே.

அப்பொழுது பேராசிரியர் அவர்கள் திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில்§ தமிழ்ப் பேராசிரியராய்ப் பதவி ஏற்றுத் திருவனந்தபுரத்தில் வாழ்ந்துவர நேர்ந்தது மேலும், அவர்கள் அப்பொழுது நோய் வாய்ப்பட்டு சற்று உடல் நலிவுற்றுமிருந்தார்கள். எப்பொழுதும் அண்மையிலிருந்து பணிகளில் உடன் ஒத்துழைக்கத் தக்க உதவியாளர்களும் அங்கு இல்லை. 1954 வரை அவர்கள் அந்தப் பதவியில் இருந்தபோது வரவர உடல் நலமும் பெரிதும் சீர்கேடுற்றது. சக்தி திரு. வை. கோவிந்தன் அவர்களும் பழைய சக்தியின்றியிருந்த காலம். இவ்வாருன சில காரணங்களால் இந்த இரண்டாவது முயற்சியும் வளர்ச்சிபெருமல் போயிற்று.

17–1–1954 ல் கரைக்குடிக் கம்பன் கழகத்தின் சார்பில் திரு. சொ. முருகப்பா அவர்களின் பால காண்டப் பதிப்பின் வெளியீட்டு விழாவுக்குத் தலைமை வகித்து உரையாற்றினுர்கள். அவ் வுரையிலும் கம்பராமாயணப் பதிப்பு முயற்சிகள் குறித்துத் தெரிவித்துள்ளார்கள்.

### புதுமுறைப் பதிப்பின் தோற்றம்

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் 1954-ஆம் ஆண்டோடு திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத்தின் பணி முற்றுப்பெறவே, சென்னை அடையாறு காந்தி நகரில் தாம் கட்டிய 'கம்பன் நிலையம்' மாளிகை வந்து சேர்ந்தார்கள்.|| பேராசிரியரின் உடல்நலம் பெரிதும் சீர் கேடுற்றிருந்தது. எனினும் தம் உள்ளம் அவாவிய தமிழ்ப்பணிகளை இயன்றவரை ஆற்றிவந்தார்கள்.

அப்பொழுது மர்ரே கம்பெனி திரு. எஸ். ராஜம் அவர்கள் புதுமுறையில் பாடல்களைச் சந்திபிரித்து, நிறுத்தற் குறி

* இவ்வீடு இருந்த இடத்திலேயே இப்பொழுது மியூஸிக் அகடாமிக் கட்டடம் எழுப்பப்பட்டிருக்கிறது.

§ 1956 நவம்பரில் மொழிவாரி நாடுகளாகப் பிரிக்கப்பட்ட பின்னர் கேரள நாட்டின் தலைநகரில் அமைந்த இந்தப் பல்கலைக் கழகம், 'கேரளப் பல்கலைக் கழகம்' எனப் பெயர் மாற்றம் பெற்றுள்ளது.

|| இப்பொழுது இந்த இல்லம் நடிகை திருமதி சரோஜா தேவியின் கைக்கு மாறிப் 'புவனேஸ்வரி நிலைய'மாய் உருமாறியுள்ளது. இரண்டாவது பெருஞ்சாலை 26-ஆம் எண். இல்லம்.

யீடுகள் அமைத்துச் சாதாரணப் படிப் புடையாரும் எளிதில் வாசிக்கத் தக்க வகையில் தமிழ் நூல்களை வெயிட முன் வந்தார். பேராசிரியர் அவர்களைப் பதிப் பாசிரியராகக் கொண்டு திவ்வியப் பிரபந் தத்தில் முதலாயிரத்தை 1955-ஆம் ஆண்டு இறுதியில் வெளியிட்டனர். 1956-ஆம் ஆண்டு பிப்பிரவரி 17-ஆம் நாளில் பேரா சிரியரின் ஆயுட் காலம் முடிவுற்றது. அதன்பின் அவர்களுடனிருந்து பணியாற் றிய எனக்குப் பதிப்பின் முழுப் பொறுப் பும் வழங்கினர். மர்ரே கம்பெனி திரு. ராஜம் அவர்கள் 'இலக்கியச் செல்வம்' என்னும் வரிசையில் 64 நூல்களை 45 தொகுதிகளில் தொடர்ந்து வெளியிட்ட னர். அவற்றுள் கம்பராமாயணமும் ஒன்று.

### கம்பராமாயணம் மர்ரே பதிப்பு

பாடல்கள் எல்லாம் பொருள் மாறு படாது சந்தி பிரிக்கப்பெற்று, பொருள் களின் போக்கிற்கு ஏற்ப நிறுத்தற் குறியீடு களும் அமைக்கப்பெற்று, இடையிடை யே ஏற்ற தலைப்புகளும்தந்து இப் பதிப்பு வெளியிடப் பெற்றது. இந்தப் பதிப்புப் பணியினல் ஒவ்வொரு பாடலையும் கிட்டிய பாடபேதங்களுடன் பார்க்கும் வாய்ப்பு நேர்ந்தது. பதிப்புக்குழு ஒன்றும் அமைத்துக் கொள்ளப் பெற்றது. திருவா ளர்கள் நீ. கந்தசாமிப் பிள்ளை, சா. கணேசன், பெ. நா. அப்புஸ்வாமி ஐயர், வி. மு. சுப்பிரமணிய ஐயர் ஆகி யோர் இக் குழுவில் இருந்தனர். பன் மொழிப் புலவர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார், பேராசிரியர் ரா. விசுவநா தையர், பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை, பன் மொழிப் புலவர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன் முதலியோரும் அவ்வப்போது உதவிவந்தனர். எனினும், கடைசிப் பாரம் புருப்பைப் பார்ப்பதில் உதவியவர் திரு. வி. மு. சுப்பிரமணிய ஐயர் அவர்களேயாவர்.*

முதல் ஐந்து காண்டங்களும் ஐந்து தொகுதியாயும் யுத்த காண்டம் நான்கு தொகுதியாயும் ஆக ஒன்பது தொகுதி களில் கம்பராமாயணம் முழுமையும் மக்கள் பதிப்பாகப் புதிய முறையில் நல்ல காகிதத்தில் இருபுற மேலட்டைகளும் வண்ண ஓவியங்கள் கொண்டனவாய் அழகுற வெளியிடப் பெற்றது. கம்பன் காவியத்தில் புகுந்த இடைச் செருகல்கள் முதலியவற்றையும் ஐயமுறத்தக்க இடங் களையும் குறியிட்டுக் காட்டியதோடு கம் பன் பாடல்கள் அல்ல எனக் கண்டவற் றை 'மிகைப் பாடல்கள்' எனத் தனித்தும் தொகுத்துத் தரப்பட்டன. தொகுதி ஒரு ரூபாய் வீதம் ஒன்பது ரூபாய் விலையில் தரப்பட்ட இப்பதிப்பு எல்லாரும் எளிதில் பெற்றுப் பயன்பெற வாய்ப்பாய் அமைந் தது. இந்த வியத்தகு அற்புதத்தைப் பக லிரவு பாராது முன்னின்று பக்தி சிரத்தையு டன் இடையருது துணைநின்று முற்றுவித்த மர்ரே கம்பெனி திரு. எஸ். ராஜம் அவர் களின் திருப்பணி என்றும் நன்றியுடன் போற்றத்தக்கது. இந்தப் பதிப்புப் பணி யால் கம்பனை எழுத்தெண்ணிக் கற்கும் பேறு பெற்றேன். இதனை முற்றுவிப் பதற்கு மறைந்த மாமேதை பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் தோன் ருத் துணையாய் உதவினுர்கள் என்றே சொல்லவேண்டும். எளியேனை இப் பெரிய திருப்பணியில் ஈடுபடுத்தி வாழ் வித்தது அவருடைய அருளாசிகள்தாம் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

### கம்பராமாயண அகராதி

1960-ஆம் ஆண்டுக்குப்பின், மர்ரே திரு. எஸ். ராஜம் அவர்கள் இலக்கியப் பதிப்பு முயற்சிகளைச் சில காரணங்களால் நிறுத்தி வைத்தார்கள். தமிழுக்கு வர லாற்று முறையில் ஒரு பேரகராதியைத் தொகுக்கும் பணியை மேற்கொண்டுள் ளார்கள். இதற்கு அடிப்படையாதாரமாக ஒவ்வொரு நூலுக்கும் சொல்-தொடர் அக

* இவர் இப்பொழுது புதுச்சேரியில் விளங்கும் பிரெஞ்சுக் கலைக் கழகத்தில் தமிழ்ப் பணி புரிந்து வருகிருர்.

ராதிகள் செய்யும் பணியில் ஈடுபட்டார்கள். கம்பராமாயணத்தின் ஒவ்வொரு காண்டத்திற்கும் தனித் தனிச் சொல்லகராதிகளை மர்ரே பதிப்பின் அடிப்படையில் அமைத்துள்ளார்கள்* இதனை ஆக்கும் போது சொல்-தொடர்களைச் சரிபார்த்தளித்து, அந்த அகராதிகள் முழுமையுற ஆக்குவித்தேன். இந்த அகராதி ஆக்கத்தினால் கம்பன் பயன்படுத்திய சொற்களஞ்சியத்தினை அறியும் வாய்ப்பு நேர்ந்தது.

### சென்னைக் கம்பன் கழகப் பதிப்பு

சென்ற ஆண்டு (1677) ஆகஸ்டு மாதத்தில் மாண்புமிகு நீதிபதி மு. மு. இஸ்மாயில் அவர்களைத் தலைவராகக்கொண்டு விளங்கும் சென்னைக் கம்பன் கழகத்தின் கம்பராமாயணப் பதிப்பு— ஆறு காண்டங்களும் ஒரே தொகுதியில் அமைய மெல்லிய காகிதத்தில் அச்சிடப்பெற்று வெளியிடப்பட்டுள்ளது. இதன் பதிப்புப் பணி டாக்டர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் தலைமையில் அமைந்த ஒரு குழுவினரால் நடைபெற்றது. இக்குழுவில் ஒருவனாய் இருந்து பணி செய்யும் பேறு எனக்கு வாய்த்தது. பதிப்புக் குழுவில் சேர்ந்து பணிபுரிய சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவும் எனக்கு அநுமதி வழங்கியது. இக்குழுவில் என்னுடனே திருவாளர்கள் அ. ச. ஞானசம்பந்தன், மு. அருணாசலம், தெ. ஞானசுந்தரம், கா. பெ. ஞானசம்பந்தம் ஆகியோரும் இருந்தனர். பதிப்புக் குழுத் தலைவர் வகுத்துத் தந்த முறைப்படி இப்பதிப்புப்பணி நன்கு நடைபெற்றது. அச்சிடும் பொறுப்பான பணியை நான் வகிக்கநேர்ந்தது. எனக்குத் துணையாகப் புலவர் கா. பெ. ஞானசம்பந்தம் அவர்களும் அமைந்தார்கள. சென்னையில் விளங்கும் பெரிய அச்சகமாகிய ஹோ அண்டு கோவின் பிரிமியர் அச்சகம் வெகு வேகமாக அச்சிடுதற்குப் பெரிதும் உதவியது. ஆறுமாத காலத்தில் அச்சுப் பணி நிறைவேறியது ஓர் அருஞ்சாதனையேயாகும்.

இந்தப் பதிப்பு மர்ரே திரு. எஸ். ராஜம் அவர்களின் பதிப்பு முறையைப் பெரிதும் தழுவியதாயினும் நூல் முழுமைக்கும் தொடர் எண் தந்தமை, அடிக்குறிப்பில் அருஞ்சொற்களுக்குப் பொருள் விளக்கம் சேர்த்தமை இரண்டும் இதற்கே உரிய தனிச் சிறப்பு. மேலும், இடையிடையே காவியப் போக்கினைப் புலப்படுத்தும் தலைப்புக்களைக் கூடியவரை சுருக்கமும் விளக்கமுமாய் அமையக் கட்டுரைச் சுவைபடத் தந்துள்ளமையும் குறிப்பிடத் தக்கது. ஒரே தொகுதியாய் பதினாயிரத்திற்கு மேற்பட்ட பாடல்களையும் ஒருசேர 2000 பக்கங்களில் மெல்லிய காகிதத்தில் அச்சிட்டு வழங்கியமை ஒரு பெருஞ் சாதனை என்றே சொல்லவேண்டும். எந்தப் பக்கத்தைத் திறந்தாலும் உரிய காண்டமும் படலப் பெயர்களும் பக்கத் தலைப்புகளில் பளிச்சிடுகின்றன. காலிகோ மேலட்டையும் அதை மூடியுள்ள கண்ணாடி உறையும் கண்டாரைக் கவரத் தக்க வண்ணம் அழகுற அமைந்துள்ளன. எழுபத்தைந்து ரூபாய் விலையுள்ள இந்தப் பதிப்பின் ஐயாயிரம் பிரதிகளையும் ஓராண்டிற்குள்ளாகவே தமிழ்கூறும் நல்லுலகம் விரும்பி ஏற்றுக்கொண்டுள்ளது என்னும் செய்தி மிகவும் மகிழ்ச்சிக்குரியது. கம்பன் காவியம் எத்தனையளவு மக்களால் விரும்பி வரவேற்கப்படுகிறது என்பதற்கும் இது தக்க சான்றும்.

### கம்பராமாயணப் பதிப்பு நிலை

கம்பராமாயணத்தின் மூல பாடத்தை முதன் முதல் அச்சிட்டவர் திரு. வேங்கடாசல முதலியார் அவர்கள். கி. பி. 1840

* கையெழுத்துப் பிரதியாயுள்ள இந்த அகராதிகள் அச்சிடப்பெறவில்லை. ஆறு காண்டங்களுக்கும் ஒருசேர அமைந்த ஓர் அகராதி செய்வதற்கும் இது பயன்படும். கம்பராமாயணம் முழுமைக்குமான ஓர் அகராதி கம்பனை ஆழ்ந்து ஆராய்ந்து கற்பார்க்கு அவசியம் வேண்டும். திரு. அ. சுந்தரராஜன் என்பார் 'அ' முதல் 'ஔ' வரை மட்டும் கம்பன் அகராதி ஒன்றை இப்பொழுது அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார்.

தொடங்கி 1843-க்குள் கம்பராமாயணம் ஆறு காண்டத்துடன் உத்தர காண்டத்தையும் இவர் வெளியிட்டுள்ளார். இவர் 14 பிரதிகளைக்கொண்டு ஆராய்ந்து பிழைகளைத் திருத்திப் பதிப்பித்ததாகச் சுட்டியுள்ளார். இது முதற்கொண்டு கம்பராமாயணம் முழுமையாகவும் தனித் தனிக் காண்டங்களாகவும் மூலப் பதிப்பாகவும் உரையுடன் கூடியும் பல பதிப்புகளைப் பெற்றுள்ளது * எனினும், கம்பன் பாடல்களில் இடைச்செருகல்களும் பாடபேதங்களும் சரிவர அறிவியல் நோக்கில் ஆராய்ந்து பதிக்கப்பெறவில்லை என்னும் குறை இருந்துகொண்டேயிருக்கிறது.

எல்லாப் பதிப்புகளைவிடவும் கிடைத்த ஏடுகளையெல்லாம் பயன்படுத்தி ஆராய்ந்து பாடபேதக் குறிப்புகளுடன் வெளியிட்டுள்ள அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு சிறப்புடையதாகும். சந்தி பிரித்து எல்லோரும் புரிந்துகொள்ளும் நிலையில் அமைந்த மர்ரே எஸ். ராஜம் அவர்களின் வெளியீடும் பயன்படுவதாயுள்ளது.

அறிவியல் நோக்கில் கம்பராமாயண ஏடுகளையெல்லாம் இனம் பிரித்து பாடரூப பேதங்கள் எல்லாம் செவ்விய முறையில் ஆராய்ந்து துணியப்படவில்லை என்னும் குறை அறிஞர்களிடையே இன்னும் இருந்துகொண்டிருக்கிறது. இதனை அண்மையில் வெளிவந்த (1976) சென்னைக் கம்பன் கழக வெளியீட்டின் மதிப்புரையில் இடம் பெற்றுள்ள பின்வரும் வாசகங்கள் வெளிப்படுத்தும் :

"பாட பேதக் களஞ்சியத்துடன் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு விளங்கினாலும் அவற்றில் எந்தப் பாடத்தை எந்தக் காரணத்தால் மேற்கொண்டார்கள் என்கிற விளக்கம் அங்கே கிடைப்பதில்லை. அவ்வாறே ராஜம் பதிப்பிலும் இந்த விளக்கம் நமக்குத் தெளிவாவதில்லை, அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பாடபேதக் களஞ்சியத்தில் காணாத பாடங்கள் ராஜம் பதிப்பில் இருக்கும்போது அந்தப் பாடத்தின் மூல ஏடுகளைக்கண்டு கொள்ளக் கூடாத நிலையில் இருக்கிறோம்."

இவ்வுரைகளால் பாட பேதங்கள் மேலும் உரிய முறைகளில் ஆராய்ந்து கம்பராமாயணம் செம்மைப்படவேண்டும் என்பது தெரியவரும். இந்த ஆய்வு எங்ஙனம் நிகழ்த்தப்படவேண்டும் என்பதை மேலே குறிப்பிட்ட பதிப்புரையில் (பக். vii-ix) தெளிவுற விளக்கியுள்ளமை காணத்தகும். இந்த வகையான பாடபேத ஆய்வுமுறை குறித்துப் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்கள் 1950ஆம் ஆண்டு எழுதிய 'கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு' என்றும் சொற்பொழிவிலும் காணலாகும் ||

கம்பராமாயண ஏடுகளை இனம் பிரித்து முறையாக அறிஞர் குழு ஒன்று ஆராய்ந்து, தக்க நியமங்களைக்கொண்டு வரையறுத்த ஒரு பதிப்பு கம்பராமாயணத்துக்குக் கொண்டுவர வேண்டுவது அவசியமே. இத்தகைய முயற்சி மலரும் காலமும் இனித் தோன்றுதல்கூடும்

### கம்பராமாயண விளக்கங்கள்

கம்பராமாயணம் பற்றிய விளக்கவுரைகள், திறனாய்வுகள் முதலியன பலவாக வந்துள்ளன. ஆயினும் கம்பராமாயணத்தை நன்கு விளங்கிக் கொள்வதற்குத் துணைசெய்யும் வகையிலான கருவிநூல்கள் பலவாக இல்லை. முதலில் வேண்டுவது கம்பனின் சொற்களஞ்சியம்; இது உரிய விளக்கத்துடன் அமைக்கப்படல் வேண்டும். மற்றும் சிறப்புப் பெயர் விளக்கம், கதைக் குறிப்புகள், காவியத்தில் காணும் அரிய பொருட் குறிப்புகள் முதலி

---

* கம்பராமாயணப் பதிப்பு விவரம் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களின் 'கம்பன் காவியம்' என்னும் நூலில் (பக். 160-165) காணலாம்.

|| கம்பன் காவியம்: கம்பன் ஆராய்ச்சிப் பதிப்பு - பக். 64-66.

யன பற்றியும் தனித் தனி நூல்கள் வேண்டும். கம்பன் காவியத்திற்குள்ளும் முந்திய நூல்களுள்ளும் காணும் ஒப்புமைப் பகுதிகள் ஒருங்கு தொகுத்துத் தரப்படுதல் வேண்டும். உவமை மரபு முதலிய இலக்கிய மரபுகளும் தனிப்படத் தொகுக்கப் பெறல் வேண்டும். இவையெல்லாம் கம்பராமாயணக் கவிகளின் செம்பொருளைத் தெளிவாய் அறிவதற்கு உறுதுணையாம். இத்தகைய படைப்பு முயற்சிகளும் இனி வருங்காலத்தில் வளர்ந்தோங்குதல் வேண்டும்.

### ஆராய்ச்சி நூல்கள்

செம்மையான கம்பன் பதிப்பு, பொருள் விளக்கத் துணை நூல்கள் ஆகியவற்றோடு பற்பல அரும் பொருள்கள் பற்றியும் ஆராய்ச்சி நிகழ்த்தக் கம்பன் காவியத்தில் இடமுண்டு. இதுகுறித்துப் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை யவர்கள் எழுதியுள்ள ஒரு குறிப்பை இங்கே எடுத்துத் தருவது பயனுடையதாகலாம் என்று கருதுகிறேன் 'கம்பன் ஆராய்ச்சிப்பதிப்பு' என்னும் ஆய்வுரையை முடிக்கும்போது பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்:

"ஆராய்ச்சிப் பதிப்போடு கம்பனைப் பற்றிய ஆராய்ச்சி முடிந்துவிட்டது என்று கருதுதல் தவறு. எத்தனையோ வகைகளில் நாம் ஆராய்ச்சி செய்ய இடமுண்டு ஒரு சிலவற்றை இங்கே குறிப்பிடுகிறேன்:

கம்பன் பயன்படுத்திய மூல நூல்கள்
கம்பன் கண்ட தமிழகம்
கம்பன் கண்ட தமிழ்மொழி
கம்பன் கண்ட இலக்கியம்
கம்பன் கண்ட அறிவுலகு
கம்பனது கவித்துவம்
கம்பனது சிற்பத்திறம்
கம்பனது பாத்திர அமைப்பு
ஒப்பு-நோக்கு ஆராய்ச்சி
மேற்கோளோடு கூடிய நூற்பொருள் அகராதி
சொல்-தொடர் முதலியவற்றின் அகராதி
கம்பன் அகராதி
கம்பனைக் கற்க உதவும் துணை நூல்கள்
இதிகாசங்களின் இயல்புகள்

இவைபற்றித் தனித்தனி ஆராய்ச்சி நூல்கள் இயற்றப்படுதல் வேண்டும்".

கம்பன் காவியத்தில் பல்லாண்டுகள் ஈடுபாட்டுடன் ஆழ்ந்து பயின்ற பேராசிரியர் அவர்களின் உரைகள் நமக்கு வழிகாட்டியாய் அமைகின்றன அல்லவா? இத்தகைய வழிகளிலும் இனிவருங்காலத்தில் கம்பராமாயண ஆராய்ச்சிகள் நிகழ்ந்து தமிழ்வளம் மேன்மேலும் சிறந்து விளங்குவதாக.

# கம்பன் அறிமுக வரலாறு

புலவர் சுந்தரசண்முகனார்

இலக்கியம் படிப்பதன் நோக்கங்களுள் சுவையுணர்வும் ஒன்று என்பது மட்டுமன்று; அது தலையாய நோக்காகும். இலக்கியத்தைச் சுவைத்து இன்புற வேண்டும். இலக்கிய இன்பம் யாதினும் இனிது. இதுகுறித்தே,

"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு".

என்றார் திருவள்ளுவனார். நவிலுந்தோறும் நூல் (இலக்கியம்) நயம் பயக்குமாம்.

"தேருந் தொறும் இனிதாம் தமிழ் போன்று இவள் செங்கனிவாய்
ஆருந்தொறும் இனிதாய் அமிழ்தாம் என தாருயிர்க்கே".

என்று தஞ்சை வாணன் கோவையில் பொய்யா மொழிப் புலவர் கூறியிருப்பதும் ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது.

பாவேந்தர் பாரதிதாசனே,

"மங்கை யொருத்தி தரும் சுகமும்
எங்கள் மாதமிழ்க்கு ஈடில்லை".

என்று பகர்ந்துள்ளார். தமிழ் இன்பம் என்பதன் பொதுவான கருத்து இலக்கிய இன்பமாகும்.

இவ்வாறு இன்பம் பயக்கும் தமிழ் இலக்கியங்களுள் தலையாயதொன்று கம்பராமாயணமாகும். நூலுள் நுழைந்து பார்த்தாலேயே உண்மை விளங்கும். இது கம்பனுக்குப் பெரும்புகழ் நல்கும் படைப்பாகும்.

தக்கவர்கள் வாயிலாகக் கம்பனது அறிமுகம் நமக்குக் கிடைக்குமாயின் நாம் கம்பனை விடமாட்டோம். எனக்குக் கம்பனது அறிமுகம் கிடைத்த வரலாற்றை மிகச் சுருக்கமாகக் கீழே தருகிறேன்.

**அறிமுகம் செய்தவர்கள் :**

1) யான் 1935 – 36–ஆம் ஆண்டு காலத்தில், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடத்தில், புலவர் புகுமுகத் தேர்வுக்குப் (Entrance) படித்துக் கொண்டிருந்தேன். அப்போது எனக்கு வயது பதினான்கு. கம்பராமாயணத்திலிருந்து "சூளாமணிப் படலம்" பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட்டிருந்தது. மடத்தின் ஐந்தாம் பட்டத்து அடிகளாரும் அந்தக்காலத்தில் தமிழ் உலகம் முழுவதும் பெரும் புகழ்பெற்றுத் திகழ்ந்தவருமாகிய 'சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிக சிவாசாரிய அடிகளார்' எங்களுக்குச் சூளாமணிப் படலம் நடத்தினார்கள். அடிகளார் எவ்வளவோ சுவைபட நடத்தினார்கள். அந்தச் சுவை முழுவதையும் துய்ப்பதற்கு ஏற்ற வயது அப்போது இல்லையெனினும், இலக்கியச் சுவையுணர்விற்கு அடிகளாரால் வித்து ஊன்றப்பெற்றது. பொதுவாகக் கம்பராமாயணத்தில்–சிறப்பாகத் தமிழ் இலக்கியத்தில் நல்ல தேர்ச்சி பெறுவதற்கு அப்போது அடிகோலப்பட்டது. எனவே, கம்பனை எனக்கு முதலில் அறிமுகம் செய்து வைத்தவர்கள், திருப்பாதிரிப் புலியூர் (கடலூர்) ஞானியார் மடத்து ஐந்தாம் பட்டத்து அடிகளாரேயாவார்கள்.

2) புலவர் புகுமுக வகுப்பில் தேர்ந்ததும், புலவர் (வித்துவான்) பட்டப் படிப்புக்காகத் திருவையாற்று அரசர் கல்லூரியில் போய்ச் சேர்ந்தேன். கல்வி ஆண்டு 1938 – 39 என்று நினைக்கிறேன். பெரியார் புருடோத்தம நாயுடு அவர்களால், கம்பராமாயணத்தில் புலவர் வகுப்புக்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்த அயோத்தியா காண்டம் நடத்தப் பெற்றது. அப்போது வயது பதினேழு. முன்னிலும் இலக்கியத்தைச் சுவைக்கும் பயிற்சி வளர்ந்திருந்தது. பேராசிரியர் புருடோத்தம நாயுடு அவர்கள் இராமாயணப் படிப்பில் உருக்கம் ஊட்டினார்கள். நகர் நீங்கு படலம் நடத்தியபோது, இராமன் காட்டிற்குப் போகின்றானே என்ற துயரத்தால், பேராசிரியர் அவர்கள் நடு நடுவே சிறிது தேம்பி அழுததாக எனக்கு நினைவிருக்கின்றது. இந்தக் காலத்து மாணவர்கள் பலரைப்போல அந்தக் காலத்தில் நாங்கள் இல்லை அடியேன் உட்பட மாணாக்கர் பலர் கண்களிலும் நீர் துளித்த நினைவு எனக்கு இருக்கிறது. இவ்வாறு புருடோத்தம நாயுடு அவர்கள், உருக்கத்துடன்–பக்திச் சுவையுடன் கம்ப இராமாயணத்தைப் படிக்கும் பான்மையில் கம்பனை அறிமுகப்படுத்தினார்கள்.

அவர்கள் பின்னர்ச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராய் அமர்ந்து நாலாயிரத் திவ்வியப் பிரபந்த வியாக்கியான ஈட்டிற்கு விளக்கம் எழுதிப்பெரும் புகழ் பெற்றதைத் தமிழுலகம் நன்கு அறியும். இத்தகைய பெரியோராலும் கம்பனது அறிமுகம் எனக்குக் கிடைத்தது எனது நற் பேறே.

3) 1940-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் முதல்நாள் அடியேன் மயிலம் தமிழ்க் கல்லூரியில் விரிவுரையாளனாய் அமர்ந்தேன். பல ஆண்டுகள் மயிலம் கல்லூரியில் பணி புரிந்தேன். அப்போது புலவர் வகுப்புக்குக் கம்பராமாயணப் பாடம் நடத்தும் பொறுப்பு என்னிடமே விடப்பட்டது. புலவர் வகுப்பிற்குப் பாடம் நடத்த வேண்டும் என்பதனால், கம்பராமாயணத்தை ஓரளவு துருவியும் ஆழமாகவும் படிக்கவேண்டிய கட்டாயம் எனக்கு ஏற்பட்டது. இவ்வாறு இயற்கையாகவும் கம்பனது அறிமுகம் எனக்குக் கிடைத்தது.

4) 1942–ஆம் ஆண்டு சனவரித் திங்களில் என் தாயாரும், மார்ச்சுத் திங்களில் என் தந்தையாரும் இறந்து போயினர். இரண்டு திங்கள் இடைவெளியில் பெற்றோர் இருவரையும் இழந்துவிட்ட நான் மிகவும் சோர்ந்து போனேன். எங்கட்கு மூன்று திங்கள் காலம் கோடை விடுமுறை விடப்பட்டது. விடுமுறை தொடங்கிய சிலநாளில், ஆறுதலுக்காக ஊரிலிருந்து மயிலம்சென்றேன். அப்போது அங்கே முதுபெரும் புலவர் தோரமங்கலம் அ. வரதநஞ்சையப்பிள்ளை வந்திருந்தார்கள். சொற்பொழிவிற்காக அவர்கள் இதற்குமுன்பும் சிலமுறை வந்திருக்கின்றார்கள். அதனால் அவரது தொடர்பு முன்னமேயே எனக்கு உண்டு.

பெரியார் வரதநஞ்சையப் பிள்ளையவர்களைப் பற்றிச் சில சொற்கள் சொல்ல வேண்டும். அவர்கள் தமிழில் ஆழ்ந்த புலமை யுடையவர்கள். அவர்தம் தமிழ் வாழ்த்துப் பாடல்கள் மிகச் சிறந்தவை. அவர்கள் இயற்றிய 'தமிழரசுக் குறவஞ்சி' என்னும் இனிய நூல், கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழாவில் அரங்கேற்றப் பெற்று அவர்கட்குப் பெரும்புகழும் பேரும் பெற்றுத் தந்தது. அவர்கள் எப்போதும் நகைச்சுவையோடு பேசும் இயல்பினர். ஒருநாள் ஒருவர் சாவியைத் தொலைத்துவிட்டு, 'என் சாவி எங்கே எங்கே' என்று வினவிக்கொண்டிருந்தார். புலவர் அவர்கள் அவரை நோக்கி, 'சாவி சாவி என்று உசாவிக் கொண்டு இருக்கிறீர்களே' என்று கூறி அனைவரையும் நகைப்பில் ஆழ்த்தினார்கள். ஒருநாள் ஒருவர் மோட்டார் காரை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். புலவர் அவர்கள் அவரை நோக்கி "கார் வரவில்லையா? நீ சிறிது நேரம் கார் (காத்திரு); சரி இப்படி உட்**கார்**. நீ விரும்பு**கார்** வராததனால் ஒரே புகார் ஏற்பட்டிருக்கிறது" என்றெல்லாம் வேடிக்கையாகப் பேசினார்கள். இன்னும் இவ்வாறு பற்பல கூறலாம்.

இத்தகைய பெரும் புலவர் அவர்கள், இருபது வயதுடைய என்னை நோக்கி, "தம்பி, இந்தப் பயணத்தில் நீ சிறிது சோர்வாகக் காணப்படுகிருயே! காரணம் என்ன" என்று வினவினுர்கள். இரண்டு திங்கள் இடைவெளியில் பெற்ருேர் இருவரையும் இழந்துவிட்ட இரங்கத்தக்க எனது நிலையை யான் அவர்கட்குத் தெரிவித்தேன். உடனே புலவர் அவர்கள் எனக்குத் தக்க ஆறுதல் கூறி, "உனக்கு இப்போது விடுமுறைதானே! இந்த விடுமுறைக் காலத்தில் என்னுடனேயே இரு" என்று பணித்தார்கள். அவ்வாறே நான் அவருடனே இருந்தேன். அவர் சொற்பொழிவிற்காகச் சென்ற பல ஊர்கட்கு அவருடனே யானும் சென்றேன். அவர்தம் சொற்பொழிவின் தலைப்புக்கள் பெரும்பாலும் கம்பராமாயணத்திலிருந்தே கொடுக்கப்பட்டன. சொற்சுவை பொருட்சுவையுடன் நகைச்சுவையும் கலந்து பேசுவதில் அவர்கள்மிகவும் வல்லவர்கள். சொற்சுவை, பொருட்சுவை, நகைச்சுவையுடன், ஆழமான கருத்தும் கொண்ட அவர்தம் கம்பராமாயணச் சொற்பொழிவுகளைக் கேட்ட யான் கம்பனிடத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டேன். எனக்கு ஆழ்ந்த அறிமுகம் கிடைத்தது. நாம் கம்ப ராமாயணச் சொற்பொழிவு ஆற்றும்போதும், கம்ப ராமாயணப் பாடம் நடத்தும்போதும் இவ்வாறே சொற் சுவை பொருட்சுவைகளை எடுத்து மொழிய வேண்டும் என எனக்குள்ளே உறுதி பூண்டேன்.

5) அடுத்து, மகா மகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்களின் கம்பராமாயணச் சொற்பொழிவுகள் சிலவற்றைக் கேட்டேன். ஒரு முறை அவர்கள் தலைமையில், "குறிப்பினுல் உணரும் கொள்கையான்" என்னும் கம்பராமாயணப் பாடல் தொடரைத் தலைப்பாகத் தந்து சொற்பொழிவும் ஆற்றியுள்ளேன். இலக்கியத்திற்குச் சொல்நயம் பொருள் நயம் சொல்வதில் பண்டிதமணியவர்கள் மிகவும் வல்லுநர். அவர்தம் கம்ப ராமாயணச் சொற்பொழிவுகள் சிலவும், கம்பனைப்பற்றி எனக்கு மிகவும் ஆழமாக அறிமுகம் செய்துகாட்டின.

எனவே, யானும் சொற்பொழிவுகட்குக் கம்பராமாயணத்திலிருந்து தலைப்பு கொடுக்கலானேன். கான மயில் ஆடக் கண்டிருந்த வான்கோழி போல, யானும் சொற்சுவை பொருட்சுவை கூறலானேன். மயிலம் கல்லூரியில் கம்ப ராமாயணப் பாடம் நடத்தியபோது, சொல்நயம் பொருள்நயம் கூறி மிகவும் அலட்டிக் கொண்டேன். கம்பனை முற்ற முழுதும் சுவைக்க வேண்டும் என விரும்பினேன். 1943ஆம் ஆண்டு, மூன்று திங்கள் காலம் கோடை விடுமுறை விட்டார்கள். அப்போது கல்லூரி நூல் நிலையத்திலிருந்து கம்ப ராமாயணம் ஆறு காண்டங்களையும் வீட்டிற்கு எடுத்து வந்துவிட்டேன். காலையிலிருந்து மாலைவரை வீட்டுத் திண்ணையில் அமர்ந்துகொண்டு ஆறு காண்டங்களையும் மனநிறைவோடு படித்து முடித்தேன். நூற்றுக் கணக்கான பாடல்களை மனப்பாடம் செய்தேன்.

இது நிற்க, கம்பனை எனக்கு அறிமுகம் செய்தவர்கள் நன்ருக அறிமுகம் செய்து காட்டியுள்ளார்கள் என்பதற்கும், யானும் ஓரளவேனும் கம்பனைக் கண்டுகொண்டுள்ளேன் என்பதற்கும் சான்று தரவேண்டுமல்லவா ? இதோ ஒன்று தருகிறேன்:-

தென்னுர்க்காடு மாவட்டத்தில் சங்கராபரணி ஆற்றின் வட கரையில் கொடுக்கூர் என்னும் திருமால் திருப்பதி ஒன்றுள்ளது. ஒரு முறை அந்த ஊருக்கு யான் சொற்பொழி வாற்றச் சென்றிருந்தேன். சொற்பொழிவின் தலைப்பு "ஒரு நாள் பழகிய உத்தமன்" என்பது. அஃதாவது, குகனைப் பற்றியதாகும் அது. அவைத் தலைவர் உயர்திரு. க. இராமநாதன் செட்டியார், B A., B. L. ஆவார் இவர் நல்ல தமிழறிஞர்; சென்னையில் வழக்கறிஞர் தொழில் புரிந்தவர்; சென்னை சைவ சித்தாந்த மகா சமாசத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர்; பொதுத் தொண்டு புரிவதில் ஆர்வம் மிக்கவர்; வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் மலேயா

சென்று தங்கி, அங்குள்ள இந்தியர் சங்கத்தின் தலைவராய்ப் பணி புரிந்தவர். இப்பெரியாரது தலைமையில் யான் சொற்பொழிவாற்றி முடித்து அமர்ந்தேன். அப்போது எனக்கு வயது இருபத்தொன்று தொடங்கியிருந்தது.

யான் பேசி அமர்ந்தவுடனே, அங்கிருந்த ஐயங்கார் பெரியார் ஒருவர் எழுந்து தலைவரிடம் சென்று, "இந்தத் தம்பி பேசியதைப்பற்றி யான் சிறிது பேசவேண்டும்; ஒப்புதல் அளியுங்கள்" என்று கேட்டார். தலைவர் தயங்கினர். அந்தக் கிழவனரை நோக்கி, "பேசியவர் சிறு பிள்ளை; ஏதோ குற்றங்குறை இருந்தாலும் பெரியவர்களாகிய நாம் பொறுத்துக் கொள்ளவேண்டும்; எனவே, இதோடு விட்டுவிடுங்கள்" என்று தலைவர் கேட்டுக்கொண்டார். "நான் என்ன பேசப் போகிறேன் — எப்படி பேசப் போகிறேன் என்பதைச் சிறிது நேரம் எனக்குக் கொடுத்துப் பாருங்கள்" என்று பெரியவர் வற்புறுத்தினர். பிறகு தலைவர் பெரியவர் பேச ஒப்புதல் அளித்தார். பெரியவர் பேசியதின் சாரத்தை மட்டும் சுருக்கமாக இங்கே தருகிறேன். "சுந்தர சண்முகம் இளம் பிள்ளையாயிருப்பினும் இவ்வளவு சிறப்பாகச் சொற்பொழிவாற்றினரே! நான் வசதியுடையவனயிருந்தால் அவருக்குக் 'கனகாபிஷேகம்' செய்வேன்" என்பதுபோலத் தொடங்கி என்னை மிகவும் புகழ்ந்து பாராட்டி வாழ்த்தினர், இது நிற்க—

1943 டிசம்பர் இறுதியில், சீர்காழியில், சைவ சித்தாந்த சமாச இளைஞர் மாநாடு நடைபெற்றது. மாநாட்டின் தலைவர் முன்பு சொன்ன க. இராமநாதன் செட்டியார் அவர்களே. யானும் அம் மாநாட்டில் அவர் தலைமையில் சொற்பொழிவாற்றினேன். யான் பேசத் தொடங்கு முன், தலைவர் என்னைக் கூட்டத்தினருக்கு அறிமுகப்படுத்து முகத்தான், கொடுக்கூரில் ஐயங்கார் பெரியவர் எனக்குக் கனகாபிஷேகம் செய்யவேண்டும் என்று பாராட்டிப் பேசினரே – அந்த நிகழ்ச்சியைக் கூட்டத்தில் எடுத்துக்கூறி, அத்தகைய பாராட்டுதலுக்கு உரிய சுந்தர சண்முகம் இப்பொழுது பேசப்போகிறார் என்று என்னைக் கூட்டத்தாருக்கு அறிமுகப்படுத்தினர்.

ஐயையோ! என்னைப்பற்றி மிகுதியாகச் சொல்லிவிட்டேன் போல் இருக்கிறதே! மன்னிக்கவேண்டுகிறேன். ஒரு சான்ருயினும் தந்தால்தானே, கம்பன் எனக்கு ஓரளவேனும் நன்ருக அறிமுகம் செய்துவைக்கப் பெற்றுள்ளான் என்பது மெய்யாகும்.

அடியேனுக்குக் கம்பனை அறிமுகம் செய்துவைத்த பெரியார்கள் அனைவருக்கும் நன்றி செலுத்துகிறேன். கம்பன் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க!

# கொங்குப் பெருமக்களிடையே கம்பர் பெருமான்

கு. அருணாசலக் கவுண்டர்

## முன்னுரை

கடந்த 50 ஆண்டுகளாகத் தமிழ் மக்களின் கலை வாழ்வும் இலக்கிய வாழ்வும் தற்காலக்கல்வியின் பயனுய் மறுமலர்ச்சி அடைந்து புத்துயிர் பெற்று வருவது கண்கூடு. இந்த மறுமலர்ச்சி சகாப்தத்திலே பாரதியார் தோன்றி, உயிரும் உணர்வும் உறுதியும் உள்ள கவிதை உரைநடை நூல்களைப் படைத்துச் சக்தி வாய்ந்த எழுத்தாளர் பரம்பரையைத் தமிழிலே தோற்றுவித்து மறைந்தது மிகப் பெரிய சம்பவம். இதற்கு அடித்தபடியாகக் குறிப்பிடக்கூடியது, கடந்த 38 ஆண்டுகளாகவே தமிழகத்திலே தோன்றி வளர்ந்துவரும் கம்பன் இயக்கமே. மிகப் பெரிய கல்விமானும் சிறந்த தேசபக்தரும் ஆகிய வ. வே. சு. ஐயரவர்கள் இந்த இயக்கத்தின் மூன்னேடி. இவர் கம்பன் காவியத்தை மேனுட்டு இலக்கிய விமர்சனக் கொள்கைகளை வைத்து ஆராய்ந்து, கம்பர் உலக மகாகவிகளில் ஒருவர் என்பதை மெய்ப்பித்து, அது வேறு எந்த மொழியிலும் உள்ள பேரிலக் கியங்களுக்கும் அதனுடைய முன்னூலாகிய வான்மீகத்துக்கும் மேம்பட்டது என்றுர்.

இதே காலத்திலே திருநெல்வேலியில் சில தமிழறிஞர்கள் கம்பராமாயணத்திலே ஈடுபட்டு, அதைக் கற்றுத்தேர்ந்து அதன் ஏற்றங்களைத் தற்கால முறையிலே பிரசாரம் செய்துவந்தார்கள். கம்பனுக்குத் திருநாள் எடுத்தார்கள். இவர்களிலே வெ. ப. சு, டி. கே. சி, பால் நாடார், எஸ். வையாபுரிப் பிள்ளை; ரா. பி. சேதுப் பிள்ளை; ஏ. பி சுப்பிரமணி ஐயர், பி. ஸ்ரீ முக்கியமானவர்கள். இவர்கள் தரம் அறிந்து விமர்சனப்பாங்கிலே கம்பரைப் போற்றிவந்தது நாளடைவிலே ஓர் இலக்கமாகப் பரிணமித்தது; அதுவே கம்பன் இயக்கம்.

கம்பன் இயக்கம் செட்டி நாட்டிலே வேரூன்றி வளர்ந்தது. தமிழ்க்கடல் ராய. சொ. முருகப்பா போன்றுர் அதன் முன்னணியிலே நின்றனர். சா. கணேசன் அவர்களைச் செயலாளராய்க் கொண்டு காரைக்குடியிலே கம்பன் கழகம் தோன்றித் தமிழ்நாடெங்கும் உள்ள கம்பன் அபிமானிகளை ஒன்றுசேர்த்துக் கம்பனின் கவிப்பண்பைச் சாமானியரும் அறிந்து அனுபவிக்கும் முறையில் சொற்பொழிவுகளை அமைத்தும் கம்பனுடைய ஆராய்ச்சிப் பதிப்புக்கு உதவியும் தேசீயப் பணியாகவே அதைச் செய்து வருகிறது. என் போன்ற தமிழாசிரியர்களையும் கம்பனுடைய காவியக் கட்டுக் கோப்பு கவிதை நயம் பாத்திரப் படைப்பு, கதைவளரும் பான்மை, நாடக பாவம் முதலிய இலக்கிய விமர்சனத்துறையிலே முறையான பயிற்சி தந்து கம்பன் உணர்விலே வளர்த்து வருகிறது.

கம்பன் இயக்கத்திலே அடித்தொண்டனுய் இணைத்துக்கொண்டு பாஸ்கரத் தொண்டைமான், அ. சீ. ரா. போன்ருருடன் ஆரம்பகாலத்திருந்து பங்கேற்று வந்தது என்பாக்கியந்தான்; இதற்கு என் 'பாரம்பரியம்' ஓரளவு காரணமாகலாம். இதை நினைவுகூர்ந்து 'கொங்குப் பெருமக்களிடையே கம்பர் பெருமான்' என்ற கட்டுரையிலே கோடிட்டுக் காட்ட முயலுகிறேன். இம்முயற்சியின் தரத்தை வாசகர் கணிப்பாராக.

### 1. கொங்கு நாடும் அதன் பெருமக்களும்

சேலம் கோயமுத்தூர் மாவட்டங்களும், தர்மபுரி கரூர் பழனித் தாலூக்காக்களும், குளித்தலை திண்டுக்கல் தாலூக்காக்களின் பகுதிகளும் சேர்ந்தமைந்த பிரதேசமே கொங்குநாடு அங்லது கொங்குமண்டலம். இதன் கிழக்கெல்லை கொல்லிமலை; மேற்கெல்லை மேல்காற்று மலைத்தொடர்; தெற்கெல்லை பழனி என்ற வராகமலைத் தொடர்; மைசூர்ப் பீடபூமியின் தலைமலை மாருதகான மலை தொப்பூர் மலை அதன் வடக்கெல்லை. இவ்வெல்லையிலே ஊடறுத்தோடும் காவிரியின் வட புலம் வட கொங்கு; தென்புலம் தென் கொங்கு; மேற்குப் பகுதி மீகொங்கு அல்லது மேல் கொங்கு; கிழக்குப் பகுதி கீழ் கொங்கு அல்லது மழவம்.

கொங்கு, 24 நாடுகளாகப் பிரிக்கப்பட்டு, ஐந்நூற்றுக்கு மேற்பட்ட பழவிறல் மூதூர்களைக்கொண்டு விளங்குகிறது. இப் பிரிவினையும் ஊர்ப் பெயர்களும் கி. பி. 9-ம் நூற்றுண்டிலேயே வழக்கில் இருந்தன என்பது சுந்தரமூர்த்தி நாயனுர் குரக்குத்தளி என்ற வைப்புத் தலத்தை குறிப்பிடும்போது அது கொங்கின் குறும்பு நாட்டிலே உள்ளது என்று கூறுவதால் புலனுகிறது குறும்பு நாடு என்பது ஈரோடு தாலூகாவின் மேற்குப் பகுதி.

சங்ககாலம் அதாவது கிறிஸ்தவப்தத்தின் தொடக்கம் முதல் குறும்பர் கோசர் கோங்கர் வேளிர்க்கு உரிய தனி நாடாகவே கொங்கு தழைத்து வந்திருக்கிறது, கி. பி, முதல் நூற்றுண்டுக்கு உரிய அதன் வரலாற்றைச் சங்க இலக்கியம் பிரதிபலிக்கிறது. இப் பிரதிபலிப்பைப் புதைபொருள் ஆராய்ச்சி உறுதி செய்கிறது. பல சிறு நாடுகளாகப் பிரிந்து, காரி பாரி ஓரி அதியன் ஆவி அனைய வேளிர்களது ஆட்சியிலே ஆதிக்கப் போட்டியாலும் மூவேந்தர் தலை ஈட்டாலும் கொங்கு சின்னுபின்னப்பட்டிருத்தது; எனினும் அதன் பயிர்த் தொழிலும் செய்தொழிலும் செழித்தோங்கி நாட்டிலே சுப்பிட்சம் நிலவியது அதன் வர்த்தகமும் வணிகமும் பெருகிச் செழித்திருந்ததற்கு கி. பி. முதல் இருநூற்றுண்டுக்குரிய ரோம நாணயங்கள் பொன் வெள்ளியால் ஆனவை. வேறு எங்கும் இல்லாத அளவு குவியல் குவியலாக அங்கே அகப்பட்டுள்ளவை சான்ருகிறது.

கி. பி. மூன்ரும் நூற்ருண்டு முதல் ஏழாம் நூற்ருண்டு முடிய முதலிலே ராட்டிரர்களும் பின்னர்க் கங்கர்களும் காங்கயத்தையும் தாராபுரத்தையும் தலைக்காட்டையும் ராசதானியாகக் கொண்டு கொங்கு நாட்டின் பெரும் பகுதியைக் கட்டிக் காத்துவந்தனர். கங்கர் ஆளுகையிலே கொங்க ராச்சியம் மைசூர்ப் பீடபூமி முழுவதும் பரவி, துங்கபத்திரை நதி வரையிலும் வியாபித்திருந்தது. இடைக்காலத்திலே பாண்டியர் சோழரது ஆதிக்கப் போட்டியிலே கொங்கு அலைக்கழிக்கப்பட்டது; எனினும் கி. பி. 1000–1300 என்ற இந்தக் காலக் கட்டத்தைக் கொங்கு நாட்டின் பொற்காலம் என்னலாம். கொங்குச் சோழரது வலுவான சுயாட்சி நிலவியது விவசாயப் பொருளாதார அடிப்படையிலே கட்டுப்பாடான வேளாண்மைச் சமுதாயக் கோப்பு உருவாகித் தழைத்தது.

60 குல மாட்சியரான இச்சமுதாயத்தார் காணியாளராய் வாழ்கிற கொங்கு 24 நர்டுகளிலும் அவற்றின் நானூற்றுக்கு மேற்பட்ட பழவிறல் மூதூர்களிலே தங்கள் பண்பாட்டின் சின்னமாய்க் கம்பீரமான கட்டுமானக் கோயில்களைத் தோற்றுவித்தனர். 700, 800 ஆண்டுகளுக்கு முற்பட்ட இவற்றின் தனிப்பெருஞ் சிறப்பு யாதெனின் சிவாலயம் பெருமாள் கோயில் அம்மன் கோயில் மூன்றும் ஒருசேர அடுத்தடுத்து அமைந்து, 'யாரினும் உயர்ந்த மூலத்து ஒரு வராம்' ஏகமூர்த்தியே அரி அரன் அம்பாளாகத் திகழ்கிறது என்ற சீரிய தத்துவத்தின் விளக்கமாக அவை தோன்றுவதுதான்.

சமயவாதிகள் தத்தம் மதங்களில் அமைவதாக அரற்றிமலையும் சமயாதீதப் பழம்பொருளான பரமபதியே கம்பரது காவியத்தில் கோயில் கொண்டிருப்பது. அதனுல் திருமாலே இராமனுக அவதரித்

தான் என்ற வழிவழி நம்பிக்கையோடு மும்மையில் விளங்கும் ஒருமையாம் பரம் பொருளே இராமனாகத்தோன்றியது என்று துணிந்து சொல்வார், அவர்.

"அரன் அதிகன் உலகளந்த அரி
அதிகன்
என்றுரைக்கும் அறிவிலார்க்குப்
பரகதி இல்லை என்று ஓங்கிப்
பேசுவார்."

இந்த சமய சமரசநோக்கின் தன்நிகர் இல்லாத விளக்கமாகவே கொங்குப் பெருமக்கள் தங்கள் கிராமங்களிலே அரிகரன் அம்பாளுக்குக் கோயில்சமைத்தனர். அத்வைதமெய்ஞ்ஞானி ஆதிசங்கரர் வகுத்தருளிய சர்வமத வழிபாட்டு முறையிலும், உண்மை ஒன்றே அதை உயர்ந்தோர் பலபெயர்களில் அழைப்பர் என்று ரிக் வேத அடிப்படையிலும் சைவம் சாக்தம் வைணவம் முதலிய சமரசத் தன்மையில் தழைத்தோங்கும் சூழ்நிலை.

ரத்னத்ரயமாய்ச் சமைந்த இக் கோயில்களை 60 குலமாட்சியரான கொங்கு வேளாளரும் பிறரும் குலக்காணி முறைமையில் பரிபாலித்துவரப்பண்டே ஏற்பாடாகியிருந்தது சிந்தனைக்கு உரியது. காணிமுறைமையாவது, முற்பாடு பிற்பாடு என்னும் மரியாதைகளை வரன்முறை தவறாது அடைந்து ஆலயப் பராமரிப்புடன் ஊராட்சியும் புரிவது. ஆளுநரான இத்தலைவர்களைக் காணியாளர் என்பர், வேளிர் என்பர். வேளிரா்வர் காணியாளர், காணியாளராவார் சாமந்தர், சாமந்தராவார் சிற்றரசர், சிற்றரசாவார் வீழ்குடி உழவர்'–இவ்வாறு அடியார்க்கு நல்லார் கூறுவதால் கி. பி. 13–ம் நூற்றாண்டின் முன்னமேயே கொங்கு 24 நாடுகளிலும் குலக்காணி முறை சமைந்திருந்தது என்று யூகிக்காலம். 20–ம் நூற்றாண்டாகிய தற்போதுகூட இந்தக் காணிமுறைமையில் பழங் கோயில்கள் பரிபாலிக்கப்பட்டு வருவது கண்கூடு.

## 2. சாத்தந்தை சடையன்

தொன்மையான வரலாற்றுப் பெருமையும் பண்பாட்டுச் சிறப்பும் பெற்றிருந்த கொங்குப் பெருங்குடி மக்களிடையே, கம்பர் பெருமான் சஞ்சரித்து வந்தபோது நிகழ்ந்தசம்பவங்கள் சில செவிவழிச்செய்தியாய்வந்து, 300 ஆண்டுகளுக்கு முன்னமேயே இலக்கியம் ஏறியிருப்பதை அந்நாட்டுச் சதகங்களிலே* அன்றி, தனிப் பாடல்களிலும் காண்கிறோம்; சாசனங்களும் அவற்றை உறுதிசெய்யாமல்இல்லை. இவற்றால் அந்நாட்டு மக்கள் கம்பரை அவரது பெருமைக்கு ஏற்ப எப்படி எல்லாம் போற்றியிருக்கிறார்கள் என்பதை அறிகிறோம்.

திருமுனைப் பாடி என்ற நடுநாட்டிலே வெண்ணெய் நல்லூரைத் தலைமை இடமாக்கொண்டு திருக்கோவலூர்–புதுச்சேரி வரை ஆதிக்கம் செலுத்திவந்த சடையப்ப வள்ளலை நாம் அறிவோம். பதினொன்று பன்னிரண்டாம் நூற்றாண்டிலே வாழ்ந்திருந்த இவர், பேரரசரால் பெரிதும் மதிக்கப்பெற்றுப் பரம்பரைப் பண்பாகிய வள்ளன்மையுடன் தமிழ்ப்புலமையும் வாய்ந்திருந்தார். கவிச்சக்கரவர்த்தி ஆகியகம்பர் பெருமானைக் கொண்டு இராமாவதாரம் பாடுவித்துத் தமக்கும் தமிழுக்கும் அழியாப் புகழைத் தேடிக்கொண்டவர் அல்லவா அவர்?.

* வெண்ணெய் நல்லூர்ச் சாத்தந்தை குலத்தான் ஆகிய சடையன், வாலசுந்தரக் கவிராயரைக் கொண்டு கொங்கு மண்டல சதகம் செய்வித்தான் என்று அந்நூல் கூறுவதால், இதன் பதிப்பாசிரியர் தெய்வசிகாமணிக் கவுண்டரவர்கள் அக்காலத்தைக் கி. பி. 12–ம் நூற்றாண்டு என்று கணிப்பார். சதகத்தைப் பாடுவித்த சடையன், கம்பர் அபிமானி ஆன சடையவள்ளலின் வழிவந்தோன் ஆதல் கூடும். இவன் காலம் கி. பி 16–ம் நூற்றாண்டாகலாம். சுமார் 50 ஆண்டுகளுக்குமுன் கார்மேகக் கவிஞர் செய்த கொங்கு மண்டல சதகத்தைத்திருச் செங்கோடு முத்துசாமிக் கோனார் பதிப்பித்திருக்கிறார்.

இந்தச் சடையனைக் கொங்கு வேளிருள் ஒருவன் என்று இனங்காட்டுகிறது அந்நாட்டுச் சதகம். கொங்கு வேளாளரிலே அவர் சாத்தந்தை குலத்தைச் சேர்ந்தவராம்.* தமிழ்நாட்டிலே கரும்பை முதன்முதல் அறிமுகப் படுத்திய கொங்கு வேள் ஆன அதியமான் போலவே, நெற் பயிரிலே சம்பா என்ற வகையை முதன் முதல் தேற்றுவித்தவர் இச் சடையன் தானும்-வா. ச. பா. 101

கொங்கு நாட்டின் எல்லை, சரித சம்பவங்களால் காலாகாலங்களில் விரிவடைந்தும் சுருங்கியும் வந்திருப்பதை நாம் அறிவோம். கி. பி. 15-ம் நூற்றுண்டிலே கூடக் கொங்கர் குலம் ஒன்றிலே தோன்றி (திருக்கோவிலூர்ப் பிரதேசம்) நடு நாட்டிலே உள்ள வக்கபாகை என்னும் ஊரைத் தலைமை இடமாகக்கோண்டு ஆட்சி நடத்திய வரபதி ஆட்கொண்டான், வில்லிபுத்தூர் ஆழ்வாரைக்கொண்டு பாரதம் பாடச்செய்தான் அல்லவா? பெருங்கதை போல இதிகாசங்கள் இரண்டுமே கொங்கு வேளிரால் தமிழுக்குக் கிடைத்த சம்பத்துத்தான். அந்நடு நாட்டில் கொங்கர் ஆதிக்கம் பரவியிருந்த கி. பி 12-ம் நூற்றுண்டளவிலே கொங்குச் சாத்தந்தை குலத்தைச் சேர்ந்த சடையன் பாலாற்றங்கரை வெண்ணெய் நல்லூரிலே இருந்துதான் கம்பர் பெருமானைக் கொண்டு இராமாவதாரம் பாடுவித்து அரங்கேற்றியது. இவ் அரங்கேற்ற நாளைக் 'கலியுகம் ஆயிரம் ஐம்பத் தொன்று' அதாவது கலியுகத்திலே நிகழும் சாலிவாகன சகாப்தம் 1051-கி. பி. 1129 என்கிறது கொங்குச் சதகம் 65 தெளிவாயும் தீர்மானமாயும் அச் சதகம் கூறும் காலக் கணிப்பை அறிஞர் ஆய்வுக்குச் சமர்ப்பிக்கிறேன் ||

---

* சாத்தந்தை கோத்திரன் பண்ணைகு லேந்திரன் தமிழ்ச்சடையன்.
கோத்திரம் நாற்பத்துஎண்ணுயிரம் என்னும் குலம் விளங்க
ஆத்திப நல்லூர் கலியுகம் ஆயிரம் ஐம்பத் தொன்றில்
வாழ்த்துவர் கங்கையின் வங்கிசத் தோர் கொங்கு மண்டலமே. வா. பா. 65.
பண்ணைகுலாதிபன் கம்பர்செய் ராமர் பனுவலதைப்
பெண்ணை நல் லாறுஉள்ளளவும் புகழும் பெருமைகண்டு
வெண்ணை நல் லூரான் அசோதைக்கு மைந்தன் நல் வெண்ணைஉண்டு
மண்ணையும் உண்டவன் பாதம்வைத்தான் கொங்கு மண்டலமே. வா. பா 66.
பெண்ணை நல் லாறும் திருக்கோவ லூரும் பிரபலமும்
வெண்ணை நல் லூரும் சடையன்நல் வாழ்வை விளங்கு சம்பாப்
பண்ணை குலாதிபன் தொண்ணூறும் ஆறும் பரவுபுகழ்
மண்ணையும் வெண்ணையும் உண்டவன் வாழ்கொங்கு மண்டமே வா. பா. 109.

|| இராமவதாரம் அரங்கேறிய காலத்தைக்கூறும் புறச் சான்றுகள் இரண்டே.
1. எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழின் மேல் என்று தொடங்கும் தனியன் பாடல் ஒன்று. சமீபகாலப் புனைந்துரை என்று அதைப் புறக்கணிப்பார் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்கள். பழங்கால மெய்யுரையே அது என்று கருதும் சா. கணேசன் அவர்கள் அதன்படி அரங்கேற்ற நாளைச் சகம் 807-கி. பி. 886 பெப் 23 என்று நாள் திதி நட்சத்திரங்களையும் கணிப்பார் இக்கணிப்பு, காவியம் பிரதிபலிக்கும் சூழ்நிலைக்குப் பொருந்துவதாய் இல்லை என்று கருதும் ரா. ராகவையங்கார் அவர்கள் 'என் நூற்றேழு' என்று பிரித்து, அதனுடன் ஆயிரத்தைச் சேர்த்து, சகம் 1107 - கி. பி. 1185 என்பார்.

2. ஆவின் கொடைச் சகரர் ஆயிரத்து நூறு ஒழித்து என்று தொடங்கும் தனிப் பாடலைச் சான்றுய்க்கொண்டு சகம் 1100 - கி. பி. 1178 என்பர் சிலர்; வேறு சிலர் அது பொருந்தாது என்று ஆயிரத்தில் நூறு ஒழித்து சகம் 900-கி. பி. 978 என்பர். இப் பாடலையே அபத்தம் என்று புறக்கணிப்பாரும் உண்டு.

### 3. கம்பருக்கு அடிமை புகுந்தது

தமது இராம கதையைத் தமிழ் மக்களுக்குக் குலதனமாக அரங்கேற்றித் தந்த அத்திருநாளிலே இராமர் பட்டாபிஷேக வைபவத்தைப்பகரும்

அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன் வெண் குடைகவிக்க
இருவரும் கவரிபற்ற
விரிகடல் உலகம் ஏத்தும்
வெண்ணைமன் சடையன் வண்மை
மாபுளோன் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான்மௌலி

என்ற சிறப்புமிக்க செய்யுளைக் கேட்டதும் அங்கே கூடியிருந்த கொங்குப் பெருமக்கள் காவியத்தின் மணிமாமகுடமாய்க் கம்பர் தங்களுக்குத் தந்திருக்கும் கவுரவத்துக்குப் பிரதியாகத் தங்களையே அவர்க்கு அடிமை ஆக்கினர்களாம். இவ்வாறு அடிமை புகுந்தவர்களிலே செம்பர் வண்ணக்கர் வெண்டுவர் ஒதான குலத்தாரை இனங் காட்டுகிறது வாலசுந்தரரது கொங்கு சதகம். இவர்கள் பரம்பரைப் பண்பான வள்ளன்மை விருந்தோம்பற் சிறப்போடு அதற்கேற்ற செல்வமும் நிலபுலமும் வாய்க்கப்பெற்றுக் காணியாளராய் கொங்கு நாடெங்கும் வாழ்பவர். இவர்களிலே வெண்டுவ குலத்தீத்தான் கம்பனுக்குத் தண்டிகை தாங்கியும், காளஞ்சி ஏந்தியும் சம்மாளி (காலணி) தூக்கியும் பணிசெய்து தனது அடிமைத் திறத்தை வெளிப் படுத்தினனும். வா. ச. 83 மசக்காளிவேலன், கம்பரைப் பல்லக்கிலே இருத்திப் பரிவுடன் தாங்கிப் பவனி வந்து கொலுவைத்துக் கும்பிட்டு அவர் அன்புக்குப்பாத்திரம் ஆனனும். வா. ச. 85 வண்ணக்க குலமுதல்வன் நல்லான் தன்னையே கம்பர்க்குச் சமர்ப்பித்து அவருடைய தொண்டிலே தன்னை ஈடுபடுத்திக் கொண்டானும். வா ச. 100. செம்பர் குலத் தோன்றல் அமராபதி, தான் கம்பன் அடிமை என்பது மெய்யானல் இந்த நல்ல பாம்புதன்னைக் கடிக்காது என்று புற்றரவின் வாயிலே கை இட்டபோது, அவன் கையிலே மாணிக்கத்தைக் கக்கியதாம். வா. ச. 80. ஓதாள குலத்து ஆண்டான் 'தமிழ்க் கம்பநாடர்கள்' ஆயிரம் பேர்க்கு அன்னம் பாலித்து அடியார்க்கு அடியனுய் அவர்களை ஆதரித்து வந்தானும்: கம்பநாடர்கள் என்றது கம்பர் அபிமானிகளை. வா. ச. 89.

கம்பர் காலத்திலேயே நிகழ்ந்ததாகக் கூறப்பெறும் இவ்விதக் கதைகளுக்குச் சரித்திர அடிப்படை இல்லாவிட்டாலும் அவை புலப்படுத்தும் தொனிப் பொருளை அறிஞர் யாரும் மறுக்கத் துணிய மாட்டார்கள். படிகொண்ட கீர்த்தி இராமயணம் என்னும் பக்திவெள்ளத்தில் சங்கமமான கம்பரது கவிதைப் பிரவாகத்திலே மூழ்கித்திளைத்த அம்முன்னேரது உள்ளத்தில் கம்பர் தனி அரசுபுரியும் கவிச்சக்கரவர்த்தியாகவே திகழ்ந்தார் என்பதுதான் அக்கதைகளின் உள்ளுறை.

குலோத்துங்கன் காலம் அது; குளித்தலைப் பக்கம் பார்த்திப கங்கை என்ற காவிரித் துறையிலே சேர பாண்டியருடன் வீற்றிருந்தபோது குலோத்துங்கன் தன் நாட்டின் செழிப்புக்குக் காரணமாய்ப் பெருகிவரும் காவிரியின் பிரவாகத்தைப் பெருமையாய்ப் புகழ்ந்து பேசவே, அருகிருந்த கம்பர், அவ்வெள்ளப் பெருக்குச் சடையன் வீட்டிலே விருந்துண்டு மீள்வார்க்குக் கை கழுவக் காணுது; அவர்கள் கை கழுவிட்ட எச்சில் நீர் அல்லவா அது என்று பரிகாசமாய்ப் பகர்ந்தாராம்.

மெய்கழுவி வந்து விருந்துண்டு
மீளும் அவர்
கை கழுவ நீர்போதும் காவேரி–
பொய் கழுவும்
போர் வேள் சடையன் புதுவையான்
இல்லறத்தை

யார் போற்ற வல்லார் அறிந்து*1

என்று, சடையனது விருந்தோம்பற் சிறப்பைச் சமத்காரமாய்ப் பாடி மெய்ப்பித்த கம்பரை வியந்து இங்கே கூடியிருந்த கொங்கு வேளிர் பலரும் அவருக்குத் தங்களையே அடிமை ஆக்கினூர்களாம்; அக்கால வழக்கப்படி மா தெளித்துச் சத்தியம் செய்து தங்கள் அடிமைத் தன்மையை உறுதி செய்தார்களாம்*2

4. வதுவை வரி

மற்றெரு சம்பவம், குலோத்துங்கன் காலத்திலேதான்.

காவேரி எங்கு ஏறிப் பாய்ந்தாலும் கொங்கு ஏறிப் பாயாது என்பது பழமொழி. அவ்வளவு ஆழத்தில் அங்கே காவிரி ஓடுகிறது. ஒரு சமயம் அந்நதியிலே பெருவெள்ளம் கரைகடந்து பெருகி விளை புலங்களைப் பாழாக்கிக் குடியிருப்புகளை வாரிக்கொண்டு சென்றது. கொங்கு நாட்டிலேயே இந்த அவதி என்றுல் கீழே சோணுட்டிலே கேட்கவே வேண்டா. அது வெள்ளக் காடாகியது. அரசனும் அதிகாரிகளும் குடிமக்களைக் கூட்டிக் காவிரிக்குக் கரை கட்டினூர்கள்; குளித்தலையின் வடமேற்கு மதுக்கரைப் பக்கம் உடைப்பை அடைத்தார்கள். அவை நின்றபாடில்லை. அங்கே வந்து சேர்ந்த கம்பர் 'தாயே நீ கோபித்தால் எங்களுக்குப் புகல் ஏது' என்று கடலால் கன்னியாகுமரி, முன்னம் அழிந்ததையும் கங்கை கை மாறிப்போனதையும் கருதி, 'நெறியின் புறஞ்செலா' நம் மகளிர் நிலையை நினைவுகூர்ந்து

கன்னி அழிந்தனள் கங்கை திறம்பினள்
பொன்னி கரைஅழிந்து போயினளென்று-இந்நீர்
உரை கடக்கலாமோ உலகுடைய தாயே
கரைக்கடக்கல் ஆகாது காண்.

என்று பாடினூர். பாடவும் வெள்ளப் பெருக்கு அடங்கியது; கரையும் நின்றதாம்.

அரசனும் குடிகளும் மகிழ்ந்து கம்பரது தெய்வீகப் புலமையை வியந்து, வியப்பு மேலீட்டால் அவருக்குக் கைம்மாருக ஏதை அவர் விரும்பினூலும் கொடுப்பதாகச் சொன்னூர்கள். கம்பரும் புன்னகை பூத்து அவர்கள் கொடுப்பது எப்போதும் அவர்களால் நினைவு கூரத்தகுந்ததாய் இருக்கவேண்டும் என்று, அரசாங்கத்துக்குக் குடிமக்கள் செலுத்திவரும் கல்யாண வரியைத் தமக்கு நல்குவது போதும் என்றூர். சோழனும் சம்மதித்து வதுவை வரியைக் கம்பருக்குச் சாசனம் எழுதிக் கொடுத்தானும். § .

கதுவிவரு பொன்னி கரைகடவா வண்ணம்
பதுமமுகக் கம்பர்அவர் பாட-வதுவை வரி
மாடை அரைக்கழஞ்சு வண் கம்பர்க்கு ஈந்தபரிசு
ஏடர் குலோத்துங்கன் எழுத்து

என்பது அந்த சாசனப்பாடல்

இப்படித் தெய்வத் தமிழால் தமக்குப் பரிசாகக் கிடைத்த வதுவை வரியைக் கம்

*1 காவிரி எச்சில்படக் கம்பர் பாடியது என்று தமிழ் நாவலர் சரிதையிலே காணப்பெறும் இப்பாடல் மூவலூர்க் கல்வெட்டிலும் காணப்படுகிறது.

*2 பார்த்திப கங்கையிற் சேரனும் சோழனும் பாண்டியனும்
கூத்தமை மாநகர் வீற்றிருந்தார்முன் குலோத்துங்கமால்
கார்த்திகைக் கம்பரைக் காவேரி எச்சிலைக் காட்டுதற்கு
மாத் தெளித்தே அடிமை புகுவார் கொங்கு மண்டலமே. வார. கொ ச-67

§ கார்மேகக் கவிஞர். கொ. ச.

பரும் தமிழுக்கே உரியதாக்க விருப்பினுர். கொங்கு நாட்டிலே புலவர் கூட்டம் ஒன்று தொன்றுதொட்டு இருந்து வருகிறது அல்லவா? வள்ளல்களேயும் பரிசில்களேயும் நம்பியே அவர்கள் வாழ்ந்து வந்தார்கள். சமுதாய வாழ்க்கையிலே அவர்களுக்கு முக்கியத்துவமும் கவுரவமும் வ ழ ங் க க் கருதிய கம்பர், வாழி (வாழ்த்துப்பா)ஒன்று பாடி, அப் புலவர்களுக்குக் கொடுத்து, கல்யாண காலங்களிலே அதைக் கூறி, மணமக்களே வாழ்த்தித் த ம க் கு ரி ய வதுவை வரியான பொன் அரைக் கழஞ்சியையும் தலைமுறை தத்துவமாய்ப் பெற்றுக் கொள்ளுமாறு ஏற்பாடு செ ய் தா ரா ம். கொங்குப் புலவர்க்கே அன்றி வேளாளர்க்கும் அவரைச் சார்ந்துவாழும் கு டி மக்களுக்கும் கம்பர் செய்த பெருஞ் சிறப்பு என்று அந் நாட்டு மக்களால் இன்றும் போற்றப்பட்டுவரும் அப் பெரு நிகழ்ச்சி, அப்போதிருந்தே நடைமுறையிலும் கடைப் பிடிக்கப்பட்டு வருகிறது.

கொங்கு வேளாளர் விவாக காலங்களிலே முகூர்த்தம் முடிந்ததும் நாட்டுப் புலவர் வாழிபாடி மணமக்களே வாழ்த்துவது முக்கிய கிரியையாக மதிக்கப்படுகிறது. கம்பர் வாழி என்றே அ தை ச் சொல்லுகிருர்கள். இ தை க் கூறுதற்கு உரிமை பெற்ற புலவர்களும் அங்கங்கே இருந்து வருகிருர்கள். கம்பனுர் மாணவர் பரம்பரை என்றே அவர்கள் தங்களேச் சொல்லிக் கொள்கிருர்கள். திருப் பூட்டு நடந்ததும் பாலும் பழமும் அ ரு ந் தி ப் புலவர் வாழி பாடினுல்தான் மணச்சடங்கு பூர்த்தி ஆனதாகக் கருதப்பெறும். புலவர் அப்போது வராதிருந்தால் முதல் மரியாதையாக அவர்க்குரிய தாம்பூலாதி மி ரா சு களேத் தனியே எடுத்து வைத்துவிட்டுத் தான் மற்றைக் குருக்கள் முதலியோருக்குத் தட்சணை வழங்குவர். விவாக வீட்டாரிடம் சாதி ஆசாரக்குறை ஏதேனும் இருந்தால் புலவர் வாழிகூறப் போக மாட்டார். அந்தக் குடும்பத்தாரை இழிந்தவர் என்று கழித்துவிடுவது சமீப காலம்வரை வழக்கமாய் இருந்துவந்தது. புதிதாகப் பெண்கேட்கப் போம் போது, சுபகாரியங்கள் தொடங்கும்போது, சாதி நியாயம் பேசும்போது, புலவர் ஒருவர் உடனிருக்க வேண்டும் என்றே பழைய பரம்பரையைச் சார்ந்தோர் இ ன் று ம் விரும்புகின்றனர். இம்மரபு ஏற்பட்டது கம்பர் பொருட்டே ஆதலின் 'தொண்டைமண்டலம் ஆதி எம் மண்டலத்தையும் விடக் கொங்கு மண்டலத்திலே கம்பர் பால் அபிமானமும் பக்தியும் வேரூன்றி மேலோங்கி இருந்தது புலனுகிறது' என்பர்.

புலவர் கூறும் இந்த வாழியே அன்றி, மங்கல வாழ்த்து என்ற கிரியை ஒன்றையும் கொங்குக் குடிமகன் நடத்தி வருகிருன், அதனுலேயே அவனே மங்கலன் என்பர். மாப்பிள்ளேக்கு அவர் சகோதரியுடன் இணைச்சீர் நடக்கும்போதும் பெண்ணுக்குத் திருப்பூட்டு நடந்தபின் மைத்துனருடன் கைகோர்வை நடக்கும் போதும் அ ரு மை ப் பெரியாரிடம் ஆசீர்வாதம் பெற்று மங்கலன் இருமுறை வாழ்த்துக் கூறுவான். இவ் வாழ்த்தையும் கம்பரே பாடிக்கொடுத்தார் என்று கொங்குப் பெருமக்கள் நம்புகின்றனர். விவாக கிரியைகளே ஒன்று விடாமல் ஒ ழு ங் கு பெ ற அமைத்துப் பழகு தமிழில் அமைந்துள அவ் வாழ்த்திலே 'கங்கா குலம் விளங்கக் கம்பர் சொன்ன வாழ்த்துரைத்து' எ ன் ற வாக்கியம் பயில்வது கருதத் தகுந்தது.

ஆயிரந் திருவிளக்கு அமைய மாட்டிய
சேயொளி விளக்கம் ஒன்று ஏந்தி

என்று சுந்தரகாண்டத்திலே கம்பர் பாடிச் செல்வது ஆயிரம் பொருந்திய என்று திருமணச் சீரிலே இடம் பெறுவது சிந்தனைக் குரியது.

கொங்கு 24 நாட்டினரும் மி க வு ம் மேன்மையாகப் போற்றிவரும் க ம் ப ர் வாழியும் மங்கல வாழ்த்துப் பாடலும் வாய் மொழியாகவே வழங்கி வருவதால் பல படித்தான பாடபேதங்களுடன் பி ழை மலிந்து காணப்படுவது இயல்பே. எழுத்தறிவு இல்லாத குடிமகனும், க ல் வி இல்லாத பரம்பரைப் புலவனும் கேள்வியால் கேட்டு மனனம்செய்து அவைகளேக் கூறிவருவதால் அடியும் சீரும் பிறழ்ந்து பொருளும் சிதைந்து அங்கங்கே வழங்கும்

பாடல்களைத் தொகுத்து ஆய்ந்து உண்மைப் பாடங்கண்டறிந்து வெளியிடுவது விரும்பத்தகுந்தது*

குலோத்துங்க சோழன் சாசனப்படி, கம்பர்க்கு உரிய வதுவை வரியைப்பெறும் தகுதிவாய்ந்த புலவரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு, கொங்குப் புலவர் சங்கத்துக்கு கொடுக்கப்பட்டிருந்தது இச்சங்கம் திருச் செங்கோட்டிலே செயல்பட்டு வந்தது இத்தலம் கொங்கு 24 நாடுகளிலும் முதன்மை நாடான கீழ்கரைப் பூந்துறை நாட்டின் தலைநகரம்; இங்கு உள்ள செங் கோட்டு மலையின் முதற்படியை ஒட்டி அமைந்திருக்கும் அழகிய விநாயகர் சந் நிதியிலே பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை அப்புலவர் சங்கம் கூடி கம்பர் உரிமையில் பங்குபெறும் 'பழந்தமிழ் ஐவாணரை' அதாவது. ஐந்து படிகாரரைத் தேர்ந்தெடுத்து வந்தது இவ் ஐவரையும் மங்கல வாழ்த்துப் பாடல் இனங்காட்டுகிறது.

கோலாகலமாய் மாப்பிள்ளை பெண் கொளப் போம்போது பட்டன் அவன் புகழை எதிர்நின்று பாடுவானும்; இயல் தமிழால் இருந்து புகழ்வான் புலவன்; இசைத்தமிழ் வல்ல பண்பாடியும் தக்கை என்ற இசைக்கருவி வாசிக்கும் தாளகார னும் பரதநாட்டியம் வல்ல பாவையரும் ஊர்வலத்தை அலங்கரித்துச் செல்வார் களாம்.‡

கொங்குப் புலவர் சங்கத்தால் அங்கீ கரிக்கப்படும் இவர்களே வதுவை வரியில் பங்குபெறுபவர் இப்பங்கு பெறுவதிலே தவறுகள் தோன்றிய போதெல்லாம் புலவர் சங்கம் கூடிப் போலிகளை இனங் கண்டு தகுதியும் உரிமையும் வாய்ந்தவர்க் குப் பாதுகாப்பு நல்கிவந்தது. ஒரு சமயம் போட்டி மேலீட்டால் அதைச் சமாளிக்க மாட்டாது புலவர் சங்கம் செயல் அற்று நின்றபோதும் ஆறைநாட்டுக்கவசைநகர்|| இம்முடி மசக்காளி மன்ருடி தலையிட்டுக்

---

* சிருலாவும் திறையிடும் வாசலே
செம்பொன்மேருக்கு இணையானவாசலே
பாரில் அன்னக்கொடி கட்டியே (தினம்)
பட்சம் என்றும் தவிராத வாசலே
விரலக்குமி மேவிய வாசலே
விருதுகானம் முழங்கிடு வாசலே
காரின்மேருக்கு இணையான வாசலே
கங்கை பாலர் கலியாண வாசலே
கொந்துலாவிய அல்லியந் தாமரை
குவிந்து எழுந்த செந் தாமரைப் பொய்கையின்
அந்தமாக, இன்பாய்த் தழைத்த ஆலுபோல்
அறுகுபோல் கிளைவர்க்கம் உண்டாகுக
நைந்திடாத சௌபாக்கியம் பெற்று ஒரு
நாளிலேனும் கண்ணீர் கலங்காமலே
இந்த வாசல் மணவாளனும் பெண்ணும்
இன்றுபோல் என்றும் இன்புற வாழியே.

‡ பட்டன் புலவன் பண்பாடி தக்கையன்
திட்டமாய்ச் சோபனம் செப்பிமுன்னேவர
அரம்பை மேனகை அணிகொள் திலோத்தமை
திரம்பெறும்ஊர்வசிதெரிவையர்க்குஒப்பாய்
வண்மைசேர் கூத்திவகைபெற நின்று
நன்மைசேர் பரத நாட்டியம் ஆடிவர

|| முன்னாள் உறந்தைவரும் அரசர் பெருமான்
முடி மன்னரிட தம்பிரான்
முதுமொழி குலோத்துங்க சோழன் அருள் செய்தானின்-
முத்தமிழ்க் கம்ப நாடன்
அந்நாளிலே பொன்னி கரைகள் கடவாது உள்
அடங்க இசை பாடலுக்கா
ஆதித்தன் உள்ளளவும் அழியாத வதுவை வரி
அளித்தனர்கள்; அன்று முதலாப்
பன்னுத நிலைமை செறி கொங்கு நாட்டின் மேவு
படிகார வித்வச் சனர்
பங்மென நடந்துவரு படிதனக்கு இடரதாய்ப்
படித்த சிலர் கைக்கொண்டதை
இந்நாளிலே கீர்த்தி நிலையாக விடுவித்து அவ்
இயல் வாணருக்கு அளித்தான்
இங்கிதமாக வரு கவசைநகர் வாழ்வுற்ற
இம்முடி மசக்காளியே.

– கார்மேகக் கவிஞர்.

அறைநாடு என்பது கோவை அவிநாசி தாலூகாக்கள். அதன் தலைநகர் கவசை, கோயில் பாளையம் சர்க்கார் சாமக்குளம்.

கம்பர் உரிமையை ஒழுங்குப்படுத்தியிருக்கிறுன். இது நிகழ்ந்தது கி. பி. 17-ம் நூற்ருண்டில்.

### 5. தக்கை ராமாயணம்

கற்றவர் படித்தும் கல்லாதார் கேட்டும் விழுமியராதற்கு ஏற்ற காவியம் அல்லவா கம்பராமாயணம்? கொங்கு நாட்டிலே அதை எப்படிப் போற்றியிருக்கிருர்கள்? அதன் காவியரசனையை எப்படி அனுபவித்திருக்கிருர்கள்? என்பதைப் பார்ப்போம்.

கீழ்கரைப் பூந்துறை நாட்டின் மோரூரில் இருந்த கண்ண குலத்தார்களிலே திருமலை அத்தப்ப நல்லதம்பிக் காங்கேயன் (கி. பி. 16-ம் நூற்) அத் தலத்திலே பல திருப்பணிகளைச் செய்து பல கட்டளைகளையும் நிறுவி பிரபந்தங்கள் பலவற்றுக்குத் தலைவனுயும் புகழ்பெற்றிருந்தான். தன் முதாதையர்க்கு உரிய ஆகவராமன் என்ற விருதையும் தரித்திருந்தான். ராம பக்தி பூண்டு ராமாயண சரிதங்களைப் பயில்வதிலும் கேட்பதிலுமே நாளும் பொழுது போக்கிவந்தான். அவ்வமயம் சங்ககிரித் துர்க்கத்திலே வாழ்ந்திருந்த பத்தர் பாடி எம்பெருமான் என்ற கவிராயர் தமக்கே உரியபாணியில் தக்கம் என்னும் தாள அறுதிக்குத் தகுந்தபடி கம்பராமாயணக் கவிதைகளை இசைகனியப் பாடி அக்காவியப் பொருளை வெகு விநயமாகவும் வித்தாரமாகவும் விளக்கி வந்தார். அதைக் கேட்டு நாளும் பரவசப்பட்டுத் தனது ஆன்ம ஞான அனுபூதிக்கு அடுத்த படியாகக் கம்பர் காவியம் கொடுக்கும் இன்பமே மிகச் சிறந்ததென்றுணர்ந்த நல்லதம்பி, எம்பெருமான் பாடி வந்தபடியே கம்பராமாயணம் முழுவதையும் அதன் சொல்லாற்றல் பொருள் பொலிவு கற்பனை வளம் கட்டுக்கோப்புக் குலையாவாறு எழுதுவித்தான். இதுவே தக்கை ராமாயணமாகப் பரிணமித்தது. கம்பர் காவியம் அளவிலே மிகப் பெரியதாய் இருப்பதால் அதைப் பார்த்து மக்கள் மலைத்துவிடக் கூடாதே என்ற எண்ணியதின் விளைவு தான் அது. மேற்கு ரங்கம் என்ற சங்ககிரி ஸ்ரீ வரதராசப் பெருமாள் சந்நிதியிலே அது அரங்கேறியது.

அதன் பாயிரத்திலே ஒரு பாட்டு.

அவனும் சடையன் காராளன், அவன்
தன் ஊரும் வெண்ணெய் நல்லூர்;
இவனும் நல்லதம்பிக் காங்கேயன்,
இவன் தன் ஊரும் மோரூராம்.
அவனும் கண்ணன் சரராமன்,* ஆகவ
ராமன் இவனும் கண்ணன்.
இவனும் அவனைப்போல் உலகுதனில்
ராமகதைதனைப் பாடுவித்தான்.

கம்பருக்குச் சடையன் போலத் தனக்கு வாய்த்த நல்லதம்பியைக் கதைப் போக்கிலே இடையிடையே புகவைத்துப் புகழ்ந்து செல்வார். ஒன்று வருமாறு:

ராமன், சீதை, லட்சுமணன் மூவரும் அகத்தியர் ஆசிரமத்திலே தங்கியிருந்த போது, ராமனுக்கு அவர் 'மூவுலகும் யானும் வழிபட இருப்பது' ஆகிய இந்த சிவனுர்வில்லை, அம்பருத் தூணியோடு கொள்க 'எனக்கொடுக்க ராமனும் பெற்றுக் கொண்டான் அல்லவா' அது, நல்ல தம்பி பாண்டியன் பால் வரிசைகள் பல பெற்றதுபோலத்தானும். அகத்தியப் படலத்திலே பாடுவார் எம்பெருமான்:

மிகத்திருவன் செங்கோட்டில்
வேலவன்பேர் நாரணன்பேர்
செகத்துமன்னர் தருசிறப்பும்
தென்னவன்பால் முவிருதும்
மகத்துகன்மால் நல்லதம்பி
வரிசை பெற்றுன் மோரூரான்
அகத்தியன்பால் ராமபிரான் அருள்
வரிசை பெற்றனனே.

இப் பாடலிலே அமைந்துள சரித நிகழ்ச்சி:

* சடையனை அசோதைக்கு மைந்தன் கண்ணன் என்று போற்றுகிறது கொங்குச் சதகம். 66; கண்ணன் என்பது அவனுடைய இளமைப் பெயர் போலும்; சரராமன் என்பது அவனுடைய இயற்பெயர்.

சேலம், ஆற்காடு மாவட்டங்கள் சந்திக்கும் எல்லைப் பகுதியை மகதநாடு என்பர்; இதன்தலைநகர் ஆறகழுர். ஆறு அகழிகள் ஒன்றனுள் ஒன்று சூழப்பட்ட அவ்வூரிலே மகதைப் பெருமாள் என்ற மாவலிவாண மரபினன் சோழபாண்டியனரைப் பொருட்படுத்தாது எதேச்சையாக அரசு புரிந்து வந்தான். பாண்டியன் தூண்டுதலால் கீழ்கரைப் பூந்துறை மோரூர் கண்ணகுலத்தான் ஆன சூரியன் என்ற தானாதிபதி ஆறகழுரிலே உள வறிந்திருந்து, சமயம் வாய்த்தபோது மகதைப் பெருமானை பல்லக்கிலே இருத்திப் பாதுகாப்பாய்த் தூக்கி வந்து சங்ககிரிக் கோட்டையிலே முகாம் இட்டிருந்த பாண்டியன் முன் நிறுத்தினன். பாண்டியனும் அவனுக்கு வட கொங்கு எழுகரை நாட்டின் ஆட்சியும் காங்கேயன் என்ற பட்டமும் ஆகவராமன் என்ற தனது விருதுப் பெயரும் வேப்பந்தாரும் மீனக் கொடியும் கொடுத்துக் கவுரவித்தான். இது நிகழ்ந்தது கி. பி. 12-ம் நூற்றுண்டிலே. இச் சம்பவம் குறித்த தனிப் பாடல்கள் பல. அவற்றுள் ஒன்று:

மிண்டாறை வாணனைமுன் வெட்டாமற் பாண்டியன்நேர்
கொண்டுவந்து நிற்கவிட்ட கொற்றவனும் நீ அலையோ
தெண்டிரைசேர் மோரூரில் தென்னன் மகு டாசலனே
மண்டலிகர் தேர்ந்துமெச்ச வாழ்சூரிய காங்கேயனே.

இவன் வழிவந்தோர் ஆகவராமன் என்ற பட்டத்தை நாளும் தரித்து வருகின்றனர்.

### இலட்சிய உலகம்

கம்பன் கண்ட கோசலத்திலே சுகாதாரக் குறைவோ ஒழுக்கக்கேடோ இல்லை. அங்கே மக்கள் யாரும் செம்மனச் செம்மல்களாய் இருப்பதால் கோபதாபங்களுக்கு இடம் கொடுப்பதில்லை; நல்வழியே நடப்பதால் அக்கிரமங்கள் இல்லை. எதிலும் முன்னேற்றமே. ஒரே ஆச்சரியம்! அங்கே சடையப்பன் போன்ற வள்ளல்களோ சோழவேந்தன் போன்ற வீரர்களோ இல்லாதது. வண்மை வறுமைக்கு அறிகுறி, திண்மை அதாவது அடக்குமுறை. பலாத்காரத்துக்கு அடையாளம். அங்கே பொய் இல்லை எனவே அரிச்சந்திரன் என்று ஒருவன் இல்லை. மேதாவி பலரையும் பாமரர் ஆக்கிக் காட்டுகிருன் எனவே அனைவரும் பிரகஸ்பதிகளே. அங்கே மலர் மாலைகளாலும் பூம் பந்தர்களாலும் வீடுவாசல்கள் எத்தனையோவிதமாக அலங்கரிக்கிருர்கள். அவை மணம் வீசி உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன. முற்றத்திலே முத்துகளும் மணிகளுமே சிதறிக்கிடக்கின்றன, அவ்வளவு செல்வச் செழிப்பு ஆரோக்கியத்துக்குக் குறைவே இல்லை; மெல்லிய தென்றல் அமுதத்தை அல்லவா சொரிகிறது. எங்கே பார்த்தாலும் கதா காலட்சேபகங்ளும் சங்கீதக் கச்சேரிகளும்தான்

கூற்றம் இல்லை, ஓர் குற்றம் இலாமையால்
சீற்றம் இல்லைதம் சிந்தையின் செம்மையால்
ஆற்ற நல்லறம் அல்ல திலாமையால்
ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே
வண்மை இல்லை ஓர் வறுமை இன்மையால்
திண்மை இல்லை நேர்செறுநர் இன்மையால்
உண்மைஇல்லைபொய் உரை இலாமையால்
ஒண்மை இல்லைபல் கேள்வி ஓங்கலால்
கோதைகள் சொரிவன குளிர்இள நறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனகம்
ஊதைகள் சொரிவன உயிர்உறும் அமுதம்
காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்

இந்தப் பாடல்களின் எளிய யாப்பமைதி அதிசயமாயிருக்கிறது. கருத்துக்கள் சாதுரியமாய் நுட்பமான திட்டத்துடன் சொல்லப்பட்டுள்ளன; இதனுல்தான் இவற்றைச் சிறந்த கவிதைகளாய்ப் போற்றுகிரேம் ஒவ்வொரு குணத்துக்கும் அதன் சீரும் சிறப்பும் அதன் எதிர் குணத்தால்

ஏற்படுகின்றன என்பது தத்துவம். இத் தத்துவத்தைப் பயன்படுத்தி கம்பர் இந்தக் கவிகளைச் சமத்காரமாய்ப் படைத்திருக் கிருர். நிழலின் அருமை வெயிலிலேதான் அடக்குமுறை பலாத்காரத்துக்கு அடை யாளம் அல்லவா? உண்மைக்கு ஒருவன் என்பது மற்றவரைப் பொய்யராக்கிக் காட்டும் அல்லவா? கோசலநாட்டு மக் கள் அறிவிலும் செல்வத்திலும் சிறந்திருந் தார்கள், ஒழுக்கத்தில் உயர்ந்திருந்தார் கள் என்பதைக் கம்பர் மிக எளிய ஆனுல் அரிய கற்பனைப் பாங்குடன் கவிதை நலம் கனியப் பாடியிருக்கிருர்.

கம்பரது வளமார்ந்த மனேபாவனை யில் வடிவெடுத்த இலட்சிய உலகம், தக்கை ராமாயணத்தில் எப்படிக் காணப் படுகிறது?

கொடை சொரியும் வண்மை இல்லை,
கொள்பவர் இல் லாததினுல்
படை சொரியும் திண்மை இல்லை
பகைவர் இல் லாததினுல்
தொடை சொரியும் அளிநுகர்தேன்
தொடை சொரியும் செவிநுகர்தேன்
கடை சொரியும் முன்றில் முத்தம்
கலஞ் சொரியும் நவநிதியே.

### ஒரு கற்பனைக் காட்சி

மாளிகையிலே ஜகஜோதியாய் ஒளி பிரகாசிக்கிறது. இதற்குக் காரணம் நெய் விளக்கோ மணிவிளக்கோ இரண்டும் அல்ல. அம்மாளிகையிலே மனை அரசியின் மேனிதான் அவ் விதச் சுடர் வீசுகிறது. மனைக்கு விளக்கம் மடவார் அல்லவா? பேர் ஒளியும் பேரழகும் வாய்ந்த அப் பெண்ணரசி கலையிலும் தேர்ந்தவள் போ லும். சித்திரம் ஒன்றை வரைந்து கண்கள் மலர்ந்து அச்சித்திரமும் படிப்படியாய் வளர்ந்து கண்கள் மலர்ந்து எழுதியபெண் மணியையே நோக்குகிறது. கண் இமைக்க வில்லை. தன்னைப்படைத்துவிட்ட பாவை நல்லாளின் சுடர் மேனியைப் பார்க்கும் ஆசைபோலும், கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருக்கிறது உயிர் ஓவியம் எழுதும் அவளை நாமும் தொழுது நோக்குகிறேம் பாடலைப் பார்ப்போம்.

நிறக்குமனை நெய்விளக்கோ
நேரிழையார் மெய்விளக்கோ
சிறக்குமலர் வடிவுகண்டோ
சித்திரங்கள் இமையாவே

இது தக்கை ராமாயணத்தில். இதற்கு மூலமான கம்பர் கவிதைகள் பின்வருவன

தணிமலர்த் திருமகள் தயங்கு மாளிகை
இணர்ஒளி பரப்பிநின்று இருள்துரப்பன
திணிசுடர் நெய்யுடைத் தீவிளக்கமோ
மணிவிளக் கல்லன, மகளிர்மேனியே

பொழுதுணர் வரிய அப் பொருவில் மாநகர்
தொழுதகை மடந்தையர் சுடர் விளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கும் ஆசைகொல்
எழுதுசித் திரங்களும் இமைப் பிலாதவே.

### ஒரு காதல் காட்சி

3) உலாவியற் படலத்திலே ஒருத்தி:

இராமனைக் கண்ட தன் கண்களைக் கையால் இறுகப் பொத்திக் கொள்கிருள்; கண்வழி நுழைந்த கள்வன் வெளியே தப் பிப்போகாதபடி அவன் நுழைந்த அந்த வாசலை அடைப்பாள் போலக் கண்களைச் சிக்கென முடிக்கொண்டாள். பின் தோழி யை அழைத்துத் தன்கையைப் பற்றிப் படுக்கையிலே சேர்க்கவேண்டும் என்று பிரார்த்திக்கிருள்

கண்ணில் வந்தான் போகாமல்
கண்ணிமையாம் கதவடைத்தேன்
எண்ணின வாறு அமளியின்மேல்
எனைக்கொடுபோ பாங்கிஎன்பாள்
தண்ணிய மெய் நடந்துவந்தார்
தாங்கவெதுப் பொடும்போவார்
புண்ணியன்வில்லாண்மை எண்ணுள்
பூவில்மெய்வான் யாவன்என்பாள்

இந்தக் காதல் காட்சியின் கம்பசித்திரம் பின்வருவது:-

மைக்கரும் கூந்தற் செவ்வாய்
வாணுதல் ஒருத்தி, உள்ளம்
நெக்கென உருகுகின்ருள்,
'நெஞ்சிடை வஞ்சன் வந்து'

புக்கனன் போகாவண்ணம்
கண்ணெனும் புலங்கொள் வாயில்
சிக்கென அடைந்தேன் தோழி
சேருதும் அமளிஎன்றுள்
குளிப்பொடு காணவந்தாள்
வெதுப்பொடு கோயில் புக்காள்

**தக்கை ராமாயணத்தின் முக்கியத்துவம்**

4) கொங்கு நாட்டுப் பக்கம் முன்னூறுண்டுகளுக்கு முன் வழக்கத்திலிருந்த கம்ப ராமாயண கவிதைகளைத் தக்கை ராமாயணம் இனங் காட்டுவதுடன் கம்பனிலே புகுந்துவிட்ட பாடபேதங்கள் பாடல்களின் பிறழ்ச்சி செருகுகவிகளையும் ஓர்ந்துணற உதவுகிறது.

உதாரணத்துக்கு ஒன்று தருகிறேன்.

ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்
காசலம்பு முலையவர் கண்ணெனும்
பூசலம்பும் நெறியின்புறம் செலாக்
கோசலம்புனை ஆற்றணி கூறுவாம்

இப்பாடலின் கடைசி அடி ஒரு பிரதியில் கோசலம்புனை நாட்டணி கூறுவாம் என்று பயில்கிறது. நாட்டணியைக் கூறுதற் கென்று இப்பாடல் முதலில் அமைந்தது போலும். ஆற்றுப்படலத்தின் இறுதியில் நாட்டுப் படலத்தின் முன்பாக இது காணப்படுகிறது. இதனை அடுத்து வரும் செய்யுள்;-

வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த
வான்மீகி என்பான்
தீங்கவி செவிகள் ஆரத் தேவரும்
பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை
அன்பெனும் நறவம் மாந்தி
மூங்கையான் பேசலுற்றான்
என்னயான் மொழியலுற்றேன்.

நாட்டணி கூறுவதாக வரும் செய்யுள்:-

அடுத்தடுத்து வருதலை நோக்கி, முதற் செய்யுளை ஆற்றணி என்று திருத்தி ஆற்றுப் படலத்தின் தொடக்கத்தில் வைத்து விட்டனர் என்று கருதலாம். அல்லது

வாங்கரும் பாதம் நான்கும் என்ற
செய்யுளை

நோக்காது இடைச்செருகலாகப் புகுத்தப் பட்டது என்றும் துணியலாம். ஆனல் முன்னூறுண்டுகளுக்குமுன் கொங்கு நாட்டிலே வழக்கில் இருந்த ஏட்டுச்சுவடியிலே 'கோசலம் புனை நாட்டணி கூறுவாம்' என்றுதான் இருந்திருக்கிறது. இதைத் தொடர்ந்து வாங்கரும் பாதம் நான்கும் என்ற பாடல் இருந்திருக்கிறது. தக்கை ராமாயணத்திலே இவை வருமாறு:*

பொழில் இலகும் ஆற்றின் இயல்
போற்றினேன்; காமன்
அழிவிலம்பும் மாதர்விழி அம்பும்—
வழிவிலகாக்
கோசல நன் நாடும் குளிர்நீர்
அயோத்தி எனும்
வாச நகரும் துதிசெய் வாம்
நாற்பதமும் படைத்த கவி நற்றவ
வான்மீக முனி
மேற்பத வானவர்க் கமுதாய் மிகப்
புகழ்ந்த திருநாட்டை
ஆற்பதமொன் றறியாதென் அவமதி
யால் பிதற்றுகின்றேன்
ஏற்பமுதுவால்ப் புலவீர்
இதுபொறுக்கை புகழ் உமக்கே.

கம்பரது சொல்லும் பொருளும் உணர்ச்சியும் உள்ளத்திலே ஊறிக் கிடந்து புறம்பொழிந்த பாட்டே தக்கை ராமாயணம். கம்பரது கவித்வசக்தியின் மர்மங்களை உணர்ந்த ஒருவரால் (எம் பெருமான்) கம்பரது படைப்பின் பேரழகும் பேரின்பமும் புலனாகும்படி பாடப் பட்டதுதான் அது. கம்பராமாயண ஆராய்ச்சிப் பதிப்புக்கு அது பேருதவி ஆதலால் அதைத் தேடிப்பிடித்து வெளிக் கொணர்தல் கொங்குப் புலவர்களின் தலைஆய கடமை ஆகும். இதை, யாரேனும் பொறுப்பேற்றுச் செய்வாராக.

ஆழ்ந்த கல்வியும் அருட்புலமையும் அபரிமிதமான கவித்வசக்தியும் பெற்று, இராமாவதாரம் பாடி உலகம் பிரமிக்கும் படியான வெற்றிபெற்ற கம்பரை 'யாமறிந்த புலவரிலே அவர் போலப் பூமி தனில் யாங்கணுமே பிறந்ததில்லை' என்று பொதுவான புகழ் உரைகளால் அன்றி, மெய்யாகவே அவர்க்கு அடிமைபுகுந்தும் அவர் கவிதைக்குப் பரிசாக வதுவை வரி யை வழங்கியும் கல்யாணச் சடங்கிலே அவர் பாடலுக்கு மந்திர மொழியோடொப்ப சிறப்பான இடங்கொடுத்தும் கம்பர் காலம் முதல் இன்றுவரை கொண்டாடிவரும் கொங்கு நாட்டுப் பெருமக்கள் கம்பர் பால் வைத்திருக்கும் பக்தி வியப்புக் குரியதே.

---

* குறிப்பு: சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னம் திருச்செங்கோடு முத்துசாமிக் கோனார் தக்கை ராமாயணத்தை அச்சிட்டார். சுந்தரகாண்டம் முடிய அச்சானதாகத்தெரிகிறது. அச்சான எதுவும் புத்தகமாய் வெளிப்படாமலேயே மக்கி மடிந்துவிட்டது நமது துரதிட்டமே ஏட்டுச் சுவடியும் கிடைப்பதாய் இல்லை.

# கம்பனை எனக்குக் காட்டியவர்கள்

அ. கு. ஆதித்தர்

புதுவைக் கம்பன் கழகத்தார் ஒரு புதுமைத் தலைப்பு தந்துள்ளார்கள். தலைப்பு புதியது, புனைந்துரைக்கும் வாய்மைக்கும் இடந்தருவது, பிறர் பலரை உலகுக்கு அறிவிப்பது, கற்றோர் பெயர்கள் நிலைக்க வைப்பது. ஆயினும் எழுதப்பெறும் கட்டுரைகளில் உற்றவை தன்மை நவிற்சியோ, உயர்வு நவற்சியோ என்று எண்ணி ஐயுற இடந்தருவது. அத்தகைய ஒரு அரிய பயன்தரும் தலைப்பு "கம்பனை எனக்குக் காட்டி வைத்தவர்கள்"

ஒரு பெண்ணைப்பார்த்து "உன் நாயகனை உனக்குச் சேர்த்து வைத்தவர் யாவர்?" என்றோ, ஒரு ஆடவனிடம் "உனக்கு இம்மனைவி வாய்க்கஉதவியவர் யாவர்?" என்றோ வினவின், பதில் என்ன வரும்? என் சொந்த மாமன் பிள்ளை, என் அம்மா அப்பா தேடித் தந்தார், அவர் முயற்சி, இவர் முயற்சி என்பர். தற்காலத்தவர் சிலர் "நாங்களாச் சேர்ந்து கொண்டோம்" என்பர். இவற்றில் ஓரளவு உண்மை இருக்கலாம். (Marriages are made in heaven) திருமணம் விதிப்படி நடக்கிறது என்பதிலும் உண்மை இல்லாமல் இல்லை. அது போன்றே "கம்பரைக் காட்டி வைத்தவர் யாவர்?" என்னும் கடாவுக்கு உரிய விடையும் பலவகைப்படலாம். ஆயினும், ஏதேனும் ஒருமுடிவு காண்டல் அன்றோ முறைமை. அந்த முறையில் என் கல்வி முறைபற்றி யான் என் சொல்ல?

இளமையிற் பெரும்பள்ளியிலும் கல்லூரியிலும் படித்த காலத்தில் பாடப் புத்தகங்களிற் படிக்கும் பாடல்களில் கம்பராமாயணப் பாடலே சுவையுடையதாக என் மனத்திற் பட்டது. ஆயினும் பாரதம் நைடதம் திருவிளையாடல்களோடு ஒத்த ஒரு நூலாகவே இதனையும் கருதிநின்றேன் படிப்பை முடித்துத் தமிழாசிரியராகப் பணியாற்றியபோதும் ஏனைய பாடல்களைப் போன்றே இதனையும் மதித்து வந்தேன். 1927-முதல் சென்னைவாசி ஆனேன். அதற்கு முன்னும் பின்னும் பலர் பல கூட்டங்களிற் பேசக் கேட்டு இன்புற்றுள்ளேன். பண்டிதமணி கதிரேசன் செட்டியார், ரா. ராகவ ஐயங்கார் இவர்கள் நல்ல தெளிந்த குளுகுளு நடையிற் பேசுவார்கள். ராகவையங்கார் ராமாயணம் பற்றி இனிமையாகப் பேசி, "இந்த இடத்தில் வான்மீகி இவ்வாறு நயமாகக் கூறுகிறார்" என ஒரு வேற்றுமொழிச் சிறப்புப் புலப்படக் கூறுவார். பண்டிதமணி "இதனை வான்மீகி இப்படித்தான் சொல்கிறார்" எனக் கம்பனுக்கு ஒரு ஏற்றம் பிறக்கக் கூறுவார். இருவரின் பேச்சு முறைகளிலும் அமுது ஒழுகும். ஒட்டநத்தம் சக வீரபாண்டியன் தெளிவாக விளக்கமாக அரசியலில் சம்பத்து பேசுவது போலப் பேசுவார். சோமசுந்தர பாரதியார். M. A. B. L., நீதி மன்றத்தில் வழக்காடுவதுபோல அதிகார தோரணையுடன் பேசுவார். ரா. பி. சேதுப் பிள்ளையவர்களின் பேச்சு இளமங்கையின் நாட்டியச் சதங்கை ஒலிபோல் குளிர்விக்கும். பேராசிரியர் சீனிவாச ராகவன் 50 நிமிடங்கள் ஆங்கிலப் புலவர் திறன் பேசி, அவர்களினும் கம்பன் சிறந்தவன் என்று பத்து நிமிடம் பகர்ந்து இன்பூட்டுவார். T. K. C. அவர்

கள் அமைதியாகத் தெளிவாக விளக்க மாக அனுபவித்துப் பேசுவார்கள். அது நல்ல சிற்றுண்டியுண்டு காப்பி பருகுவது போல இருக்கும் தூத்துக்குடி பால்நாடார் செல்லும் இடம் எல்லாம் கம்பனை உடன் கொண்டு செல்லும் ஒரு பெரியார்; உண் மையின் உரு ஆனந்த . விகடன், கல்கி இவற்றில் பி. ஸ்ரீ யும், டி. கே. சி. யும் தொடர்ந்து எழுதிப் பலருக்குக் கம்பனை அறிமுகப்படுத்தினர்கள். இவர்கள் எல் லாரும், இவர்கள் போன்ற பிறரும் ஒரு இளைஞனுக்குப் பேசப்படும் பல பெண் களைப் போலவே என்னால் உணரப் பெற் றனர்.

ஒரு முறை தெற்கில் திருச்செந்தூர் அருகிலுள்ள எம்மூர் காயா மொழியிலி ருந்து ஏதோ காரணமாகத் திருச்சிக்கு வர நேர்ந்தது. காரணம், நடப்பு, நாள்பற்றி இப்போது யாதும் கடுகளவேனும் நினைப் பில் இல்லை. திருச்சியில் எங்கள் மோட் டார் வந்ததும் பலர் மோட்டாரிடம் வந்து "போகாதே, யானை மதம் பிடித்துத் தெரு வுள்கிறது." என்று தடுத்து விட்டார்கள். தெருக் கடைகள் எல்லாம் பூட்டப்பட் டிருந்தன. மக்கள் நடமாட்டமும் இல்லை; சிலர் மூலை முடுக்குகளிற் பதுங்கி நின்றனர். 'யானை அந்தக் கோடியில் நிற்கிறது மாவுத் தனைத் தூக்கி வீசிவிட்டது. இனி அதனைச் சுட்டுத் தீர்த்து விடுவார்கள்' என்று பேசிய கருத்து இன்னும் நினைவில் இருக்கின்றது. என் மனம் யானையின் வலிமை, அது மதம் பிடித்து நிற்றல், சுழல்தல், ஓடுதல். கட்டுக்கடங்காமல் திரிதல், வீட்டை, மரத்தைத் தாக்குதல் இவை பற்றிப் பல பல எண்ணியது; இந்த எண்ணம் பல நாட்கள் நிலவியது. இது நிற்க -

*1930*-க்கு மேல் சென்னை வேப்பேரி யிலும், செங்கற்பட்டிலும் பணியாற்றி வந்தேன். சென்னைப் புரசை பாக்கம் வைக்கற்காரன் தெரு நகராண்மைப் பள் ளியில் சென்னைக் கிருஸ்தவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் ச. த. சற்குணர் B. A. அவர்கள் வாரந்தோறும் ஞாயிற்றுக் கிழமை - காலை நேரத்திற் பாடஞ் சொல்வ தாகக் கேள்விப்பட்டேன். தொல்காப் பியம் நடக்கிறது, பல ஆசிரியர்கள் வந்து பாடங்கேட்கிருர்கள் என்று தெரிந்ததும், தொல்காப்பியங் கற்கும் ஆவலால் யானும் அங்குச் சென்றேன். முதல் ஒரு மணி நேரம் தொல்காம்பியம் நடக்கும். பின்னர் சங்க நூல்கள், கம்பன் நடக்கும். ஆங்கில சேக்சுப்பியர் சொல்லப்படுவதும் உண்டு. பேச்சுத்திறன் ஆசிரியரின் உள்ளத்து உரத்தை வெளிப்படுத்தி நிற்கும். நேர்மை, சீர்மை, அறம், திறம், அறிவு, தெளிவு, கட்டுப்பாடு அங்கு நிறைவுற்று நிற்கும். இவை என்னைக் கவர்ந்தன, வாரந்தோறும் சென்று வந்தேன். இக்கல்விக்குக் கைம் மாறு கிடையாது. ஒருகால் ஆசிரியர் உல கியல் பேசும்போது "கல்லடி பட்டாலும் கண் அடிபடக் கூடாது" என்று கூறியது இன்னும் என் நினைப்பில் இருக்கிறது.

ஒரு நாள் வகுப்பில் மிதிலைக் காட்சிப் படலம் நடைபெறுகையில்

பிறை எனும் நுதலவன் பெண்பை
என்படும் !
நறை கமழ் அலங்கலான் நயன
கோசரம்
மறைதலும், மனம் எனும் மத்த
யானையின்
நிறை எனும் அங்குசம் நிமிர்ந்து
போயதே

மாதர் கற்பு யானையின் வலியுடையது. அவர்கள் மனம் நெறி விலகாத் திண்மை கொண்டது. யானை மதம் பிடித்துவிட்டால் அங்குசம் பாகன் யாராலும் அதனை அடக்க முடியாது. கற்பிற் சிறந்த சீதை யின் நிறை இராமனைக் கண்டதும் அவன் அழகிற் பித்துற்றது; நிறை கரையலாயிற்று; அங்கு சக்காப்பு நிமிர்ந்து விலக, அவள் காதல் நோயால் சோகமுற்ருள் என விளக்கினர்கள். இளமை - அதன் கட்டுப் பாடு - அது தளர்தல் இவற்றை யானை - அதன் வலிமை - அது மதங் கொளல் - கட்டுக்கடங்காது நிமிர்தலுக்குக் கம்பர் ஒப்பிட்டிருப்பது எனக்கு மிக மிக இன்பந் தந்தது. ஏன்? யான் முன்னர் திருச்சியில் மதம் பிடித்த யானையின் நிலையை நேரிற் கண்டுணர்ந்தவன். ஆதலின், யான் பரவ சப்பட்டு நின்றவனய், வகுப்பைவிட்டு

வெளிவரும்போது, ஆசிரியரிடம் "சங்க நூலின் உவமை இயற்கை அழகுடையது என்கிறோமே இந்த உவமைக்கு நிகராக அங்கு உவமை ஒன்றேனும் உளதோ?" என்றேன். "நீங்கள் அதனை நன்றாக ரசித்தீர்கள் வேறு யாரும் அதனை உணரவில்லை" என்று கூறி, ஆசிரியர் சென்ற பின்னரும், அதனையே படம் பிடித்து உன்னி உன்னி மனங் குளிர்ந்தேன். கம்பனைக் கற்க என்னில் உற்ற வித்து இது தான்.

கம்பனில் என்னை ஈடுபடச் செய்தது இச்செய்யுள் என அறிவித்தால் மட்டும் போதாது; அதன் நயனையும் சற்று அறிவித்தல்வேண்டும். அங்குசம் நிமிர்ந்தால் யானை அடங்காது திமிர்கிறது; நிறையழிந்தால் சிறுமை ஏற்படும். பெண்டிர் நாணம் நிறையால் அடங்கியிருக்கும் வரை சேய் போல் பிரியத்துக்கு ஆளாவர்; நாணம் நிறைகெடின் பேய்போல் வெறி கொண்டு நிற்பர்; வெறுப்புக்கு ஆளாவர் என்பது பெரியோர் கருத்து; சீதை கற்பெனும் திண்மைக்கு ஒரு தனிப் பெருஞ் சான்றாக வளர்ந்தவள்; மருத்தன் எனும் மாயா சனகன் "திருமகளும் பொது, நாமகளும் பொது, நீ இராவணனுடன் இணங்கி வாழ்ந்து எனக்கும் உனக்கும் நல்ல சிறப்பை நல்குவாய்" என்று கூறியபோது "இவ்வுரை எந்தை கூறான்" "நீ சனகன் அல்லை" என்று கூறிய மாற்றம் சீதையின் இளம் பருவ வளர்ப்புக் கொள்கைகளை நன்கு விளக்கி நிற்கும்; பின்னர் அரக்கர் கோட்டத்துள் சிறைப் பட்டிருந்த போது அனுமான் அவளை விடுவிக்க எண்ணி "என் தோள்மீது ஏறு, அக்கரை சேர்ந்து துயர் ஆறு" என்று கூறியபோது "நீ ஐம் பொறிகளையும் அடக்கிய பிரமச்சாரியாயினும் ஆண் ஆகுவை; ஆதலின் நான் உன்னைத் தீண்டலாகாது" என்று கூறிய மறுமொழி–அல்லற் பட்டாலும் அறந்தவறாத நெறியினள் சீதை எனக் காட்டுகிறது அனுமான் சீதையைக் கண்டு, இராமனிடம் வந்து அறிவித்தபோதும் "கண்டனென் கற்பினுக்கு அணியை" என்று போற்றி நின்றான்; "தையல் தன் கற்பு" உய்யும் வாழ்நாள் எல்லாம்துணை என்று பல இடங்களில் போற்றப்படுகிறது; அத்தகைய திண்ணிய கற்பு இராமனைக் கண்டதும் கலங்கலானது; நிலை குலைந்தது; அவள் உள்ளம் உருகிநின்றது; தன்னை மறந்து அவள் ஓவியம் ஆனாள்; சேடியர் கவனித்து எடுத்துச் சென்று பூம்பள்ளியிற் சேர்க்கும் நிலை ஏற்பட்டது. இரவெல்லாம் இராமனையே எண்ணி நைந்து உருகினாள். பகற்போதும் யாண்டும் இராமன் எண்ணமே சிந்தையிற் குடிகொண்டது.

இந்திர நீலம்ஒத்து இருண்ட குஞ்சியும்
சந்திரவதனமும் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளுமே அல,
முந்தி என் உயிரை அம்முறுவல்
உண்டதே.

என்று எண்ணி எண்ணி, ஏமாந்தவள் போல் "கண்ணுக்கு எட்டியது கைக்கு எட்டவில்லையே", "சிந்தை நொந்த மங்கையிடம் வந்து அஞ்சல் என்று மொழிந்திலாத ஆண்மை ஒரு ஆண்மையோ" எனப் பழிக்கவும் செய்தாள், திருமண மண்டபத்துள்ளும் தன்னை அடக்கும் ஆற்றல் அற்றவளாய், இராமனைக் "கைவளை திருத்துபு கடைக்கணின் நுகர்ந்தாள்". அங்குசம் நிமிர்ந்த யானை போல் சீதை நிறைகுலைந்து நிலைகெட்டு உள்ளத்தில் அல்லற்பட்டாள். சீதையின் நிறைபற்றிக் கூறினோம். இஃதுடன் விட்டிருப்பின் கம்பர் கவிச் சக்கரவர்த்தி ஆயிருக்கமாட்டார்; அவர் "சமம்செய்து சீர் தூக்கும்கோல்" போல்வார். இராமன் நிறைபற்றியும் இவ்வாறே நனி விளக்குகிறார். "இரு மாதரைச் சிந்தையாலும்" கருதாச் சீரிய விரதமுடைய செம்மல், இராமன் மிதிலையில் வில்லை வளைக்கச் சென்றபோதும், மணவிழா முன் நடந்த ஊர்வலத்திலும் கூடி அவாவி உற்று நோக்கி நின்ற இளம்பெண்டிரைச் சற்றும் நோக்காது சென்றவன் இராமன். அவர்கள் எல்லாரும்

"தீர்த்தன் நம்மை சிந்தையில்
செங்கண்ணிற்
பார்த்திலன், உட்பிரிவிலன்–"

"கருணை என்பது கண்டறியான்,
பெரும்
பருணி தன் சொல்! படுகொலை
யான்!"
"நடர்கண் அன்பிலான்; அவன்
காத்தற்கு
ஆம் இவன் என்னலாமோ?-"

என்று பழிக்கத்தக்க நிலையிற் சிந்தையைச் சிதறவிடாது செந்நெறி கடைப்பிடித்து நின்றவன் இராமன். இத்தகைய நிறை குணத்து இராமன் மிதிலையில் அரண்மனை மாடியில் நின்ற சீதையைக் கண்டதும் சிந்தை கலங்கினன், நிறை குறைவுற்றது; அவன் உள்ளம் உருகியது; முனிவர் பின்னுற் செல்கிறுன் எவ்வாறு?

"சிந்தையும் நிறையும் மெய்நலனும்
பின்செல
மைந்தனும் முனியொடு மறையப்
போயினன்"

துஷ்யந்தனைப் பார்த்துச் செல்கிற சகுந்தலைபோல இராமன் சிந்தை பின் நோக்குகிறது, அவன் நிறை பின்னிட்டது அவன் பார்வையும் பின்சென்றது "நிறை" எனும் அங்குசம் நிலைகுலைந்ததாகச் சீதைக்குக் கற்பனை செய்த கம்ப நாடன் "நிறையுடர் பின் செல" என இராமனுக்கும் அதே சொல்லால் கற்பனை செய்தான் யாவரே இது செய்ய வல்லவர்? வல்லவன் கம்ப நாடன் ஒருவனே. நிலை கலங்கிய இராமன் செயல் என்ன? முனிவருடன் சென்று படுத்திருக்கும் போதும் "தானும் தனிமையும் தையலும் ஆயினன்." தன்னை உணர்வான்-தனிமையை உணர்வான், உடன் சீதையை உணர்வான்-எண்ணம் எல்லாம் சீதை மேல்-சீதையில் உருவெளி காண்கிறுன் பல பல எண்ணுகின்றுன். ஒன்று கூறுகிறுன் யாது?

"ஏகும் நல்வழி; அல் வழி என் மனம்
ஆகுமோ? இதற்காகிய காரணம்
பாகுபோல் மொழி பைந்தொடி
கன்னி எற்கு
ஆகவே; இதற்கு ஐயுறவ
இல்லையே"

என்மனம் எப்போதும் நல்வழியிற் செல்வது; இப்போது அது புதிதாக அல்வழியிற் சென்றுள்ளது. இதற்கு ஒரு காரணம் இருத்தல் வேண்டும் இப்பைந்தொடி எனக்காகவே படைக்கப் பட்டிருக்கிறுள்; இதில் ஐயமில்லை. என்று விதியினுல் நிறைகெட்டு உறவுமுறை ஏற்படுவதாகக் கற்பிக்கிறுர் கம்பர். அங்குசம் நிமிர்ந்து யானை திரிவதுபோல உள்ளத்து நிறைகெடின் ஆணும் பெண்ணும் அல்லற் படுவர் என்பதைச் சிறந்த குணத்து நல்லுருவங்கள் ஆகிய இராமன் சீதை இருவரைக்கொண்டு கற்பிக்கிறுர் கம்பர். "மைந்தர்க்கும் மாதரார்க்கும் மனம் என்பது ஒன்றே" என்று பாடிய கம்பர் அதற்கு உரிய சான்ருக இராமனையும் சீதையையும் காட்டி, நிறைகெடும் பருவ தருமத்தை நனி விளக்கியுள்ளார். இவ்வாறு கம்ப நாடகம் தொடக்கம் முதல் இறுதிவரை பல பொருள்களில் தொடர்பு கொண்டு நிற்கும். அவற்றை ஆய்ந்து கற்று இன்புற என் உள்ளத்தில் ஆர்வம் மிகுந்தது.

ஆர்வத்தால் 4-3-1933இல் கம்பராமாயணம் இரு தொகுதிகளையும் வாங்கினேன். தினமும் கொஞ்சம் கொஞ்சம் படித்தேன். துய்த்தேன். கோபாலகிருஷ்ணமாச்சாரியார் உரையால் முற்றும் கற்றேன். பன்முறைக் கற்றுக் கம்பரையே மணந்தவன் ஆனேன். என் மனைக்குக் "கம்பர் வளாகம்" எனப் பெயர், என் புனைப்பெயர் "கம்பரப்பர்". இவ்வாறு ஒரு பித்து ஏறியது 'கம்பர் கவிநலம்' என நூல் எழுதி முடித்தேன். அதனை இரண்டாண்டுகட்கு முன்னர் "வானதிப் பதிப்பகத்தார்" வெளியிட்டனர். அதனைக் கற்ற அன்பர்கள் வானளாவப் புகழ்ந்து கடிதம் எழிதினர்கள். அவர்கட்கு எம் நன்றி. வேலூர் அன்பர் ஒருவர் மிக்க பற்றுடையவராய் அடிக்கடி வந்து அளவளாவினர். அவர் பெயர் மறந்த அறிவு மடத்துக்கு வருந்துகிறேன். "கம்பர் 1000" என அழகிய ஆயிரம் பாடல்களைத் தொகுத்து ஒரு நூல் வெளிவரச் செய்தேன். அடுத்த ஒன்று "கம்பர் கவித்திறன்" என எழுதியுள்ளேன். வானதி அரசர் மனம் விழையின் அது கடிதில் வெளிவரும். பத்து ஆண்டுகட்குமுன் சீரங்கம் சென்றபோது, ராமாயணம் அரங்கேற்றிய மண்டபம் இது: கம்பர் உரு இது என ஒரு சிலையைக் காட்டினர்கள். அதனைப் போட்டோ எடுத்து சுவரில் மாட்டிவைத்து வழிபடுகிறேன். அவர் அருளால் அவரை நன்கு துய்த்து வருகிறேன்.

இந்நாள் இளைஞர் பலர் கம்பனைக் கற்கிருர்கள், பேசுகிருர்கள், எழுதுகிருர்கள் அவர்கட்கு எல்லாம் எம் வாழ்த்து. கம்பனைப் படிக்க வேண்டிய முறையிற் படித்து நுட்பங்கண்டு திளைத்து இன்புறுகின்றவர்களில் யான் மிக மிகப் போற்றும் ஒருவர் S நல்ல பெருமாள் B. E. ஆவர். விஞ்சையர் இவர் இலக்கிய நயம் சிறப்பாகத் துய்க்கின்றுர். அவர் வாழ்க! கம்பன் கழகம் வாழ்க!

# கம்பரும் அவரது இராமாவதாரமும்

வி. மு. சுப்பிரமணிய ஐயர், M. A.,

நான் 1925-முதல் 1929-முடியச் சிதம்பரம் மீனுட்சி தமிழ்க் காலேஜில் வித்வான் வகுப்பிற்குப் படித்துக் கொண்டிருந்த போது, காலஞ்சென்ற மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் அதன் முதல்வராக இருந்தார்கள். அப்போது அது தெற்கு வீதியினுள் பல்லவராயன்பேட்டைச் சத்திரக் கட்டிடத்தில் நடந்தது. என்னேடு உடன்படித்தவர்கள் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் மடத்தைச் சேர்ந்த திரு. அ. நடேச முதலியாரும் திரு. ந. ஆறுமுக முதலியாரும் ஆவர். எங்களுக்குப் பைனல் வகுப்பிற்குக் கம்பராமாயணத்தில் கிட்கிந்தா காண்டமும் சுந்தர காண்டமும் பாடமாக இருந்தன. ஐயரவர்கள் 1927ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் தன் உடல் தளர்ச்சி காரணமாக முதல்வர் வேலையை விட்டுச் சென்னைக்குச் சென்றுவிட்டார்கள். தான் திருத்தி வைத்திருந்த கம்ப ராமாயண அச்சுப் புத்தகத்தை நாங்கள் பயன் படுத்திக்கொள்ளும்படி கொடுத்திருந்தார்கள்.

ஐயரவர்கள் திருவாவடுதுறை ஆதீனத்து வித்துவானுக மாயூரத்தில் இருந்த காலத்தில் முதலில் தமிழ் நூல்களைப் பாடம் கேட்கத் தொடங்கினுர்கள். அதன் விரிவெல்லாம் அவர்கள் எழுதிய பிள்ளையவர்கள் சரித்திரம் 2ம் பாகத்தால் நன்கு விளங்கும்.

1929 ஆம் ஆண்டு எனக்குச் சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் உயர் நிலைப்பள்ளியில் தமிழாசிரியர் வேலைகிடைத்தது. ஜுன் மாதம் அவ் வேலையை ஒப்புக்கொண்டேன். அந்த நாள் முதல் ஐயரவர்கள் திருக்கழுக் குன்றத்தில் 1942ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 28ஆம் தேதி ஸ்ரீவேதபுரீசர் திருவடி நிழலை அடைந்தது வரையில் காலையிலும் மாலையிலும் அவர்கள் செய்த தமிழ்ப் பணியில் ஈடுபட்டு வந்தேன். அவர்கள் இரண்டு நூல்களை நாடோறும் படிப்பது வழக்கம். ஒன்று தேவாரம் மற்றொன்று கம்பராமாயணம். நேரத்திற்குத் தக்கபடி அவற்றில் சில பாடல்களேனும் படிக்காமலிருக்க மாட்டார்கள். அவ்வப்போது தம் ஆசிரியர் கம்ப ராமாயணத்தைப் பாராட்டிச் சொன்னதையும் சொல்லுவார்கள். ஒரு நாள் சீதா பிராட்டி வருந்திக் கூறுவதாக உள்ள

"பஞ்சுஅரங்கு தீயின்ஆவி பற்ற,நீடு கொற்ற வில்
வெஞ் சரங்கள் நெஞ்சு அரங்க, வெய்ய காமன் எய்யவே,
சஞ்சலம் கலந்த போது, தையலாரை, உய்ய வந்து,
"அஞ்சல்! அஞ்சல்!" என்கிலாத ஆண்மை என்ன ஆண்மையே?"

(பால-கார்முகப் படலம்-491) என்ற செய்யுளைப் படித்தபோது பிள்ளையவர்கள் "இப்பாடல்களெல்லாம் நினைத்துப் பாடிய பாடல்களா" என்று சொன்னதாகச் சொன்னுர்கள் - அவர்களே மூன்று முறை கம்பராமாயணத்தைத் தம் கையாலேயே எழுதியிருப்பதாகவும் சொன்னுர்கள். மாயூரத்திலிருந்த போது கம்பராமாயணம் அச்சிட்டு வந்திருப்பதாகக் கேள்வியுற்ற ஐயரவர்கள் வெயிலையும் பாராமல் பிள்ளைய

வர்கள் சிரமபரிகாரம் செய்துகொண்டிருந்தபோது ஓடிப்போய் வாங்கி வந்தார்கள். அது வெங்காயத் தோல் போலிருந்த காகிதத்தில் அச்சிடப்பட்டிருந்தது விலையும் மலிவு பிழையும் மலிவு. பிற்காலத்தில் திருவாவடுதுறைக்குப் பிள்ளையவர்கள் வந்தபோது சின்ன பண்டார சந்நிதிகளும் ஐயரவர்களும் மடத்தில் உள்ள ஏட்டுச் சுவடிகளோடு அதில் பல திருத்தங்கள் செய்தனர். அது இன்று திருவான்மியூரில் அவர்கள் பெயரால் விளங்கும் நூல் நிலையத்திலுள்ளது என நினைக்கிறேன்

தமக்குப் பிள்ளையவர்கள் சொல்லியதாகக் கம்பர் வாழ்க்கையைப் பற்றிச் சில செய்திகளையும் சொன்னார்கள். ஒரு நாள் கம்பர் வீட்டில் ஏதோ ஒரு சிறப்பான நிகழ்ச்சி நடந்தது. அதற்குச் சடையப்ப வள்ளல் வர நேரமாயிற்று. நல்ல இடங்களில் முன்னே வந்தவர்கள் உட்கார்ந்து விட்டார்கள் வள்ளல் ஏதோ ஓரிடத்தில் இருந்தார். அதைப்பற்றி யாரோ ஒருவர் கம்பரிடம் தெரிவித்தபோது கம்பர் "அவர்களுக்கு என்றும் அழியாத நல்ல இடம் வைத்திருக்கின்றேன் என்று சொன்னாராம். அதன்படியே கம்பர் தம் இராமாயணத்தில் முக்கியமான இடங்களில் சடையப்ப வள்ளல் பெயரை அமைத்துப் பாடியிருக்கிறார். எவ்வளவோ பேர் பாடல்களைப் பாடிச் செருகியிருந்தாலும் இந்தப் பாடல்களிடம் அவர்கள் ஜபம் பலிக்கவில்லை.

கம்பர் போர்களை வருணிக்கும்போது ஒரு போரை வருணித்ததுபோன்று மற்றொன்று இராது என்று சொல்லுவார்கள். அவர்களே கும்பகோணத்தில்போர்ட்டர் ஹாலில் கம்ப ராமாயணத்தில் கும்பகருணன் வதைப் படலத்தை உபந்நியாசம் செய்திருப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள்.

கம்பருடைய தனியன்களில் ஒன்று

"வாழ்வார் திரு வெண்ணெய் நல்லூர்ச்
சடையப்பன் வாழ்த்துப் பெறத்,
தாழ்வார் உயரப் புலவோர்
அகவிருள் தான் அகலப்,
போழ்வார் கதிரின் உதித்த
தெய்வப் புலமைக் கம்ப நாட்டு,
ஆழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க்கு
யாதும் அரியதன்றே"

என்னும் பாடல். இதை முன்பு அச்சிட்டவர்கள் திருவெண்ணெய் நல்லூர் என்று அச்சிட்டார்கள். அதை ஆதாரமாகக் கொண்டு சுந்தரர் அடிமை வழக்குத் தீர்ந்த தலமே சடையப்ப வள்ளலின் ஊர் என எண்ணிக் கொண்டிருந்தார்கள். நானும், அவ்வாறே எண்ணிக் கொண்டிருந்தேன். இராமாயணத்தைப் படித்து வரும்போது மேலே திருத்தத்தைச் சொல்லியதன்றித் தாம் வெண்ணெய் நல்லூர், கதிராமங்கலம் (கதிர்வேய் மங்கலம்) தேரமுந்தூர், க்ஷேத்திர பாலபுரம், வயிரபுரம் (வயிரவபுரம்) முதலிய கம்பர் வாழ்க்கையோடு தொடர்புடைய ஊர்களுக்குச் சென்று நேரில் பார்த்துவிட்டு வந்தருப்பதாகச் சொன்னார்கள்.

கம்பர் இயற்றியதாகக் "காணியாளர் அகவல்" என்ற நூலின் காகிதப்பிரதி அவர்களிடம் இருந்தது. அதில் சோழநாட்டு வேளாளர்களுடைய கோத்திரப் பெயர்களைக் கூறுவது கம்பருடைய கோத்திரப் பெயர் காரணக் கொடை என்பது தனியன்களுள் ஒன்றான "நாரணன் விளையாட்டு" என்று தொடங்கும் செய்யுளின் ஈற்றடியில் "காரணக் கொடையான் கம்பன்" என்று வருகிறது. இதே பெயர் சடகோபரந்தாதியின் தனியன் 2ஆம் பாட்டிலும் காணப்படுகிறது.

ஐயரவர்கள் சிதம்பரத்திலிருந்து குறுந்தொகையைப் படித்து ஆராய்ந்து வந்தார்கள். தமிழ்க் காலேஜில் ஆசிரியராகப் பணியாற்றிய சமூகரங்கபுரம் வே. வேங்கடராஜலு ரெட்டியாரவர்கள் தம் கையால் எழுதிக் கொடுத்த பிரதிதான் ஐயரவர்கள் படித்துவந்த பிரதி. அதில் 193ஆம் பாட்டு

மட்டம் பெய்த மணிக்கலத், தன்ன,
இட்டு வாய்ச்சுனைய பகுவாய்த்
தேரை,
தட்டைப்பறையிற் கறங்கும் நாடன்,

தொல்லைத் திங்கள் நெடு வெண்ணி
லவின்,
மணந்தனன் மன்னெடுந்தோளே,
இன்றும் முல்லை முகை நாறும்மே''

என்பது. இதில் தலைவியின் தோள்களை நெடுநாட்களுக்கு முன் மணந்ததற்கும் இன்றும் முல்லை மணம் நாறுதற்கும் இயைபு புலப்படவில்லை சிறிதுநேரம் கழித்து ஐயரவர்கள் "இப்போது இதன் கருத்து விளங்கிவிட்டது'' என்று தோளைத் தட்டிக்கொண்டு சொன்னார்கள். பிள்ளைய வர்களிடம் தாம் கம்பராமாயண பாடங் கேட்டபொழுது கம்ப ராமாயணத்தில் நாட்டுப் படலத்தின் 48ஆம் செய்யுளான

"பந்தினை இளையவர் பயிலிடம் மயிலூர்
கந்தனை அனையவர் கலை தெரி கழகம்,
சந்தன வனம் அல; சண்பக வனம் ஆம்;
நந்தன வனம் அல நறை விரி புறவம்''

என்னும் பாடலுக்குச் சொன்ன பொருளை நினைவுகூர்ந்து கண்ணீர் விட்டார்கள். மக ளிர் பந்தாடும் இடம் சந்தன வனம் ஆயி னும் அவர்கள் மேனியின் நறுமணத்தால் சண்பக வனமாக மாறின. இளைஞர் நந் தன வனத்தில் கல்வி பயின்றாலும் அவர் கள் உடலின் நறுமணத்தால் முல்லை நில மாயிற்று'' என்பது இதன் பொருள். அவர்கள் குறுந்தொகையை அச்சிட்ட போது அதன் ஒப்புமைப் பகுதியில் இக் கம்ப ராமாயணச் செய்யுளையும்

"தேன்மறிக்கும் வெளித் தொங்கல்
அறற் கூந்தற் றிருந்திழைகள்
மான்மறிக்குந் திருமேனி மலர்
முல்லைப் புறவமே''

என்ற சிதம்பர செய்யுட்கோவைப் பகுதி யையும் (57) கொடுத்துள்ளதோடு அதன் அடிக்குறிப்பில் "இச்செய்யுள் நிரனிறை. இதன் பொருள்: இளைய மகளிர் சந்தன வனங்களில் பந்தாடல் செய்தனர்; அவ்வனங்கள் தம் இயற்கை மாறி அம் மகளிர் மேனியின் இயற்கை மண மாகிய சண்பக மணத்தால் சண்பக வனம்போல் ஆயின. அங்ஙனமே கந்தனையனைய ஆடவர் கலை தெரி கழகங் கள் அமைந்த நந்தன வனங்கள் அவர்தம் மேனியின் முல்லை மணத்தால் முல்லை வனம்போல் ஆயின. என்னுடைய ஆசிரி யராகிய மகாவித்துவான் பிள்ளையவர்கள் இச்செய்யுளுக்குக் கூறிய உரை இக்குறுந் தொகைச் செய்யுளுக்கு உரை காணப் பயன்பட்டது, என்று அச்சிட்டுள்ளார்கள்.

எங்களுக்குப் பாடம் சொல்லிவரும் போது ஒரு நாள் கம்ப ராமாயணத்தில் நாட்டுப் படலத்தில் வரும்

"முறை அறிந்து அவாவை நீக்கி
முனிவழி முனிந்து வெஃகும்,
இறையறிந்து உயிர்க்கு நல்கும்
இசைகெழு வேந்தன் காக்கப்,
பொறை தவிர்ந்து உயிர்க்கும் தெய்வப்
பூதலந் தன்னில் பொன்னின்
நிறைபரம் சொரிந்து வங்கம்
நெடுமுதுகு ஆற்றும் நெல்தல்''

என்ற செய்யுளை எடுத்துச் சொல்லிப் பத சாரமும் மிக அழகாகச் சொன்னார்கள். அன்றே மனப்பாடம் செய்ய வேண்டிய சிரமமில்லாமல் இப்பாடல் என் மனத்தில் அழியாமற் பதிந்துவிட்டது.

இங்ஙனம் ஐயரவர்களோடு பழகிய பேறே மர்ரே அண்டு கம்பெனி ஸ்ரீ ராஜம் அவர்கள் வெளியிட்ட கம்பராமாயணப் பதிப்புக் குழுவில் என்னை ஒருவனாகச் சேர்த்து வைத்தது.

இவற்றை எல்லாம் நோக்கும்போது,

"இம்பர் நாட்டில் செல்வம் எல்லாம்
எய்தி அரசாண்டு டிருந்தாலும்,
உம்பர் நாட்டின் கற்பகக்கா
ஓங்கும் நிழில் இருந்தாலும்
செம்பொன் மேரு அனையபுயத்
திறல்சேர் இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற்போல்
கற்றோர்க் கிதயம் களியதே''

மகா கவி பாரதியாரும் "கன்னனெடு கொடை போயிற்று உயர் கம்ப நாட னுடன் கவிதை போயிற்று'' என்று பாடி யுள்ளதும் இங்கே சிந்திக்கத் தக்கது.

# கம்பனை எனக்குக் காட்டியவர்கள்

தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

இப்போது இருப்பதைப்போல நான், பிறந்து வளர்ந்து பள்ளிக்கூடத்திலும் கல்லூரியிலும் படித்து வந்தபோது-அதாவது 1920 வரை-கம்பனுக்குக் கொண்டாட்டம் ஒன்றும் நிகழ்ந்ததில்லை. பாடங்களில் சில கம்பராமாயணப் பாடல்கள் வரும். அவற்றை மிக ஈடுபாடோடு பாடம் சொல்லிவந்த எனது தமிழாசிரியர்களே கம்பனை எனக்குக் காட்டிக் கொடுத்தவர்கள். ஏழாவது வகுப்பில் சிங்காரவேலு முதலியாரிடம் கற்கின்ற பேறு பெற்றேன், பல்கலைக் கழகங்கள் இன்றும் செய்ய முடியாத வேலையை அவர் ஒருவராக இருந்தே செய்து முடித்த பெருந் தமிழர். அபிராம சிந்தாமணிபோல இன்னொரு நூல் இன்னும் வரவில்லை. உயர்நிலைப் பள்ளியில் பூ. கிருஷ்ணசாமி முதலியாரிடம் தமிழ்க் கற்றேன். பல ஆண்டுகள் உயர்நிலைப் பள்ளி இறுதித் தேர்வில், தேர்வு எழுதுவோர்க்கு வேண்டிய தமிழ்ப் பாடக் குறிப்புகளை, பல ஆண்டுகள் அச்சிட்டு வழங்கிய அனுபவத்தில் பழுத்த பெருந் தமிழ்க் கிழவர்; தமிழ் இலக்கணம் அறியாதபோது கம்பனைத்தவருகப் புரிந்து கொள்ளும், பெருங்கேடு விளையும் எனக் காட்டியவர்; ஆரவாரம் சிறிதும் இன்றி மாணவர்களை உயர்வாகவே மரியாதையுடன் பேசி, தமிழை ரத்தத்தில் பாயும் படிச் செய்தவர்.

கல்லூரியிலே, திருமணம் செல்வக் கேசவராய முதலியார் எங்கள் தமிழாசிரியராக விளங்கினர்; கம்பரும் திருவள்ளுவருமே தமிழுக்குக் கதி என்று உண்மையில் நம்பிய ஒருவர்; அவர் எழுதிய "கம்பர்" என்ற நூல், விநோத ரச மஞ்சரியையே நம்பாமல் ஆராய்ச்சிக் கண் கொண்டு, கம்பனைப் பார்க்கின்ற கண்ணைத் திறந்து வைத்தார். குறிப்புரை, சிறப்புரை சொல்லி அலைக்கழிக்க வையாமல், கம்பன் பாடலையே இனிமையோடு பல முறை திரும்பத் திரும்ப, பாடிப் பாடி, கம்பன் உள்ளத்தை உள்ளுணர்வால் உணரவேண்டு மென்கிற உண்மையை எங்கள் அனுபவத்தில் நிலைத்து நிற்குமாறு செய்த அந்த நன்றிக்கு என்ன கைம்மாறு செய்ய முடியும். கல்லூரிப் படிப்பின் கடைசி ஆண்டு, சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை மோனையும் எதுகையும் தழும்பும் அடுக்கு மொழி பயிலும் அழகு தமிழில், கம்பனைப் பற்றிக் காது குளிர மனம் குளிரப் பேசி கேட்ட நினைவு இன்றும் பசுமையாக என் உள்ளத்தில் விளங்குகிறது.

நான் பிறந்தது ஒரு தமிழ்க் குடும்பம்; என்னுடைய தந்தையார் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் மாணாக்கராகிய அஷ்டாவதானம் சுப்புராய செட்டியாரிடம் தமிழ்க் கற்றவர்; அதனாலேயே மீனாட்சிசுந்தரம் என எனக்குப் பெயரிட்டார்; சுப்புராய செட்டியாரின் நூல் நிலையத்தில் இருந்து எனது தந்தையார் வாங்கிய நூல்கள் வீட்டில் எங்கும் கிடக்கும்; எனது தமையனார் பெ. கிருஷ்ணசாமிக் காவலர் மகா வித்துவான் கோ. வடிவேல் செட்டியார் அவர்களிடம் தமிழ் கற்கும் போது வாங்கிச் சேர்த்த நூல்களும் எங்கும் கிடக்கும்; இந்த நூல்களை அப்போது அப்போது தொட்டுப் பார்க்கும் வழக்கம்

உடைய எனக்குப் பின்னெல்லாம் கம்பனைக் காட்டித்தர வந்தவர்கள் இந்த நூலாசிரியர்களேயாம்; திருமயிலை ஷண்முகம் பிள்ளை, ராமசாமி நாயுடு, சடகோப ராமானுஜாச்சாரியார் முதலியவர்கள் எழுதிய உரை நூல்களை இந்த முறையில் படிக்கும் போது கம்பனை ஒருவாறு கண்டு மகிழலானேன்; என்னுடைய தமையனரிடம் தமிழ்க் கற்கவந்த நண்பர், என்னை உடன் பிறந்த தம்பியாகவே அன்பு பாராட்டிய திரு. மயிலை பாலசுந்தர செட்டியாரும் சீ. கலியாண சுந்தர செட்டியாரும் கம்பனிடத்தில் எல்லையில்லா ஈடுபாடு கொண்டு கம்பராமாயணம் முழுவதையும் பாடங் கேட்டும், பாடம் சொல்லியும் வந்தபோது பல பல சமயங்களில் அவர்களோடு உடனிருக்கும் வாய்ப்புக் கிடைத்த காலங்களில் எல்லாம் கம்பனில் ஆழக் குளித்து, கம்பநாட்டாழ்வாரின் ஆழத்தில் ஒரு சிறிதேனும் காண்கின்ற பெரும் பேறு பெற்றேன் மகாதேவ முதலியார் என்ற தமிழாசிரியர் சென்னையில் வாழ்ந்தவர். பின் தேவகோட்டை முதலிய இடங்களுக்குச் சென்று கம்பராமாயண பாடம் சொல்லிப் பழகி, தென்னட்டுத் தமிழ்ப் பேராசிரியர்களுடைய தொடர்பினல், கம்பனைப் பல நுட்பங்களை விளக்கும் திறமை பெற்று, மேலே கூறிய பாலசுந்தரம் செட்டியார்க்குப் பாடம் சொல்லும்போது ஒரு சில நாட்கள் மிக அமைதியாக வாழைப் பழத்தில் ஊசியை நுழைப்பது போல, கம்பன் கருத்தை இனிமையோடு, அழகாக விளக்கி வந்ததைக் கேட்டு, மகிழ்கின்ற வாய்ப்பு எனக்குக் கிடைத்திருந்தது. கோ வடிவேல் செட்டியார் அவர்களிடம் தமிழ் கற்கப் போனபோது கம்பராமாயணத்தில் வரும் அருமையான பாடல்களுக்கு உரை எழுதிய முப்பனரின் நூலை எனக்குத் தந்து கம்பராமாயணத்தைக் கற்குமாறு செய்தார்கள். ஆங்கிலக் கல்வி கற்றதன் பயனுக, நூலில் இருக்கும் பாடத்தை மட்டும் நம்பாமல் ஏட்டில் நல்ல பாடமிருந்தும், ஏடு எழுதுபவர்கள் தவருக எழுதியதாலேயே பாடல்கள் புரியாமற் போகின்றன என்ற எண்ணம் என் மனத்தில் வலிவேறி நின்றதால், முப்பனரின் உரையை மட்டும் நான் நம்ப முடியாமற் போயிற்று. வெவ்வேறு சூழலில் உழன்று வந்த நான், ஏடு தேடும் முயற்சியில் ஈடுபடவில்லை.

எனது நண்பர் கலாநிலையம் N. சேஷாசலம் வக்கீலாக இருந்தும், மாலைப்பொழுதை எல்லாம், முதியோர்க் கல்வியை ஆங்கிலத்திலும் தமிழிலும் வழங்குகின்ற தவத்தை மேற்கொண்டிருந்தார்; அவருக்கிருந்த கம்பராமாயணப் பித்து எனக்கும் ஒட்டிக்கொண்டது. ஆனல் அவருடைய ஈடுபாடு எல்லையில்லாதது. கம்பனைக் கற்பதே உண்மையான வீடுபேற்றிற்கு வழி என நம்பியவர் அவர்; பல புதிய கருத்துக்களைக் கம்பனிலிருந்து எடுத்துக் காட்டியவர்; ஆனல் கம்பனை முழுதும் விளக்குவதற்கு முன் காலஞ் சென்றர்.

கம்பனை உள்ளபடி அனுபவிக்க, தமிழ்நாட்டுக்குக் கற்றுக் கொடுத்தவர் டி. கே சிதம்பரநாத முதலியாரே; பானையைத்தட்டிப் பார்த்துப் பெண்கள் ஓட்டை என்று உணர்ந்து கொள்வது போல, பாட்டைப் பாடிப் பார்த்தே, கம்பன் பாட்டா இல்லையா என்று சொல்லும் திறமையைப் பலமுறை காட்டியவர்; ஆனல், கம்பனை அனுபவிக்கும் இன்பத்தை இவரிடம் பெற்றுலும், இந்த முறையைப் பின்பற்றி, கம்பராமாயணப் பதிப்பினை என் அனுபவம் ஒன்று மட்டும் கொண்டே, வரையறுக்க முடியாது என்று என்னுள் ஒன்று பேசிக்கொண்டே இருந்தது. அது எப்படி ஆனலும் கம்பனுக்கு இன்றைய தமிழ்நாட்டில் புத்துயிர் தந்து, ஆண்களும் பெண்களும், சிறுவர்களும், சிறுமிகளும், ஏழைகளும் எளியவர்களும் தம்மை மறந்து கம்பனை அனுபவிக்கும் படிச் செய்து, ஆங்கிலப் பித்து ஏறியவர்களையும் பதவி செருக்கு உடையவர்களையும் அவற்றை எல்லாம் மறந்து கம்பனுடைய தமிழ் இனிமையில் மூழ்கித் திளைக்குமாறு தம்முடைய கம்பராமாயண விளக்கப் பேச்சின் சுவையோடு, தம்முடைய குற்றலத் தோசை இட்லியின் சுவையையும் ஊட்டி ஆங்கில மோகத்தை மறக்கச் செய்து, கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழை இந்தியாவில் வளர்த்த

பெருமை இவருக்கு உண்டு; இவர் வழி பிறந்த காரைக்குடி கம்பன் கழகமும், அதன் வழி வளர்ந்த கம்பன் கழகங்களும் எனக்குக் கம்பனைப் புதிய புதிய கோணத்தில் காட்டி வருவதனை எல்லோரும் அறிந்திருப்பதனுல் நான் எடுத்துக்கூற வேண்டுவதில்லை.

மகா வித்துவான் ரா. இராகவ ஐயங்காரின் கம்ப ராமாயணப் பேச்சுக்கள், வி. பி. சுப்ரமணிய முதலியாரின் கம்பராமாயண இன்பப் பாடல் தொகுப்புரைகள் முதலியவைபற்றிச் சொல்லவே வேண்டா; கனகசுந்தரம் பிள்ளையின் பாலகாண்டப் பதிப்பு ஒரு புதிய யுகத்தைத் தொடங்கியது எனலாம்; அண்ணுமலைப் பல்கலைக் கழகம் பாடல்களை எல்லாம் திரட்டி, பதங்களையும் பிரித்து குறிப்புரையோடும் ஆராய்ச்சி நுட்பங்களோடும் பதிப்பித்த கம்ப ராமாயணத்தின் பதிப்புக் குழுவின் சிலபோது தொண்டாற்றியதின் பயனுக, கம்பராமாயண ஏடுகளை நேரில் அறிந்து சுவைக்கும் பேறும் எனக்குக் கிடைத்தது. கம்பனைச் சுவைக்கும் வழிகள் பல பல தோன்றின; தமிழ்த் தாத்தாவான சாமிநாத ஐயரவர்கள் எழுதிவைத்த பெறுதற்கரிய குறிப்புகளோடு கலாட்சேத்திர பதிப்பும் வெளிவந்தது. கம்பனுடைய ஆழத்தை நம்மால் காணமுடியாது என்கின்ற நம்பிக்கையை மேலும் வளர்த்தது; எந்தப் பாடமானுலும் அழகிய பொருள் காணக்கூடிய சடகோப ராமானுஜாச்சாரியாரும் கிருஷ்ணமாச்சாரியாரும் எழுதிய கம்பராமாயண உரைப் பதிப்பு எல்லோருக்கும் போல எனக்கும் கம்பனில் ஏற்பட்ட பல ஐயங்களை நீக்கியது; என்னுடைய நண்பர் S. ராஜம் அவர்கள் பதிப்பித்த கம்பராமாயணம் கம்பனை யார் வேண்டுமானுலும் கற்றறியலாம் என்ற நம்பிக்கையைத், தமிழர் மனத்தில் நிலை நாட்டியது. அந்த வகையில் கம்பனை எனக்குக் காட்டிக் கொடுத்தவர் அவரே; சென்னைக் கம்பன் கழகம் தன்னுடைய கம்பராமாயணப் பதிப்புக் குழுவின் தலைவனுக என்னைத் தொண்டாற்றச் செய்து, கம்பன் எங்கே? நான் எங்கே? என்று வியந்து நின்று திகைக்கும் வகையில் கம்பனை எனக்குக் காட்டிக் கொடுத்தது.

எல்லாவற்றிற்கும் மேலாக அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியனுக இருந்து M. A. தமிழ் மாணுக்கர்களோடு உடனிருந்து கம்பன் பாடிய பாடல்களை எல்லாம் கற்றும் விளக்கியும் குற்றம் குறை கூறியும், அழகு பல கண்டு மகிழ்ந்தும் வந்தபோது, அந்த மாணவர்கள் எனக்குக்காட்டிக்கொடுத்த கம்பனே இன்றும் என் மனதில் நிலையாக நின்று விளங்குகிருன்.

# எனக்குக் கம்பனை அறிமுகப்படுத்தியவர்

எஸ். மகராஜன்

எனக்குத் தமிழையும் கம்பனையும் அறிமுகப்படுத்தியவர் இருவர்–சொல்லின் செல்வர் ரா. பி சேதுப்பிள்ளையும் ரசிக மணி டி. கே. சிதம்பரநாத முதலியாரும். முன்னவர் எனக்கு உறவினர்; பின்னவர் உறவினரைக் காட்டிலும் எனக்கு நெருங்கியவர். என் இலக்கியத் தந்தை. இருவருடைய பேரன்புக்கும் பாத்திரமாகும் பேறு எனக்கு இந்த மண்ணுலக வாழ்வில் கிடைத்தது.

1921ல் — எனக்கு அப்போது வயது எட்டு — முதன் முதலாவதாக சேதுப்பிள்ளை அவர்களைச் சாத்தூரில் சைவ சபை மகாநாட்டுக் கூட்டத்தில் கேட்டேன். ஓயா மொழிப் புலவர்கள் மணிக்கணக்காக சுவையற்ற தமிழிலே பேசிக்கொண்டிருந்த காலம் அது. அன்றும் மேற்படி, மேற்படிதான். அந்தப் பேச்சுக்களையும் பொறுமையோடு காலையிலும் மாலையிலும் கேட்டுக்கொண்டிருந்தேன். இரவு எட்டு மணிக்கெல்லாம் ஓர் இளைஞர் மேடை மீது ஏறினர்; நல்ல கவர்ச்சியான தோற்றம்; புன்சிரிப்பும் அறிவுக்களையும் அவர் முகத்தில் தாண்டவமாடின. அவர் பேசத் தொடங்கியதும் மட்கிப் போயிருந்த கூட்டம் நிமிர்ந்து உட்கார்ந்தது ஒரே கல கலப்பும் உற்சாகமுமாக இருந்தது பேச்சு. பேச்சைக் கேட்ட ஒவ்வொருவருக்கும் தமிழைப் பற்றிய கர்வம் ஓங்கி வளர்ந்தது. “இவர்தாம் ரா. பி, சேதுப்பிள்ளை”யென்று ஒருவரோடொருவர் தாழ்ந்த குரலில் சொல்லிக் கொண்டார்கள். இந்தக் கன்னிப் பேச்சைக் கேட்ட என் இளம் இதயத்தில் தமிழ்க் காதல் மூண்டது.

‘என்றுமுளதென் தமிழ்’ என்று தமிழின் வாசியறிந்து ஆசி கூறினர் கம்பர். இத்தகைய இனிமை வாய்ந்த மொழியை — மூவாச்சாவா மொழியைப் பிறப்புரிமையாகப் பெற்ற பெருமை என்றும் தமிழருக்கு உண்டு. ஆயினும், நம் பெருமை தாமுணராத் தன்மையராய்த் தமிழர் இன்று தமிழ்நாட்டில் வாழ்ந்து வருகின்றார்கள்” என்று இனிய அடுக்கு மொழியிலே பேசி, என்னைத் தட்டி எழுப்பித் தமிழ் அமுதை ஊட்டியவர்கள் சொல்லின் செல்வர்.

1931 முதல் 1933 வரை நான் அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் பி எஸ்ஸி. மாணவனாக இருந்த காலத்தில், ரா. பி. சே. அவர்கள் தமிழாசிரியராக அங்கு பணியாற்றினார்கள். அக்காலத்தில் அவர்களுடைய பேச்சுக்களை அடிக்கடி பொதுக் கூட்டங்களில் கேட்கும் வாய்ப்பும் அவர்களுடைய இனிய உரையாடல்களை மணிக் கணக்காக அவர்கள் இல்லத்தில் போயிருந்து கேட்கும் வாய்ப்பும் எனக்கும் கிட்டியது “கம்பன் பாடல்களிலே மூவாயிரம் பாடல்கள் எனக்கு மனப்பாடம்” என்று அடிக்கடி சொல்லின் செல்வர் சொல்லுவார்கள். அவர்களுடைய உள்மனது கம்பன் கவிதையிலே ஊறி ஊறி, விம்மிப் பூரித்து நின்றது. ஆகவேதான் அவர்களுடைய பேச்சிலும் எழுத்திலும் கம்பனுடைய கவிச்சொல் அடிக்கடி தெறித்து விழுந்துகொண்டிருக்கும்.

ஆங்கில மோகம் எங்களைப் பிடித்தாட்டிய காலம் அது; தமிழில் பேசுவது கண்ணியக் குறைவு என்று நாங்கள்

நினைத்து வந்த காலம். அக்காலத்தில் தமிழில் பேசி வந்த பேச்சாளர்களில் பலர் உப்புச்சப்பில்லாமல் பேசுவார்கள்; அவர்கள் பேச்சில் புதுமையோ சுவையோ கலகலப்போ இருக்காது. ஆனால் அந்தக் காலத்தில் ஆங்கிலத்திலே பேசி ஜமாய்க்கிற பல ஜாம்பவான்கள் இருந்தார்கள். ஸர் சி. ஆர். ரெட்டி, ரைட் ஆனரபிள் சீனிவாச சாஸ்திரியார், எஸ் சத்தியமூர்த்தி, ஏ. ராமசாமி முதலியார் ஆகியோர் ஆங்கிலத்தில் பெருமுழக்கம் செய்துவந்த காலம். அப்பேர்ப்பட்ட காலத்தில் ரா. பி சேதுப் பிள்ளையவர்கள் தமிழ் விரிவுரையாளராக அண்ணாமலை நகருக்கு வந்துசேர்ந்தார்கள். வந்த சில மாதங்களில் ஆங்கிலத்தின் கை தாழ்ந்து, தமிழின் கையோங்கி விட்டது. காரணம், பிள்ளையவர்களுடைய அபார மான பேச்சுத் திறமைதான். "நெல்லையில் பிறந்து தில்லையில் வாழ்கின்றேன்" என்று பேச்சைத் தொடங்குவார்கள் — ஒரே கை தட்டும் கும்மாளமுமாக இருக்கும். தமிழ் மாணவர்கள் மாத்திரமல்ல, ஆந்திர மாணவர்கள், கேரள மாணவர்கள், கன்னடியர்கள்—எல்லோரும் கனம் சாஸ்திரியாரின் ஆங்கிலப் பேச்சைக் கூடக் கேட்காமல் பிள்ளையவர்களின் தமிழ்ப் பேச்சைக் கேட்கக் கூடிவிடுவார்கள். அவர்கள் பேச்சிலே அவ்வளவு குறுகுறுப்பும், மினுமினுப்பும், கண்ணியமும் ஆற்றலும் இனிமையும் ஒன்றுகூடிக் கொஞ்சி விளையாடும். மாணவர் சங்கத்தில் தலைவனாக நான் இருந்தபோது, **"Mr. R. P. Sethu Pillai is the A. G. Gardiner of Tamil Litterature"** (திரு. ரா. பி. சேதுப் பிள்ளை தமிழ் இலக்கியத்துக்கு ஒரு ஏ. ஜி. கார்டினர்) என்று சொல்லி அவர்களை வரவேற்றிருக்கிறேன். தமிழ் ஆங்கிலத்தைக் காட்டிலும் ஒரு வகையிலும் குறைந்ததல்ல, தமிழைக் கற்பதால் பெருமை யடையலாம் என்ற உணர்ச்சியை என் காலத்து இளைஞர்களுக்கு ஊட்டியவர் சொல்லின் செல்வர். அதோடு, தமிழ் நாட்டில் மூலை முடுக்குகளுக்குச் சென்று கம்பனுடைய பெருமையையெல்லாம் செவியையும் உள்ளத்தையும் ஈர்க்கும் போதைத் தமிழில் பறைசாற்றியவர் ரா. பி. சே.

ஆகவேதான், சொல்லின் செல்வரை எனது இலக்கியத் தலைவராக ஏற்றுக் கொண்டேன். இலக்கியத்தின் பாலுள்ள பற்று காரணமாக எங்களிருவருக்கும் இடையேயிருந்த உறவு வளர்ந்தது. பிள்ளையவர்களுக்குக் குழந்தை கிடையாது. அவர்களுடைய சொத்து முழுவதையும் இனிமேல் வரப்போகும் ராயல்டியையும் திருநெல்வேலியிலுள்ள ஒரு பிரசவ ஆஸ்பத்திரியை விரிவுபடுத்துவதற்காக 24-6-60ல்எழுதிய உயில் மூலம் ஒரு அறக்கட்டளை நிறுவினார்கள். இந்தப் புனிதமான அறக்கட்டளையை நிறைவேற்றுவதற்காக என்னை ஒரே நிறைவேற்றுநராக (Sole Executor) நியமித்தார்கள். அவர்களுடைய பவித்திரமான நம்பிக்கைக்குப் பாத்திரமானேனே என்று நினைக்கும்போதெல்லாம் ரசிகமணி டி. கே. சி. என்மீது வைத்திருந்த பேரன்பும் நினைவுக்கு வருகிறது.

இருவருமே உயர்ந்த குடும்பங்களில் தோன்றியவர்கள் பதினேழாவது நூற்றாண்டில் திருநெல்வேலிச் சீமையை ஆண்டுவந்த வடமலையப்ப பிள்ளையனுடைய வழித் தோன்றல் சொல்லின் செல்வர். பிள்ளையனுக்கு முன்னால் திருநெல்வேலிச் சீமையை ஆண்டுவந்த தளவாய் அரியநாயக முதலியாருடைய வழித் தோன்றல் டி. கே சி.

ரா. பி. சே. ராஜவல்லியபுரத்தில் பிறந்து திருநெல்வேலியில் வழக்கறிஞராக இருந்து பின்னர் அரசியலில் இறங்கி, அதன் பின் தமிழ்ப் பேராசிரியராக அண்ணாமலை நகரிலும் அதன் பின் சென்னையிலும் சேவை செய்தவர்கள். டி. கே. சி. தென்காசிக்குப் பக்கமிருக்கும் களங்காட்டில் பிறந்து திருநெல்வேலியில் வழக்கறிஞராக இருந்து பின்னர் அரசியலில் இறங்கி, சட்டசபை அங்கத்தினராகி, அதன் பின் இந்துமத பரிபாலன சங்கத்தின் ஆணையராகச் சென்னையில் பணி செய்தார்கள். சொல்லின் செல்வரைக் காட்டிலும் ரசிகமணி பத்துப் பதினைந்து வயது மூத்தவர்.

கம்பனை ஒரு வைணவக் கவி என்று நினைத்து, அவனுடைய பெருமைகளையெல்

லாம் ஒரே அமுக்காக அமுக்கிவிட்டார்கள் சைவப் புலவர்கள். சிறப்பாக, திருநெல்வேலிச் சீமையிலுள்ள சைவர்கள் கம்பனை ஒதுக்கிப் புறக்கணிப்பதில் முனைந்து நின்றார்கள். அதன் விளைவாக கம்பனது ஈடற்ற புலமை சில நூற்றாண்டுகளாக மறைந்து கிடந்தது. 1924ல் கம்பனுக்கு யோகம் பிறந்தது ரசிகமணி டி. கே. சி. யும், பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்களும், பேராசிரியர் சேதுப் பிள்ளை அவர்களும் இன்னும் சில சைவப் பெரியார்களும் சைவக் கோட்டையாகிய திருநெல்வேலியிலேயே கம்பன் கழகம் ஒன்றை நிறுவி, கம்பன் புகழையெடுத்து விளம்பத் தொடங்கினார்கள். சமயங் கடந்து நிற்கும் கம்பனுடைய காவியப் பெருமையைத் தமிழ்நாட்டு மக்கள், ஏன், பிறநாட்டு மக்களுங்கூட, உணரத் தொடங்கியிருக்கிறார்கள் என்றால் 1924-ல் திருநெல்வேலியில் நிறுவப்பட்ட கம்பன் கழகமும் டி கே. சி., ரா. பி. சே. ஆகிய இருவருடைய தூண்டுதலால் பின்னாள் காரைக்குடி முதலிய பல இடங்களில் நடந்து வரும் கம்பன் விழாக்களுந்தான் அதற்குக் காரணம்.

டி. கே. சி. யின் பேச்சை முதன்முதலாக 1924ல் நான் கேட்டேன். பாளையங் கோட்டை அர்ச். சவேரியார் கல்லூரியிலே அவர்கள் கம்பனைப் பற்றிப் பேசினார்கள், இல்லை, கம்பனைப் பற்றிப் பேசவில்லை, கம்பனையே பேச வைத்தார்கள்; கம்பனுடைய இதயத்தைத் திறந்து காட்டினார்கள். உண்மையும், உண்மையோடொட்டிய உணர்வும் நிறைந்த பேச்சு அது. அதுவரையிலும் என் உள் மனது எந்த லட்சியப் பேச்சைக் கேட்கவேண்டுமென்று பல காலமாக ஏங்கிக் கொண்டிருந்ததோ, அந்தப் பேச்சை டி. கே. சி. யிடமிருந்து அன்று கேட்டுவிட்ட திருப்தி அதற்கு ஏற்பட்டது. அது வெறும் சொற்களாலான பேச்சல்ல; சொல் மூலம் ஒரு புதிய, மறக்கமுடியாத அனுபவத்தையே டி. கே. சி எனக்கு ஊட்டி விட்டார்கள். கேவலம் சொல்லினால் வெளியிட முடியாததை வெளியிடும் அரிய சித்து டி. கே. சி. யிடமிருந்ததை என் இதயம் கண்டு கொண்டது. அவர்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குப் பத்து ஆண்டுகளுக்குப் பின்னரே கிடைத்தது. சட்டக் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு நான் பாளையங்கோட்டை திரும்பியதும், டி. கே. சி. இந்து அறநிலையக் கமிஷனராகச் சென்னையிலிருந்து விட்டு வண்ணாரப்பேட்டை திரும்பியதும் 1935லே தான் 1935 முதல் 1938 வரை ஞாயிற்றுக்கிழமை தோறும் டி கே. சி. வீட்டில் நடந்த வட்டத் தொட்டிக் கூட்டத்திற்குச் சென்று டி. கே. சி.யின் அபூர்வ மேதையை அனுபவிக்கத் தொடங்கினேன். அவர்களுடைய கலையுணர்வு என் உணர்ச்சித் தத்துவத்தில் போய்க் கலந்து, என்னை வேறு வஸ்துவாக்கி, எனக்கு வேறு பிறப்பு ஒன்று கிட்டியது போன்ற உணர்வைக் கொடுத்தது. 1935 முதல் அவர்கள் மறைந்த தேதியான 16-2-1954 வரை அன்பும் ஆனந்தமும் கலந்த டி. கே. சி. யென்ற பேரருவியிலே குளித்துக் குளித்து என் உள்ளமும் ஆன்மாவும் நிர்மலமாயின. நாம் விழித்திருக்கும் நேரமெல்லாம் சமயத்தைப் பற்றியும் கலையைப்பற்றியும், கவிதையைப்பற்றியும் சிந்தனை செய்தும் பேசியும் வந்த டி.கே சி. யைப் போன்று வேறொருவரையும் நான் கண்டதில்லை கம்பனைப்போன்ற மகாகவி ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் பிறப்பான் என்று ரசிகமணி சொல்லுவார்கள். அந்தக் கூற்று முற்றிலும் உண்மை. ஆனால் டி. கே. சி, யைப் போன்ற உள்ளுணர்வும், மாசற்ற காட்சியும் பெற்ற ரசிகர் 2000 ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் பிறக்க முடியும். ரசிகமணி மறைந்து 23 ஆண்டுகளாகி விட்டன; அதாவது, ஒரு தலைமுறை கழிந்துவிட்டது சமகாலத்திலிருந்த விருப்பு வெறுப்புகளையெல்லாம் மறந்துவிட்டு, உணர்ச்சி வசப்படாமல் டி. கே. சி. யைத் தொலைநோக்கி மூலம் நோக்கி நிதானத்தோடு தீர்ப்புச் சொல்வதற்கு நமக்குத் தகுதியேற்பட்டுவிட்டது. தூரத்திலிருந்து அவர்களைப்பார்க்கும்போது, அவர்கள் மானிடச் சட்டை தாங்கி வந்த ஒரு அவதார புருஷர் என்று தெளிவாகத் தெரிகிறது. நம்மையெல்லாம் காட்டிலும் அகண்டமான அறிவும் நுண்ணிய உணர்வும் படைத்த ராஜாஜி, டி.கே.

சி. மறைந்து பதினன்கு ஆண்டுகளுக்குப் பின்னுல், 10-9-67 கல்கியில் ஒரு சட்டுரை எழுதினுர்கள்; கிருஷ்ணன் அவதாரத்தை டி. கே சி. அவதாரத்தோடு மிகுந்த துணிச் சலோடு ஒப்புநோக்கி இருவரையும் பாராட்டி எழுதிய கட்டுரை அது. கட்டுரை தொடங்குகிற தோரணையைப்பாருங்கள்;- "சென்ற திங்கட்கிழமை கண்ணன் பிறந்த நாள் அந்தத் திங்கட்கிழமையே தமிழ்க் கவிதை தரும் மகிழ்ச்சியின் ரகசியம். தமிழ் சைவ நடையின் முன்னேற்றத்தின் ரகசியம், தாளமும் ராகமும் சேர்ந்த நல் லிசையின் ரகசியம், அன்பின் பரம மகிழ்ச்சி, வேஷங்களின் பொய்ம்மை அனைத்தும் நன்ருகக் கண்ட பூரண ரசிக மணி டி. கே. சி. பிறந்த நாளும், ஹரியின் பூரணுவதார கண்ணனின் ஜன்ம நக்ஷத்தி ரமும், டி. கே. சி யின் ஜன்ம நக்ஷத்திரமும் ஒன்ருய்ச் சேர்ந்த திருவிழாவை மகிழ்ச்சி யுடன் சென்ற திங்கட்கிழமை கொண் டாடினேம். இந்தத் திருவிழாக்கள் ஞான மும் அன்பும் நாட்டில் வளரச் செய்யும்" இந்தக் கட்டுரையில்' ராமன் மகா விஷ்ணு வின் நான்கில் ஒரு அம்சம், ஆனுல் கிருஷ்ண பகவான் மகா விஷ்ணுவின் பூரண அவதாரம் என்னும் உண்மையைப் பல காரணங்கள் தந்து ராஜாஜி விளக்கு கிருர்கள் சீதையை இழந்ததும் ராமன் துயரமடைந்து பிரலாபித்ததைக் குறிப் பிட்டுவிட்டு கண்ணனுக்குத் துயரம் என் பதே கிடையாது, தான் சர்வேஸ்வரன் என்று உணர்ந்தவன் கண்ணன் என்ப தைச் சுட்டிக்காட்டி விட்டு "மூடர்கள் கிளப்பிய அபவாதத்துக்குப் பயந்து ராமச் சந்திரன் சீதா தேவியைக் காட்டுக்கு அனுப்பிவிட்டான். கண்ணன் இப்படிச் செய்வானு? ஒருநாளும் செய்ய மாட் டான் . இது ராமச்சந்திரனுடைய பெருமையைக் குறைக்கிறது" என்று ராஜாஜி சொல்லுகிருர்கள். இவ்வாருக, கண்ணனே குறைவற்ற தெய்வம், உலகத் துக்கு வழிகாட்டியவன் அவனே என்று நிலைநாட்டிவிட்டு. அதே மூச்சிலே ராஜாஜி டி. கே சி. யைப் பற்றிச் சொல்லுவதா வது:- "கண்ண பகவான் ரோகினி நக்ஷத் திரத்தில் அவதரித்தான். அதே நக்ஷத்தி ரத்தில் மற்ருெருவர் அவதரித்தார், தமிழ்க் கவிக் காதலர் என்று பெயரைப் பெற்ற மகான் சிதம்பரநாத முதலியார் அவர்கள்... ஸ்ரீஜயந்தி என்ருல் கண்ணன் பிறந்த நாள் டி. கே. சி. பிறந்த நாள், என்றும் தமிழர் கொண்டாடும் நாள்" என்று கட்டுரையை ராஜாஜி முடிக்கிருர்கள். எளிதில் யாரை யும் புகழாத வாய் ராஜாஜியின் வாய்; நிதானத்தை ஒருக்காலும் இழக்காத இதயம் ராஜாஜியின் இதயம்; இந்தியத் தலைவர்கள் எல்லோரும் பீஷ்மருக்குப் பின்னர் அறிவிலும் விவேகத்திலும் உறுதி யிலும் சிறந்து நிற்கும் இந்தியர் ராஜாஜியே என்று பாராட்டுகிருர்கள். இதற்கெல்லாம் மேலாக, வைணவ பக்தி நிறைந்தவர் ராஜாஜி. அப்பேர்ப்பட்டவர், "பூரண டி. கே சி. யும் பூரண ஹரியும்" என்ற தலைப்பின் மூலம் இரு அவதாரங்களுக்குப் சம அந்தஸ்துக் கொடுத்து, இருவரையும் ஒரு மூச்சிலே பாராட்டியிருக்கிருர் என் ருல், டி. கே. சி. யைக் குறை கூறிக்கொண் டிருந்த தமிழறிஞர்கள் இனிமேலாவது டி. கே. சி. யின் பூரணத்துவத்தையறிந்து டி கே சி. காட்டிய இலக்கியப் பாதையில் நடந்து பார்ப்பார்களாக!

கம்பனை எப்படி டி. கே சி அனுபவித் தார்கள். என்னைப் போன்ற மற்றவர்களை யும் எப்படி அனுபவிக்கச் செய்தார்கள் என்பதை ரத்தின வியாபாரிகள் ரத்தி னத்தை எப்படி அனுபவிப்பார்கள் என்று டி. கே. சி. வருணித்த தமிழிலேயே சொல் லலாம்.- "இருபது முப்பது வருஷத்துக்கு முன் காயல் பட்டணத்து காக்காய்கள் (சாய்புகள்) ரத்ன வியாபாரம் செய்தார் கள் முக்கியமாக சிவப்பு வியாபாரந்தான்; வைரம் அந்தக் காலத்தில் அவ்வளவாக மதிப்புக்கு வரவில்லை. மேலே சொன்ன காக்காய்கள் மாணிக்கங்களை பரிசோதிப் பார்கள், விலையிடுவார்கள். எங்கள் வீட் டில் அவர்களை அடிக்கடி பார்க்கலாம். ஒரு நல்ல சிவப்பை அவர்கள் கண்டுவிட் டார்களானுல், அவர்களுக்கு உண்டாகிற ஆவேசம் அப்படி இப்படியல்ல. இடது கண்ணிட்டுப் பார்ப்பார்கள். பிறகு வலது கண்ணிட்டுப் பார்ப்பார்கள். திண் ணைக்கு ஓடிப்போய்ப் பார்ப்பார்கள். முற் றத்துக்குக் கொண்டுபோய்ப் பார்ப்

பார்கள், எப்படியெல்லாமோ குனிந்தும் நிமிர்ந்தும், சாய்ந்தும் பார்ப்பார்கள். என்ன பூரிப்பு! என்ன பழுப்பு! இதல்லவா மாணிக்கம். தின்று விடுவோமா அல்லது கண்ணுக்குள்ளேயே திணித்துவிடுவோமா என்றெல்லாம் சொல்லுவார்கள். டி. கே. சி. யும் கம்பன் பாடல் ஒவ்வொன்றையும், ஏன், நல்ல தமிழ்ப் பாடல் ஒவ்வொன்றையுமே இப்படி யெல்லாம் அனுபவிப்பார்கள். குனிந்தும் நிமிர்ந்தும் சாய்ந்தும், பற்பல கோணங்களிலிருந்து பார்த்தும் அனுபவிப்பார்கள். நம்மையும் அனுபவிக்கச் செய்வார்கள். "தமிழ்க்கவி மக்களைக் கஷ்டப்படுத்த வந்த கருவி அல்ல ஆனால், மக்களை ஆனந்தமயத்தில் ஊறவைக்க வந்த தேவாமிர்தம்" என்று டி. கே. சி. அடிக்கடி சொல்லுவார்கள். ஆணவத்தை உதறித் தள்ளிவிட்டு டி.கே. சி. யோடு கவிதையில் கரையத் தெரிந்த ஒரு சிலருக்கு அவர்களுடைய கூற்று முழுக்க முழுக்க உண்மை என்று தெரியும்.

மற்றப் புலவர்கள் தினசரிப் பத்திரிகைகளைப் படிக்கும் வேகத்தில் கவிதையையும் படித்துத் தீர்த்துவிடுவார்கள். ஆனால், டி. கே. சி. யோ பாடல்களில் தம் உள்ளத்தை மணிக் கணக்கில் நிலைநிறுத்தி அவற்றை மிக்க பொறுப்போடும் நுணுக்கத்தோடும் ரத்தினப் பரீக்ஷை செய்து, எது கவிதை, எது கவிதையில்லை, எதில் கம்பனுடைய முத்திரை இருக்கிறது, எதில் அந்த முத்திரை இல்லை என்பதைத் தெளியும் உள்ளுணர்வு பெற்றிருந்தார்கள். அந்த உள்ளுணர்வை நாள்தோறும் பெருக்கி வந்தார்கள். ஏறக்குறைய 40 ஆண்டுகளாகப் பெருக்கி வந்தார்கள். ஆகவேதான், கம்ப ராமாயணத்திலுள்ள போலிப் பாட்டுகளை எடுத்த எடுப்பிலேயே இனங் கண்டுகொள்ள அவர்களால் முடிந்தது. இந்த அரிய உள்ளுணர்வை முயன்று பெருதவர்கள், கவிதையைப் பொறுத்தமட்டில், விழி கண் குருடர்கள்தாம்; அவர்கள் கவிதையைப் பற்றிக் கூறும் கருத்துக்களெல்லாம் மயிலைக் கையினுல் தடவிப் பார்த்துவிட்டு, "அடடா! எவ்வளவு அழகாய் இருக்கிறது" என்று குருடன் சொல்லும் கணக்குத்தான். கூர்மையோடு பார்க்கும் கண்களும், மாசற்ற உள்ளுணர்வும், நீண்ட காலக் கவிப் பயிற்சியும் கொண்ட டி.கே. சி.க்கல்லவா கவிமயிலைக் கண்டு அனுபவித்து அதன் வர்ணஜாலங்களைப் பற்றித் தீர்ப்புச் சொல்லும் தகுதியிருக்க முடியும்!

ராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆகப் போகிறதை எதிர்நோக்கி ஒரே ஆனந்தத்தில் மூழ்கியிருக்கிருர்கள் மக்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் பட்டாபிஷேகத்தை எண்ணி அனுபவிக்கிருர்கள். வயது முதிர்ந்த மாதர்கள், கோசலையின் மன நிலையிலிருந்து அனுபவித்தார்கள். வேதியர்கள் வசிட்டன் மனநிலையிலிருந்து பட்டாபிஷேகத்தை எண்ணி அனுபவித்தார்கள். வேறுள மகளிர் எல்லாம், அதாவது, சீதையையொத்த வயதுள்ள பெண்களெல்லாம், சீதையின் மனத்தை யொட்டி அவளுடைய ஆனந்தத்தைப் பகிர்ந்துகொண்டார்கள். சீதையோ லக்ஷ்மிதேவியையே ஒத்திருந்தாள். பரலோக சாதனத்தில் மனதை ஈடுபடுத்திய முதியவர்கள் தசரதனை ஒத்திருந்தார்கள். இம்மன நிலைகளையெல்லாம் எடுத்துச் சொல்லுகிறது ஓரறிய கம்பன் பாடல். ஆனால், அந்தப் பாட்டிலே ஒரு பிழை விழுந்துவிட்டது. மற்றவர்கள் கண்ணுக்குப் படாத அப் பிழை டி. கே. சி. கண்ணுக்குப் பட்டுவிட்டது. "மாதர்கள் வயதின் மிக்கார், கோசலை மனதை ஒத்தார்" என்பதற்குப் பதில், "மாதர்கள் கற்பின் மிக்கார் கோசலை மனத்தை ஒத்தார்" என்றிருந்தது பாடம். கற்பினுல் மிக்க பெண்கள் எல்லாம் கோசலையையொத்தார்கள் என்று சொல்லிவிட்டு. மற்றுள மாதரெல்லாம் சீதையையொத்தார் என்று சொன்னுல், கற்பில்லாத மாதரெல்லாம் சீதையையொத்தார் என்று அபத்தமான பொருளல்லவா ஏற்பட்டுவிடும். கம்பன் இதயத்தையுணர்ந்த டி.கே சி. அவர் இப்படிப் பாடியிருக்கமுடியாது என்று கண்டு, 'கற்பின் மிக்கார்' என்ற சொற்றொடரை "வயதின் மிக்கார்" என்று திருத்தினுர்கள். கம்பனைக் கொளுத்த வேண்டும் என்று சொன்னவர்கள்கூட, டி.கே. சி. கம்பனைத் திருத்தியது தவறு என்று கண்டித்தார்கள்.

இவ்வாறு டி. கே. சி. திருத்திய சில ஆண்டுகளுக்குப் பின் பாலசரஸ்வதி கிருஷ்ண மாச்சாரியார் என்ற புலவர் வைத்திருந்த பழைய கம்பராமாயண ஓலைச்சுவடியில், "மாதர்கள் ஆண்டின் மிக்கார்" என்ற பாடபேதம் இருப்பது தெரிய வந்தது. இதைப் பார்த்த பிறகு பல தமிழ்ப் புலவர்கள் டி. கே. சி. செய்த திருத்தம் எவ்வளவு பொருத்தமானது என்று கண்டு பாராட்டினார்கள். டி. கே. சி. யும் 'வயதில் மிககார்' என்பதை மாற்றி "ஆண்டின் மிக்கார்" என்று ஓலைச்சுவடிக் கிணங்கத் தம் பதிப்பில் பாடலைத் திருத்திக்கொண்டார்கள் திருத்திய பாடல் கீழ்வருமாறு:-

மாதர்கள் ஆண்டின் மிக்கார்
கோசலை மனத்தை ஒத்தார்;
வேதியர் வசிட்டன் ஒத்தார்
வேறுள மகளிர் எல்லாம்
சீதையை ஒத்தார்; அன்னாள்
திருவினை ஒத்தாள்; அவ்வூர்
சாதன மாந்தர் எல்லாம்
தயரதன் தன்னை ஒத்தார்

இப்படியாகப் பல பாடல்களைத் திருத்தினார்கள் டி. கே. சி. இவ்வாறு திருத்தியதற்குக் காரணம் அகம்பாவம் அல்ல, ஈடுபாடுதான். தாம் அடைந்த இன்பத்தை மற்றவர்களும் அடையட்டுமே என்று பரிவு காரணமாக இப்படியெல்லாம் செய்தார்கள். ஆனால் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் உட்பட எல்லாப் புலவர்களும் டி. கே. சி. யைக் கண்டனம் செய்தார்கள். வேடிக்கையென்னவென்றால், கம்பராமாயணத்தைப் பொசுக்க வேண்டும் என்று பிரச்சாரம் செய்தவர்களும், "டி. கே சி. எப்படி கம்பனைத் திருத்தலாம்?" என்று சீறியெழுந்தார்கள். "கம்பரை எரித்துப் பெரிய தீ வளர்க்கவேண்டும் என்று எண்ணிக் கொண்டிருக்கிறவர்களுக்கு எரி துரும்பு குறைந்துவிட்டதே என்று வருந்துவதில் பொருள் இருக்கத்தானே செய்கிறது" என்று சொல்லி டி. கே. சி கம்பன் எதிரிகளுடைய கோபத்துக்கு மேலும் எரியூட்டினார்கள். கம்பன் பக்தர்களுடைய கோபத்துக்கு டி. கே. சி. சொன்ன சமாதானம் இன்னும் சுவையானது: "மலையாளத்து அப்பளம். வாயிலே போடவேண்டியது-பல்லைத் தொடவேண்டியது, அப்படியே பொருபொரு என்று தூளாய்ப் போய்விடும். 50 அப்பளத்தையும் தீர்த்து விடலாம் என்றுபடும். நம்மிடம் வஞ்சம் இல்லை போடுவார் இல்லை என்பதுதான். போட்டால் மாயமாய்ப் போய்விடும் அப்பேர்ப்பட்ட அப்பளத்தில் இரண்டொரு மணலைத் தூவிவிட வேண்டும். அப்பளத்தைக் கடிக்கும்போது இதோ இருக்கிறேன் நான் என்று கல் சொல்லிவிடும். பல்லின் பாட்டைச் சொல்ல வேண்டுமா; வேண்டாம். அப்பளக் கூடையில் வறுத்து வைத்த அப்பளம் அப்படியே இருந்து விடும். மிச்சந்தான். கம்பன் பாடல்களும் அப்பளம் போலத்தான். பிழை பட்ட பாடல் இருந்தால் பாடல் மிச்சம் தானே. 'கல்லை எப்படி எடுக்கலாம் நீ' என்று கோபிக்கிறார்கள்".

கவிச் சக்கரவர்த்திக்கு நேர்ந்த விபத்துகளை நினைந்து ரஸிகச் சக்கரவர்த்தி இப்படியெல்லாம் ஏங்கினார்கள். அவ்வாறு ஏங்கி ஏங்கித் தன்னந்தனியாக இருந்த காலத்திலே, டி கே சி யோடு உளங்கலந்து அவர்களுக்கு இலக்கிய நட்பை நல்கியவர்கள் வெகு சிலரே. ராஜாஜி, கல்கி, பாஸ்கரத் தொண்டைமான், எனது தமக்கையார் வேலம்மாள் நான், சோமு, ல. ஷண்முகசுந்தரம் முதலியோர், டி. கே. சி. யின் இறுதிக் காலத்தில் என்னுடைய துணை தமக்கு இருக்க வேண்டுமென்றே உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதி ராஜமன்னாரிடம் சென்று என்னைத் தென்காசியில் முன்சீப்பாகப் போட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். சொந்த ஊரில் நான் நீதிபதியாக இருக்கக்கூடாது என்பது விதி. இந்த விதியைத் தளர்த்தி என்னைத் தென்காசியில் முன்சீப்பாகப் போட்டார்கள். 1949 முதல் 1952 வரை அநேகமாக நாள் தோறும் தென்காசியிலிருந்து நான் குற்றாலம் சென்று டி. கே. சி, யோடு மணிக்கணக்காக உரையாடிக் கொண்டிருக்கும் பேறு பெற்றேன் மூன்று ஆண்டுகள் மூன்று கணமாக விரைந்தோடின; காலம் என்ற தத்துவம் தங்கச்சக்கரம் பூண்டு வெள்ளித் தண்டவாளத்தில் விரைந்தோடியது.

1950-ல் ஒரு நாள் திவான் பகதூர் ஆவுடையப்ப பிள்ளை அவர்களோடும் டி. கே. சி. யோடும் ஐந்தருவிச் சாலையிலே நான் உலாவிக் கொண்டிருந்தேன். திடீரென்று டி கே. சி. நின்றார்கள். ஒரு சாலை மாணாக்கராகிய திவான் பகதூரைப் பார்த்து, "ஆவுடையப்ப பிள்ளையவாள்! நான் மகராஜனுக்கு ஒரு உயில் எழுதி வைத்துவிட்டேன்" என்று சொன்னார்கள். 'அப்படியா, அப்படியா, என்ன அது?' என்று அதிசயத்தோடு கேட்டார்கள் ஆவுடையப்ப பிள்ளை. "நமது தமிழ்க் கவிதை, பண்பாடு, சமயம் எல்லாவற்றையும் மகராஜனுக்கு உயில் எழுதி வைத்துவிட்டேன். இனிக் கவலையில்லை" என்றார்கள் ரசிகமணி. இதே அன்பையும் அருமைப்பாட்டையும் 6-6-48ல் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து எனக்கு எழுதிய கடிதத்தில் கீழ்க்கண்ட சொற்களில் டி. கே. சி. வெளியிட்டார்கள்:- "ஒருவனுக்குக் கை நிறைய வைரங்கள் கிடைத்தன. அவைகளை வைக்கும் பெட்டகம் இல்லை, வீடில்லை, கடைசியாக, அவைகள் கிடைத்தன. அப்படியானால் அவனுக்கு எவ்வளவு ஆறுதலாய் இருக்கும்! அதேபோலநானும் தமிழில் அற்புதமான பாடல்களைக் கண்டேன். கை நிறையவே இருக்கின்றன. வைக்க இடமில்லாமல் திண்டாடினேன். தாங்களும் வேலம்மாளும் ஒப்படைப்பதற்கு இருக்கிறீர்கள். எனக்கு எவ்வளவு ஆறுதல் என்று சொல்வானேன்."

ரசிகமணியின் வாய்மொழி உயிலையும் சொல்லின் செல்வரின் எழுத்துவழி உயிலையும் பெற்ற நான் அவர்களிருவருக்கும் இடையேயுள்ள மனக்கசப்பை நீக்குவதற்குப் பல ஆண்டுகள் முயன்றேன். "பி. ஸ்ரீ. ஆச்சார்யா என்னோடு ஒட்டியிருந்தவர்கள். சில காரணங்களால் என்னை விட்டுப் பிரிந்து போய் விட்டார்கள். அவரைத் திருக்குற்றாலத்துக்கு அழைத்து என்னோடு மறுபடியும் ஒட்டும்படி செய்து விட்டார்கள். அதனால் எனக்கு ஏற்பட்ட சந்தோஷம் இப்படி, அப்படி என்று சொல்ல முடியாது. ஆனால், ரா. பி. சேதுப் பிள்ளை என்னோடு ஒரு காலத்திலும் ஒட்டியிருந்ததில்லை. நான் ஒரு கோமாளி என்று நினைக்கிறவர்கள் அவர்கள். நீங்கள் ஒட்டி வைத்தாலும் அவர்கள் ஒட்டமாட்டார்கள்" என்று டி. கே. சி என்னிடம் அடிக்கடி சொல்லுவார்கள். "இல்லை. தமிழின் நலத்துக்காக நீங்கள் இருவரும் ஒன்று சேர்ந்து ஒத்துழைக்க வேண்டும்" என்று நான் சொல்லிக்கொண்டிருந்தேன்.

1951ல் 'தளவாய் ஹவுஸ்' என்ற விடுதியிலே குற்றாலத்தில் தங்கியிருந்தார்கள் சொல்லின் செல்வர். இரட்டை மாட்டு வண்டியிலே தென்காசியை நோக்கி அவசரமாகப் போய்க் கொண்டிருந்த ரசிகமணியைப் பார்த்து, "அண்ணாத்தை, எங்கே இவ்வளவு அவசரமாகப் போகிறீர்கள்" என்று கேட்டார்கள் ரா. பி. சே. "இல்லை, மூன்று நாட்களாக மகராஜனுக்குக் காய்ச்சல். படுக்கையிலிருக்கிறார்கள். அவர்களைப் பார்க்கப் போகிறேன்" என்று சொல்லிவிட்டு டி கே. சி. தென்காசிக்கு விரைந்து வந்துவிட்டார்கள். என்னோடு இரண்டு மூன்று மணி நேரம் அளவளாவி விட்டு டி. கே. சி. குற்றாலம் போனார்கள். அவர்கள் போன சில நிமிஷங்களில் ரா. பி. சே, என் இல்லத்துக்கு வந்து "டி. கே. சி. க்கு உம்மிடத்திலே யிருக்கிற பிரியத்தைப் பார்த்தேன். உடனே எனக்கு அவர்களிடத்திலிருந்த கசப்பெல்லாம் மாறிவிட்டது. அவர்கள்மீது அன்பு பெருகத் தொடங்கிவிட்டது. காரணம் நம்முடைய மகராஜனிடத்திலே டி. கே. சி க்கு இவ்வளவு அன்பிருக்கிறதே என்பதுதான்" என்று சொல்லி அன்பு வளரும் மர்மத்தை ரா. பி. சே. எனக்கு விளக்கினார்கள்.

இருபதாவது நூற்றாண்டில் கம்பனுக்காகவும் தமிழுக்காகவும் அரும்பாடுபட்ட இரண்டு பெரும் மேதைகள், என்னிடத்திலிருந்த அன்பின் காரணமாக, கருத்து வேற்றுமைகளை மறந்து ஒன்றுபட்டார்கள் என்ற நிகழ்ச்சி என்றென்றும் எனக்கு விம்மிதத்தையும் பூரிப்பையும் கொடுத்துக் கொண்டிருக்கும்.

சொல்லின் செல்வர் மறைந்தது 1961ல். ஆனால் ரசிகமணி 1954-ஆம் வரு

## புதுச்சேரிக் கம்பன் கழகம்

### 15-5-1977 ஞாயிற்றுக்கிழமை காலையில் புதுவைக் கம்பன் கலையரங்கில் நிறுவிய கம்பன் திருவுருவச் சிலையைத் திறந்துவைத்துக் கம்பன் அடிப்பொடி ஆற்றிய செய்யுளுரை.

உலகப் பெருமா கவிஞர்களில் ஒப்பே இல்லா ஒருவன்என
இலகும் கம்பன் ஈந்தருளும் இராம காதைக் காப்பியத்தில்
பலவாய் அமைந்த சுவையமுதைப் பருகித் துய்த்து மகிழ்பவர்கள்
நலமார் மனமும், வளஉடலும், நாளும் செழிக்க வாழுவரே!

முன்னை நூல்கள் கற்றுயர்ந்தான்; மூவா முதலை உய்த்துணர்ந்தான்;
கன்னித் தமிழும், ஆரியமும், காதல் கூரத் தோய்ந்தாய்ந்தான்;
பின்னும் மொழிகள் சிற்சிலவும், பேணும் கலைகள் பற்பலவும்,
தன்னில் தேக்கி ஒளிருகின்றான்; தமிழ்த்தாய் நோற்ற தனிக்கம்பன்!

எண்ணும், எழுத்தும், இலக்கமுடன், எழிலார் சிற்பம், கட்டடங்கள்,
பண்ணும், பரத கலைநலமும், பண்டை வரலாற் றுண்மைகளும்,
நண்ணும் இயற்கை அறிவுடனே, நவிலும் பூத வேதியியல்
கண்ணும் கருத்தும் காரணச்செய் கம்பன் அவனே நல்லாசான்!

பாத்தி ரங்கள் படைப்பதிலும், படைத்த வற்றை இயக்கலிலும்,
சாத்தி ரங்கள் விரிப்பதிலும், தருமம் நீதி உரைப்பதிலும்,
தோத்தி ரங்கள் இசைப்பதிலும், தொன்மை மரபு காப்பதிலும்
மூத்த புலவர்ப் போற்றலிலும், முன்னே நிற்பான் நம்கம்பன்!

பதியை உணர்த்திப், பசுவாம்நாம் பாசம் அறுக்க வழிகாட்டி,
விதியின் வலியை உணர்த்தித்தீ வினையைச் சாரா நெறிபுகட்டி,
மதியைத் துலக்கி, வையகத்தில் மன்னும் இன்பம் பொருள்அறத்தைக்
கதியாய்ப் பற்றி விடுபெறக் கம்பன் நாளும் துணைபுரிவான்.

எந்த மதத்தும் குறைகாணுன்; எல்லாம் இறைசேர் நெறிஎன்பான்;
சொந்த மொழியைப் போற்றிடுவான்; தூற்ருன் மற்ற மொழிஎதையும்;
சிந்தை அன்பு செழித்திடுவான்; செய்கை அறமே மலர்ந்திடுவான்;
அந்தச் செம்மல் தமிழ்க்கம்பன்; அவனே கவிச்சக் கரவர்த்தி!

என்ற உண்மை தனைஉணர்ந்து, எழிலார் இராம கதைஓதி,
ஒன்ருய் விளங்கும் மெய்ப்பொருளை உள்ளத் திருத்தி எஞ்ஞான்றும்
நன்றே எண்ணி, நன்றுரைத்து, நன்றே புரிந்து, நாள்நாளும்
பொன்றல் இல்லாக் கம்பனுரை புனித நெறியில் நாம்வாழ்வோம்!

பாவைச் சுவைக்கும் பண்புநிறை பாண்டிச் சேரித் திருநகரில்,
நாவைச் செவியை இனிக்கச்செய் நல்ல கவிதை அருள்கம்பன்
தேவைப் போற்றித் தினந்தினமும் செய்ய தமிழை வளர்ப்பதற்கே
சேவை செய்து மனம்களிக்கும் செல்வர்க் கெல்லாம் நல்வணக்கம்!

மன்னும் புலவர் பலர்நிறைந்த வளமார் புதுவை மாநகரில்
என்னை அடிமை கொண்டருளும் எந்தைபெருமான் கவிகம்பன்
தன்னைப் போற்றி விழாஎடுக்கும் சான்ருேர் தம்மைப் பலகாலும்
சென்னி தாழ்த்திக் கரங்கூப்பிச் சிந்தை மகிழ வாழ்த்துகிறேன்!

பொங்கும் வளஞ்சேர் புதுச்சேரிப் புனிதக் கம்பன் கழகத்தார்
இங்கே கடவுண் மங்கலம்செய் எம்மான் கம்பன் அர்ச்சையிது
மங்கை பாகன், திருமார்வன், வாணி கேள்வன் நல்லருளால்
எங்கும் என்றும் தமிழ்மணக்க இருந்து நாளும் விளங்குகவே!

என்றென் றடியேன் வாய்மணக்க, இதயம் களிக்க, வாழ்த்திசைத்து,
தொன்று தொட்ட அகத்தியனுர் தொடங்கிப் புலவர் யாவர்க்கும்
ஒன்றும் வணக்கம் முறைசெலுத்தி, ஊழி ஊழி பயன்சுரக்க,
நின்ற கம்பன் சிலையுருவை நிமலன் அருளால் திறக்கின்றேன்!

வாழிதமிழ் நாகரிகம்; வாழிதமிழ்ப் பண்பாடு;
வாழிதமிழ்த் தொண்டுபுரி மாண்பினர்கள் — வாழியரோ
இன்பம் பெருக இருசெவியும் தேன்பாய்ச்சும்
கம்பனும் எங்கள் கவி.

# "தெய்வ மாக்கவி கம்பன் விழா"

## புதுவைக் கம்பன் கழகத்தின் சார்பில் நடைபெற்ற பத்து விழாக்களின் நிகழ்ச்சி நிரல் பட்டியல்.

**1966ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல்:**

14—5—66 சனிக்கிழமை மாலை: 5-30 மணி

இறை வணக்கம்: சமரச சன்மார்க்க இசைமன்ற மாணவிகள், புதுவை.

வரவேற்புரை: திரு. ந. சேதுராமன் அவர்கள், துணைமேயர், புதுவை.

**உரை மன்றம்**

தொடக்கவுரை: திரு. வை. வெங்கடசுப்பா ரெட்டியார் அவர்கள், புதுவை மாநில முதலமைச்சர்.

கம்பன் இசையமுது: குமாரி ஆஷாமணி, M.A. துணைப் பேராசிரியை, தாகூர் கலைக்கல்லூரி, புதுவை.

மன்றத் தலைவர்: திரு. சா. கணேசன், M.L.A. அவர்கள், செயலாளர், கம்பன் கழகம், காரைக்குடி.

''கம்பன் கவிதை'' திரு. அ. சீநிவாசராகவன் அவர்கள், முதல்வர், வ.உ.சி. கல்லூரி, தூத்துக்குடி.

"கம்பன் காட்டும் பண்பாடு" சிலம்புச் செல்வர், திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்.

15—5—66 ஞாயிறு காலை 9 மணி

**கவி மன்றம்**

தொடக்கவுரை: திரு. அ. ச. காங்கேயன் அவர்கள், B.A. புதுவை மாநிலக் கல்வி அமைச்சர்.

கம்பன் இசையமுது: திரு. இரா. வேங்கடேசன் அவர்கள், தமிழாசிரியர், புதுவை.

மன்றத் தலைவர்: திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள், ஆசிரியர் ''கலைமகள்'', சென்னை.

பொருள்: ''கம்பன் தரும் சுவைகள்''

| சுவை: | கவிஞர்கள்: |
|---|---|
| நகை. | திரு. பா. முத்து அவர்கள், புதுவை. |
| அழுகை. | ,, தமிழவேள் அவர்கள், புதுவை. |
| இளிவரல். | ,, திருலோக சீதாராம் அவர்கள், திருச்சி. |

மருட்கை. ,, இரா. திருமுருகன் அவர்கள், புதுவை.
அச்சம். ,, திருச்சிற்றம்பலக் கவிராயர் அவர்கள், நெல்லை.
பெருமிதம். ,, சித்தன் அவர்கள், புதுவை.
வெகுளி. ,, வை. சுப்பிரமணியன் அவர்கள், புதுவை.
உவகை. ,, கம்பராமன் அவர்கள், வேலூர், சேலம்.

15—5—66 ஞாயிறு மாலை 6 மணி

பட்டி மன்றம்

தொடக்கவுரை: திருமதி. மரகதம் சந்திரசேகரன், மத்திய சமூகநலத் துணையமைச்சர்.

கம்பன் இசையமுது: திரு. சிவசண்முகன் அவர்கள், தமிழாசிரியர், புதுவை.

மன்றத் தலைவர்: திரு. எஸ். மகராஜன் அவர்கள், B. Sc., B. L. புதுவை மாநிலத் தலைமை நீதிபதி.

பொருள்: சிறந்த தம்பி யார்? பரதனா? இலக்குவனா?

பரதன்:-

வித்துவான் திரு. அ. நடேச முதலியார் அவர்கள், தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

வித்துவான் திரு. அ. அருணகிரி அவர்கள், தமிழாசிரியர், புதுவை.

திருமதி. சிவ-பிருந்தாதேவி அவர்கள், மகளிர் இல்லம், புதுக்கோட்டை.

வித்துவான் திரு. ல. சண்முகசுந்திரம் அவர்கள், தென்காசி.

இலக்குவன்:-

திரு. அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள், M. A. உதவி நெறியாளர், தமிழாக்கத் துறை, சென்னை.

புலவர் திரு. சுந்தரசண்முகனார் அவர்கள், புதுவை.

திருமதி. இராஜேஸ்வரி நடராஜன் அவர்கள், சென்னை.

திரு. க. கு. கோதண்டராமன் அவர்கள், M. L C. கள்ளிப்பட்டி, கோவை.

நன்றியுரை: திரு. ந. கோவிந்தசாமி அவர்கள், செயலாளர், "கம்பன் விழாக்குழு"

நாட்டுப் பாடல்.

---

## 1969-ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல் :

17—5—69 சனிக்கிழமை காலை 8-30 மணி

இறைவணக்கம். வரவேற்புரை.

தொடக்கவுரை: மேதகு பி. டி. ஜாட்டி அவர்கள், புதுவைமாநில ஆளுநர்.

வாழ்த்துரை: எம். ஓ. எச். பருக் மரைக்காயர் அவர்கள், புதுவை மாநில முதலமைச்சர்.

### உரை அரங்கம்

கம்பன் இசையமுது: திருமதி இராணி ஆறுமுகம் அவர்கள், புதுவை.

தலைமையுரை: திரு சா. கணேசன் அவர்கள், காரைக்குடி.

சிறப்புரை: திரு எஸ். மகாராஜன் அவர்கள், புதுவை.

பிற்பகல் 5-30 மணி

கம்பன் இசையமுது: குமாரி. ஆஷாமணி, புதுவை.

கம்பன் காவியத்தில்: ''கவிதைப் பாங்கு''

திரு சோ. சத்தியசீலன் அவர்கள், திருச்சி.

''பாத்திரப் படைப்பு'' திரு எஸ். இராமகிருட்டினன் அவர்கள், மதுரை.

''நாடகப் பண்பு'' திரு அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள், சென்னை.

''சமய உணர்வு'' திரு ம. பொ. சிவஞானம் அவர்கள், சென்னை.

18—5—69 ஞாயிறு காலை 8-30 மணி

### கவியரங்கம்

கம்பன் இசையமுது: திருமதி சரசுவதி இராமநாதன் அவர்கள், தேனி.

தலைவர்: பேராசிரியர் திரு அ. சீநிவாசராகவன் அவர்கள், தூத்துக்குடி.

பொருள்: ''கம்பனில் வள்ளுவம்''

கடவுளியல்: திரு சோ. குமாரசாமி அவர்கள், சேலம்.

இல்லறவியல்: திரு சித்தன் அவர்கள், புதுவை.

துறவறவியல்: திரு சொ. சோ. மீ. சுந்தரம் அவர்கள், தேவக்கோட்டை.

அரசியல்: திரு இரா. திருமுருகன் அவர்கள், புதுவை.

அமைச்சியல்: திரு. பா. முத்து அவர்கள், புதுவை.

நட்பியல்: திரு இரா. வேங்கடேசன் அவர்கள், புதுவை.

படையியல்: திரு வை. சுப்பிரமணியன் அவர்கள், புதுவை.

குடியியல்: திரு கோ. சாரங்கபாணி அவர்கள், காரை.

ஊழியல்: திரு கம்பராமன் அவர்கள், வேலூர்.

களவியல்: திரு தமிழவேள் அவர்கள், புதுவை.

18—5—69 ஞாயிறு மாலை 5-30 மணி

### பட்டி மன்றம்

கம்பன் இசையமுது: திரு இரா. வேங்கடேசன் அவர்கள், புதுவை.

தலைவர்: தமிழ்க்கடல் ராய. சொக்கலிங்கன் அவர்கள், காரைக்குடி.

பொருள்: தோழமையிற் சிறந்தவன் யார்? குகனு? சுக்கிரிவனு? வீடணனு?

குகனே! திரு அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள், சென்னை.
திரு அ. அருணகிரி அவர்கள், புதுவை.
செல்வி. இரா. மீனுட்சி அவர்கள், விருதுநகர்.

சுக்கிரீவனே! திரு சோ. சத்தியசீலன் அவர்கள், திருச்சி.
திரு நா. கிருட்டினசாமி அவர்கள், புதுவை.
திருமதி உமையாள் முத்து அவர்கள், புதுக்கோட்டை.

வீடணனே! திரு எஸ். இராமகிருட்டினன் அவர்கள், மதுரை.
திரு சிவ. கண்ணப்பன் அவர்கள், புதுவை.
திருமதி சரசுவதி இராமனுதன் அவர்கள், தேனி.

நன்றி நவிலல். நாட்டுப் பாடல்.



## 1970-ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல்:

9—5—70 சனிக்கிழமை காலை 8-45 மணி

இறை வணக்கம். வரவேற்புரை.

தொடக்கவுரை: மேதகு. பி. டி. ஜாட்டி அவர்கள், புதுவை மாநில ஆளுநர்.

வாழ்த்துரை: மாண்புமிகு. எம். ஓ. எச். பரூக் அவர்கள், புதுவை மாநில முதலமைச்சர்.

மதிப்புமிகு. எ. குபேர் அவர்கள், புதுவை நகர மேயர்.

### உரை அரங்கம்

கம்பன் இசையமுது: திருமதி இராணி ஆறுமுகம் அவர்கள்

தலைமையுரை: திரு கு. சிவப்பிரகாசன் அவர்கள்

சிறப்புரை: பிரெஞ்சுப் பேராசிரியர். திரு. குரோ அவர்கள்

சிறப்புரை: திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள்

பிற்பகல் 4-15 மணி

கம்பன் இசையமுது: திரு. மணிக்கண்ணன் அவர்கள்.

''கருணைச் செல்வன்'' திரு. புலவர் கீரன் அவர்கள்.

''கற்பின் செல்வி'' திருமதி. சரசுவதி இராமநாதன் அவர்கள்

''தொண்டின் செல்வன்'' திரு. பி ஜி. கருத்திருமன் அவர்கள்

''சொல்லின் செல்வன்'' திரு. இரா. இராதாகிருட்டினன் அவர்கள்

''கேள்விச் செல்வன்'' திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்

10—5—70 ஞாயிறு காலை 8-45 மணி

### பாநலம் பாராட்டல்

(கம்பன் காவியத்தில் உள்ளம் கவர்ந்த ஒரு கவி)

கம்பன் இசையமுது: திரு. இரா. வேங்கடேசன் அவர்கள்

திருமதி. சரசுவதி இராமநாதன் அவர்கள்

,, மதிவதனு அவகர்கள்

தலைவர்: பேராசிரியர் திரு. அ. சீநிவாசராகவன் அவர்கள்

பங்கு பெறுவோர்: திரு. கு. கிருட்டிணையா அவர்கள்
,, க. வே. இராமநாதன் அவர்கள்
,, மு. த. வேலாயுதன் அவர்கள்
,, தா. பாண்டியன் அவர்கள்
,, சோ. சத்தியசீலன் அவர்கள்
,, இரா. திருமுருகன் அவர்கள்
,, பி. ஜி. கருத்திருமன் அவர்கள்
,, புலவர். கீரன் அவர்கள்
,, சுந்தர-சண்முகன் அவர்கள்
,, எஸ். இராமகிருட்டினன் அவர்கள்
,, அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள்
,, சுந்தர-குமரன் அவர்கள்
,, ம. பொ. சிவஞானம் அவர்கள்
,, இரா. இராதா கிருட்டினன் அவர்கள்
,, சா. கணேசன் அவர்கள்

10—5—70 ஞாயிறு மாலை 4-15 மணி

பட்டி மண்டபம்

கம்பன் இசையமுது: புதுவை லோகநாதன்
தலைவர்: திரு. கம்பன் அடிப்பொடியார் அவர்கள்
பொருள்: இலங்கை வீரருள் ஏற்றம் மிக்கார் யார்?

இராவணனா? கும்பகன்னனா? மேகநாதனா?

இராவணனே! திரு. அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள்
,, த. ஞானசுந்தரம் அவர்கள்
செல்வி. இரா. மீனாட்சி அவர்கள்
திரு. புலவர். கீரன் அவர்கள்

கும்பகன்னனே! திரு. எஸ். இராமகிருட்டினன் அவர்கள்
,, வே. முத்துக்குமாரசாமி அவர்கள்
திருமதி. செல்லப்பாப்பா கீரன் அவர்கள்
திரு. தா. பாண்டியன் அவர்கள்

மேகநாதனே! திரு. இரா. இராதாகிருட்டினன் அவர்கள்
,, முகமது ஆரிப் மியான் அவர்கள்
திருமதி. சரசுவதி-இராமநாதன் அவர்கள்
திரு. சோ. சத்தியசீலன் அவர்கள்

நன்றி நவிலல், நாட்டுப் பாடல்.

## 1971-ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல் :

7—5—71 வெள்ளி மாலை 5-30 மணி

மங்கள இசை: ''நாதசுரம்''. இறைவணக்கம். வரவேற்புரை.

தொடக்கவுரை: மாண்புமிகு, எம். ஓ. எச். பரூக் (புதுவை மாநில முதலமைச்சர்)

வாழ்த்துரை: மான்புமிகு, வ. சுப்பையா, (புதுவை மாநில விவசாயத்துறை அமைச்சர்)

மதிப்புமிகு, எ. குபேர் (புதுவை நகர மேயர்)

கம்பன் இசையமுது: திருமதி. சரஸ்வதி இராமநாதன்

சிறப்புரை: ''உலகமாக்கவி'' திரு. அ. ச. ஞானசம்பந்தன்

''தெய்வமாக்கவி'' திரு. ம. பொ. சிவஞானம்

8—5—71 சனி காலை 9 மணி

உரை அரங்கம்

கம்பன் இசையமுது: திருமதி இராணி ஆறுமுகம்

தலைமையுரை: தமிழ்க்கடல் ராய-சொக்கலிங்கன்

''கைவண்ணம்'' திருமுருக கிருபானந்தவாரியார்

8—5—71 சனி மாலை 4 மணி

சான்றோர் வளாகம்

கம்பன் இசையமுது: திரு. மணிக்கண்ணன்

''வசிட்டன்''— திரு. கி. வா. ஜகந்நாதன்

''தயரதன்''— திரு. தா. பாண்டியன்

''ஜனகன்''— திரு. அ. நடேச முதலியார்

''அகத்தியன்''— திருமதி. சரசுவதி இராமநாதன்

''விசுவாமித்திரன்''— திரு. புலவர் கீரன்.

''சடாயு''— திரு. இரா. இராதாகிருட்டினன்

9—5—71 ஞாயிறு காலை 9 மணி

பாநலம் பாராட்டல்

(கம்பன் காவியத்தில் உள்ளம் கவர்ந்த ஒரு கவி)

கம்பன் இசையமுது: திரு. இரா. வேங்கடேசன்

திரு. மணிக்கண்ணன்

திரு. இராம. வேதய்யன்

திருமதி. சரசுவதி இராமநாதன்

திருமதி. மதிவதனு

தலைவர்: திரு. கம்பன் அடிப்பொடியார்

பங்குபெறுவோர்: திரு. அ. நடேச முதலியார்

,, மு. இராதா கிருட்டினன்

,, அ. வ. இராசகோபாலன்

,, சு. குமாரசுவாமி செட்டியார்

,, கோ. சாரங்கபாணி

,, மு. த. வேலாயுதன்

,, ராய. சொக்கலிங்கன்

,, சிவ. கண்ணப்பன்

,, சோ. சத்தியசீலன்

,, அ. ச. ஞானசம்பந்தன்

,, சுந்தர-சண்முகன்

,, கி. வேங்கடசாமி ரெட்டியார்

,, புலவர் கீரன்

,, இரா. இராதாகிருட்டினன்

,, கி. வா. ஜகந்நாதன்

9—5—71 ஞாயிறு மாலை 4 மணி

''கவிக்கு நாயகன்'' — வில்லுப்பாட்டு-திரு. இ. பட்டாபிராமன் குழுவினர்

பட்டி மண்டபம்

கம்பன் இசையமுது: திரு. புதுவை லோகநாதன்

நிறைவு வாழ்த்துரை: மேதகு: பி. டி. ஜத்தி (புதுவை மாநில ஆளுநர்)

தலைவர்: திரு. கி. வா. ஜகந்நாதன்

பொருள்: வேதனையால் வளர்ந்து சிறந்தவர் யார்?

இராமனா? இலக்குவனா? சீதையா?

இராமனே!

திரு. அ. ச. ஞானசம்பந்தன்
,, இராம. வேதய்யன்
திருமதி. உமையாள் முத்து
திரு. அ. வ. இராசகோபாலன்

இலக்குவனே!

திரு. புலவர் கீரன்
,, ந. வடிவேலன்
திருமதி. இரா. காந்திமதி
திரு. கு. கிருட்டிணையா

சீதையே!

திரு. இரா. இராதா கிருட்டினன்
,, கோ. சாரங்கபாணி
திருமதி. சரசுவதி இராமநாதன்
திரு. சோ. சத்தியசீலன்

நன்றி நவிலல்
நாட்டுப் பாடல்

---

**1972-ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல் :**

12—5—72 வெள்ளி மாலை 4-30 மணி

மங்கள இசை: ''நாதசுரம்''. இறைவணக்கம். மலர் வணக்கம். வரவேற்புரை.

தொடக்கவுரை: மாண்புமிகு. மேதகு. பி. டி. ஜத்தி, புதுவை மாநில ஆளுநர்.

வாழ்த்துரை: மாண்புமிகு. எம். ஓ. எச். பாருக் புதுவை மாநில முதலமைச்சர்.

மாண்புமிகு. வ. சுப்பையா, புதுவை மாநில உழவுத்துறை அமைச்சர்.

தகைமிகு. வை. வெங்கடசுப்பா ரெட்டியார்.

சிறப்புரை

தலைவர்: பேராசிரியர். திருமிகு. அ. சீநிவாச ராகவன்.

''கம்பனும் பாரதியும்'' பேராசிரியர். திரு. எஸ். இராமகிருட்டினன்.

''கம்பனும் இளங்கோவும்'' சிலம்புச்செல்வர் திரு. ம. பொ. சிவஞானம்.

''கம்பனும் வள்ளுவரும்'' திருக்குறளார். திரு. வி. முனிசாமி.

13—5—72 சனி காலை 9 மணி

உரை மன்றம்

கம்பன் இசையமுது: திருமதி இராணி ஆறுமுகம்

தலைவர்: கம்பன் அடிப்பொடி திருமிகு. சா. கணேசன்

''கால் வண்ணம்'': திருமுருக கிருபானந்தவாரியார்

13—5—72 சனி மாலை 4-30 மணி

கம்பன் இசையமுது: திரு. இராம. வேதய்யன்

| பொருள்: | | ''நம்பியின் தம்பியர்'' |
|---|---|---|
| "நகை துறந்த தம்பி" | — | திரு. பழ. பழநியப்பன் |
| "துயில் துறந்த தம்பி" | — | ,, குமரி அனந்தன் |
| "உரை துறந்த தம்பி" | — | ,, தெ. ஞானசுந்தரன் |
| ''கங்கைத் தம்பி'' | — | ,, அ. அருணகிரி |
| ''பம்பைத் தம்பி" | — | ,, தா. பாண்டியன் |
| ''இலங்கைத் தம்பி" | — | ,, க. கு. கோதண்டராமன் |

14—5—72 ஞாயிறு காலை 9 மணி

கவியரங்கம்

கம்பன் இசையமுது: திரு. புதுவை லோகநாதன்

தலைவர்: திருமிகு. கவிஞர் கண்ணதாசன்

தலைப்பு: ''என்னோடு இணைந்த கம்பன்''

| பொருள்: | | கவிவாணர் |
|---|---|---|
| கம்பன் என் தாய் | — | திரு. சித்தன் |
| ,, என் தந்தை | — | ,, தமிழவேள் |
| ,, என் தனயன் | — | ,, ரெ. சிங்காரவடிவேலன் |
| ,, என் தம்பி | — | ,, அரு. நாகப்பன் |

| | | |
|---|---|---|
| ,, என் தமையன் | — | திரு. ம. வே. பசுபதி |
| ,, என் காதலன் | — | ,, புதுவை சுப்பிரமணியன் |
| ,, என் காதலி | — | ,, சொக்கு. சுப்பிரமணியன் |
| ,, என் நண்பன் | — | ,, சொ. சொ. மீ. சுந்தரம் |
| ,, என் ஆசான் | — | ,, முடியரசன் |
| ,, என் தெய்வம் | — | ,, கம்பராமன் |

14—5—72 ஞாயிறு மாலை 4-30 மணி

**பட்டி மண்டபம்**

கம்பன் இசையமுது: திரு. இரா. வேங்கடேசன்

தலைவர்: திருமிகு. ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயில்

பொருள்: கொடுமையில் மிக்கார் யார்?
கூனியா? கைகேயியா? சூர்ப்பணகையா?

கூனியே! திரு. எஸ். இராமகிருட்டினன்
திரு. ப. யு அயூப்
திருமதி. இரா. காந்திமதி
திரு. தா. பாண்டியன்

கைகேயியே! திரு. க. கு. கோதண்டராமன்
திரு. மு. முனிசாமி
திருமதி. உமையாள் முத்து
திரு. கோ. சாரங்கபாணி

சூர்ப்பணகையே! திரு. அ. ச. ஞானசம்பந்தன்
திரு. க. செல்வராஜ்
திருமதி. சரசுவதி இராமநாதன்
திரு. தெ. ஞானசுந்தரம்

நன்றி நவிலல். நாட்டுப் பாடல்.

* * *

## 1973-ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல் :

11—5—73 வெள்ளி மாலை 4-30 மணி

மங்கள இசை: ''நாதசுரம்''. இறைவணக்கம். மலர் வணக்கம். வரவேற்புரை.

தொடக்கவுரை: மேதகு சேதிலால், புதுவை மாநில ஆளுநர்.

''கம்பன் விழா மலர்'' வெளியீடு: எம். ஓ. எச். பாரூக், புதுவை மாநில முதலமைச்சர்

''கம்பன் கலையரங்கம்'' திறப்பு: எ. குபேர், புதுவை நகர மேயர்

### சிறப்புரை

தலைவர்: திருமிகு. கம்பன் அடிப்பொடி சா. கணேசன்

''கம்பன் இயற்றமிழ்ப் புலவன்'' பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்

''கம்பன் இசைத்தமிழ்ப் புலவன்'' பண்ணுராய்ச்சி வித்தகர் ப. சுந்தரேசன்

''கம்பன் நாடகத் தமிழ்ப்புலவன்'' கவியரசு கண்ணதாசன்

12—5—73 சனி காலை 9 மணி

### உரை மன்றம்

கம்பன் இசையமுது: திருமதி. இராணி ஆறுமுகம்

தலைவர்: திருமிகு. க. கு. கோதண்டராமன்

''கம்பனும் கச்சியப்பரும்'': திருமுருக கிருபானந்த வாரியார்

12—5—73 சனி மாலை 4-30 மணி

கம்பன் இசையமுது: திரு புதுவை லோகநாதன்

பொருள்: ''கம்பன் கண்ட காண்டங்கள்''

''பால காண்டம்'' — திரு. சுந்தரசண்முகனார்
''அயோத்தியா காண்டம்'' — ,, ஔவை. து. நடராசன்
''ஆரண்ய காண்டம்'' — ,, சாலமன் பாப்பையா

| | | |
|---|---|---|
| ''கிட்கிந்தா காண்டம்'' | — | திரு. எஸ். இராமகிருட்டினன் |
| ''சுந்தர காண்டம்'' | — | திருமதி. இராஜேஸ்வரி நடராஜன் |
| ''யுத்த காண்டம்'' | — | திரு. இரா. இராதாகிருட்டினன் |

13—5—73 ஞாயிறு காலை 9 மணி

கவியரங்கம்

கம்பன் இசையமுது: திரு. இரா. வேங்கடேசன்

தலைவர்: திருமிகு. ''நாணல்''

தலைப்பு: ''மாண்புமிகு கம்பன்''

| பொருள்: | | கவிவாணர் |
|---|---|---|
| அறத்தின் மாண்பு | — | திரு. கம்பராமன் |
| அரசியல் மாண்பு | — | ,, அரு. நாகப்பன் |
| நாட்டின் மாண்பு | — | ,, சித்தன் |
| நட்பின் மாண்பு | — | ,, ரெ. சிங்காரவடிவேலன் |
| காப்பிய மாண்பு | — | ,, மரியதாஸ் |
| கற்பின் மாண்பு | — | ,, தமிழவேள் |
| தொண்டின் மாண்பு | — | ,, புதுவை சுப்பிரமணியன் |
| துறவின் மாண்பு | — | ,, ம. வே. பசுபதி |
| மறத்தின் மாண்பு | — | ,, சொ. சொ. மீ. சுந்தரம் |
| மானுட மாண்பு | — | ,, முடியரசன் |

13—5—73 ஞாயிறு மாலை 4. 30மணி

பட்டி மண்டபம்

கம்பன் இசையமுது: திரு. இராம. வேதய்யன்

தலைவர்கள் } திருமிகு. அ. சீநிவாச ராகவன்
,, அ. ச. ஞானசம்பந்தன்

பொருள்: தந்தையருள் சிறந்தார் யார்?
தயரதனா? வாலியா? இராவணனா?

தயரதனே! திரு. சாலமன் பாப்பையா
,, தி. முருகேசன்

திருமதி. சக்திப்பெருமாள்
திரு. இரா. செல்வக் கணபதி

வாலியே! திரு. இரா. இராதாகிருட்டினன்
,, ம. சுகானந்தம்
திருமதி நபீசாகலீம்
திரு. மு. கணபதி

இராவணனே! திரு. எஸ். இராமகிருட்டினன்
,, சி. பி. திருநாவுக்கரசு
திருமதி. கலா கே. தாக்கர்
திரு. கோ. சாரங்கபாணி

நன்றி நவிலல். நாட்டுப் பாடல்.

**

**1974-ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல் :**

10—5—74 வெள்ளி மாலை 4-30 மணி

மங்கள இசை: ''நாதசுரம்''. இறைவணக்கம். மலர் வணக்கம். வரவேற்புரை.

தொடக்கவுரை: மேதகு. சேதிலால், புதுவை மாநில ஆளுநர்

சிறப்புரை

தலைவர்: திருமிகு. ஜஸ்டிஸ் எஸ். மகராஜன்

''கம்பனில் முப்பால்''

அறம்: கம்பன் அடிப்பொடி சா. கணேசன்
பொருள்: பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன்
இன்பம்: கவியரசு கண்ணதாசன்

11—5—74 சனி காலை 9 மணி

உரை மன்றம்

கம்பன் இசையமுது: திருமதி. அமிர்தவல்லி பத்மநாபன்
தலைவர்: திருமிகு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

''வாய்மையும் மரபும் காத்தான்'': திரு. புலவர் கீரன்

11—5—74 சனி மாலை 4-30 மணி

கம்பன் இசையமுது: திரு. இரா. வேங்கடேசன்

''வீரர் உலகு''

| | | |
|---|---|---|
| "இகல் வீரருள் வீரன்" | — | திரு. க. கு. கோதண்டராமன் |
| "கானை வீரன்" | — | ,, சாரங்கபாணி |
| ''வெம்முனை வீரன்'' | — | ,, புலவர் கீரன் |
| "திண்திறல் வீரன்" | — | ,, சோ. சத்தியசீலன் |
| "வீரருள் வீரன்" | — | ,, அ. வ. இராசகோபாலன் |
| ''புறங்கொடாப் போர்வீரன்'' | — | ,, ஔவை. து. நடராசன் |

12—5—74 ஞாயிறு காலை 9 மணி

கவியரங்கம்

கம்பன் இசையமுது: சரசுவதி இராமனுதன்

பொருள்: ''கம்பன் படைத்த பாத்திரங்கள் பேசுகின்றன''

கம்பனும் தலைவர்: திருமிகு. கவியரசு கண்ணதாசன்

| | | |
|---|---|---|
| தயரதன் | — | திரு. தமிழவேள் |
| இராமன் | — | ,, கம்பராமன் |
| பரதன் | — | ,, சித்தன் |
| இலக்குவன் | — | ,, அரு. நாகப்பன் |
| வசிட்டன் | — | ,, சொ. சொ. மீ. சுந்தரம் |
| அனுமன் | — | ,, மா. வரதராசன் |
| கும்பகர்ணன் | — | ,, ம. வே. பசுபதி |
| வீடணன் | — | ,, நா. கந்தசாமி |
| இந்திரசித்தன் | — | ,, மா. கண்ணப்பன் |
| இராவணன் | — | ,, அப்துல் ரகுமான் |

12—5—74 ஞாயிறு மாலை 4-30 மணி

பட்டி மண்டபம்

கம்பன் இசையமுது: திரு. புதுவை லோகநாதன்

தலைவர்: திருமிகு. ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயில்

பொருள்: அனுமன் இலங்கை சென்றது

பார்வையாளனுகவா? ஒற்றனுகவா? தூதுவனுகவா?

| | |
|---|---|
| பார்வையாளனுகவே! | திரு. கண்ணதாசன் |
| | திரு. தி. முருகேசன் |
| | திருமதி. சக்தி கோதண்டம் |
| | திரு. கோ. சாரங்கபாணி |
| ஒற்றனுகவே! | திரு. எஸ். இராமகிருஷ்ணன் |
| | திரு. ம. சுகானந்தம் |

திருமதி. இரா. காந்திமதி
திரு. அ. வ. இராசகோபாலன்

தூதுவனுகவே! திரு. புலவர் கீரன்.
திரு. சி. பி. திருநாவுக்கரசு
திருமதி. சரசுவதி இராமனுதன்
திரு. சோ. சத்தியசீலன்

நன்றி நவிலல் நாட்டுப் பாடல்

***

## 1975-ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல் :

9—5—75 வெள்ளி காலை 9 மணி

மங்கல இசை: ''நாதசுரம்''. இறைவணக்கம். மலர் வணக்கம். வரவேற்புரை.

தொடக்கவுரை: மேதகு. சேதிலால், புதுவை மாநில ஆளுநர்

தலைவர்: திருமிகு. ஜஸ்டிஸ். எஸ். மகராஜன்

நூல் வெளியீடுகள்: ''கம்பன் காவியத்தில் உயிரினங்கள்'', திரு. பி. எல். சாமி.
திரு. கம்பன் அடிப்பொடி

''கம்பன் கவியரங்கில்'' திரு. தமிழவேள்
திரு. நீதிபதி. தாவீத் அன்னுசாமி

''கவியரங்கில் கம்பன்'' திரு. அரு. நாகப்பன்
திரு. கவியரசு கண்ணதாசன்

''சரசுவதி அந்தாதி'' திரு. ந. கோவிந்தசாமி பதிப்பு
திரு. திருமுடி. ந. சேதுராமன்

சிறப்புரை: ''கவிச்சக்கரவர்த்தி'' திரு. புலவர் கீரன்

9—5—75 வெள்ளி மாலை 4-30 மணி

கம்பன் இசையமுது: திருமதி. இராணி ஆறுமுகம்
''கம்பனில் பெண்மை''

தலைவர்: திருமதி, இராஜேஸ்வரி நடராஜன்

| | | | |
|---|---|---|---|
| அன்பு | : — | செல்வி. இரா. | மீனுட்சி |
| அச்சம் | : — | ,, | இளம்பிறை |
| மடம் | : — | ,, | ருக்மணி |
| நாணம் | : — | திருமதி. | உமையாள் முத்து |
| பயிர்ப்பு | : — | ,, | கலா தாக்கர் |
| கற்பு | : — | ,, | சக்திப்பெருமாள் |

10—5—75 சனி காலை 9 மணி

கம்பன் இசையமுது: திரு. இரா. வேங்கடேசன்

''கம்பன் காட்டும் இயற்கை எழிலோவியம்''

தலைவர்: திருமிகு. கம்பன் அடிப்பொடி

அருவி — திரு. கம்பராமன்
ஆறு — திருமதி. இராஜேஸ்வரி நடராஜன்
இருள் — திருமதி. சக்திப்பெருமாள்
கடல் — திரு. ம. சுசானந்தம்
சோலை — ,, பக்கிரிசாமி
ஞாயிறு — ,, எம். ஓ. எச். பாருக்
திங்கள் — ,, கோ. சாரங்கபாணி
தென்றல் — ,, சாமி-தியாகராசன்
பறவை — ,, வே. சிவசுப்பிரமணியன்
பாலை — செல்வி. ருக்மணி
மருதம் — திரு. ப. சுந்தரேசன்
மலை — ,, கி. வேங்கடசாமி ரெட்டியார்
மின்னல் — ,, செல்வக்கணபதி
முகில் — ,, த. ஞானசுந்தரம்
விலங்கு — ,, அ. வ. இராசகோபாலன்

10—5—75 சனி மாலை 4-30 மணி

கம்பன் இசையமுது: திரு. ப. சுந்தரேசன்

''வளம் சுரக்கும் கம்பன்''

தலைவர்: திருமிகு. ஜஸ்டிஸ். பி. ஆர். கோகுலகிருஷ்ணன்

கதை வளம் — திரு. அ. பாண்டுரங்கன்
கற்பனை வளம் — ,, தா. பாண்டியன்
கலை வளம் — ,, ப. சுந்தரேசன்
அணி வளம் — ,, அ. ச. ஞானசம்பந்தன்
சுவை வளம் — ,, எஸ். இராமகிருஷ்ணன்
தத்துவ வளம் — ,, இரா. இராதகிருஷ்ணன்

11—5—75 ஞாயிறு காலை 9 மணி

கவியரங்கம்

கம்பன் இசையமுது: திரு. புதுவை லோகநாதன்

பொருள்: ''கம்பன் படைத்த பாத்திரங்கள் பேசுகின்றன''

தலைவர்: திருமிகு. கவியரசு கண்ணதாசன்

கோசலை ... திரு. கம்பராமன்
சூர்ப்பணகை ... ,, அரு. நாகப்பன்

| | | |
|---|---|---|
| சடாயு | ... | திரு. ம. வே. பசுபதி |
| வாலி | ... | ,, சித்தன் |
| குகன் | ... | ,, தமிழவேள் |
| சீதை | ... | திருமதி. தங்க-அன்புவல்லி |
| மண்டோதரி | ... | திரு. ரெ. சிங்காரவடிவேலன் |
| கைகேயி | ... | ,, நா. கந்தசாமி |
| விசுவாமித்திரன் | ... | ,, சொ. சொ. மீ. சுந்தரம் |
| கூனி | ... | ,, அப்துல்ரகுமான் |

11—5—75 ஞாயிறு மாலை 4-30 மணி

பட்டி மன்டபம்

கம்பன் இசையமுது: திரு. இராம-வேதய்யன்

தலைவர்: திருமிகு. ஜஸ்டிஸ். மு. மு. இஸ்மாயில்

பொருள்: உள்ளத்தில் பெரிதும் இடம் பெறுபவன் யார்?
அயோத்தி ராமனா? ஆரண்ய ராமனா? இலங்கை ராமனா?

அயோத்தி ராமனே! திரு. அ. ச. ஞானசம்பந்தன்
,, நா. கந்தசாமி
செல்வி. இளம்பிறை
திரு. செல்வக்கணபதி

ஆரண்ய ராமனே! திரு. இரா. இராதாகிருஷ்ணன்
,, பழ. முத்தப்பன்
திருமதி. உமையாள் முத்து
திரு. கோ. சாரங்கபாணி

இலங்கை ராமனே! திரு. எஸ். இராமகிருஷ்ணன்
,, வி. அசோக்குமார்
திருமதி. இரா. காந்திமதி
திரு. அ. வ. இராசகோபாலன்

நன்றி நவிலல். நாட்டுப் பாடல்.

---

## 1976-ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல் :

7—5—76 வெள்ளி காலை 9 மணி

மங்கல இசை: ''நாதசுரம்''. இறை வணக்கம். மலர் வணக்கம். வரவேற்புரை.

தொடக்கவுரை: மேதகு. சேதிலால், புதுவை மாநில ஆளுநர்

வாழ்த்துரை: தகைமிகு. ஜி கே சுந்தரம்

தலைமையுரை: திருமிகு. ஜஸ்டிஸ். என். கிருஷ்ணசாமி ரெட்டியார்

இசையுரை: ''அறிஞரின் அறிஞன்'' திருமுருக. கிருபானந்தவாரியார்

7—5—76 வெள்ளி மாலை 4-30 மணி

கம்பன் இசையமுது: திருமதி. இராணி ஆறுமுகம்
''கம்பன் பாத்திரக் கோலங்கள்''

தலைவர்: திருமிகு. கம்பன் அடிப்பொடி

சொல்லா? செயலா? ... திரு. கோ. சாரங்கபாணி
எரிவா? பரிவா? ... திருமதி. சரசுவதி இராமநாதன்
நன்றியா? பாசமா? ... திரு ஔவை. து. நடராசன்
வரமா? காமமா? ... ,, அ ச. ஞானசம்பந்தன்
சாவா? வாழ்வா? ... ,, இரா. இராதாகிருஷ்ணன்

8—5—76 சனி காலை 9 மணி

கம்பன் இசையமுது: திரு. மணிக்கண்ணன்
''கம்பன் காவியத்தில் உள்ளம் கவர்ந்த ஒரு காட்சி''

தலைவர்: மாண்புமிகு. ம. பொ. சிவஞானம்
பங்குபெறுவோர்: திரு. சிவ. கண்ணப்பர்
,, கோ சாரங்கபாணி
,, சோ. சத்தியசீலன்
,, இரா-இராதாகிருஷ்ணன்
,, தெ. ஞானசுந்தரம்
திருமதி. இரா. காந்திமதி
திரு. அ. வ இராசகோபாலன்
திருமதி. உமையாள் முத்து
செல்வி. க. விருத்தாம்பிகை
திரு. கே. எஸ். சீநிவாசன்
,, ஔவை. து. நடராசன்
,, புலவர் கீரன்

8—5—76 சனி மாலை 4-30 மணி

கம்பன் இசையமுது: திரு. நடராஜ நாராயணசாமி ஓதுவார்
''முனிவர் உலகம்''

தலைவர்: தவத்திரு. குன்றக்குடி அடிகளார்

கலைக்கோடன் — திரு. சோ. சத்தியசீலன்
பரசுராமன் — அருட்டிரு ஊரன் அடிகள்
அகத்தியன் — ,, மௌனசபாபதி சுவாமிகள்
விசுவாமித்திரன் — திரு. கே. எஸ். சீநிவாசன்
வசிட்டன் — ,, புலவர் கீரன்

9—5—76 ஞாயிறு காலை 9 மணி

கம்பன் இசையமுது: திரு. புதுவை லோகநாதன்
கவியரங்கம்

பொருள்: ''பயன்பெற்றோர் பாராட்டுகின்றனர்''

தலைவர்: திருமிகு. கவியரசு கண்ணதாசன்

ஆசிரியர் ... திரு. கம்பராமன்
மாணவர் ... ,, கோ. ச. சவரிராஜன்
எழுத்தாளர் ... ,, சித்தன்

| | |
|---|---|
| கவிஞர் | ... திரு. தமிழவேள் |
| உழவர் | ... ,, அரு. நாகப்பன் |
| மாதர் | ... திருமதி. தங்க-அன்புவல்லி |
| தொண்டர் | ... திரு. ம. வே. பசுபதி |
| நடிகர் | ... ,, அப்துல்ரகுமான் |
| அமைச்சர் | ... ,, நா. கந்தசாமி |
| பக்தர் | ... ,, சொ. சொ. மீ. சுந்தரம் |

9—5—76 ஞாயிறு மாலை 4-30 மணி

கம்பன் இசையமுது: திரு. இராம. வேதய்யன்

பட்டி மண்டபம்

தலைவர்: மாண்புமிகு. ஜஸ்டிஸ். மு. மு. இஸ்மாயில்

பொருள்: கம்பன் காவியத்தில் சிறந்து ஒளிர்வது எது?

பிள்ளைப்பாசமா? சகோதரவாஞ்சையா? பதிபக்தியா?

பிள்ளைப்பாசமே! திரு. அ. ச. ஞானசம்பந்தன்
,, பெஞ்சமின் லெபோ
திருமதி. உமையாள் முத்து
திரு. அ. வ. இராசகோபாலன்

சகோதரவாஞ்சையே! திரு. இரா. இராதாகிருஷ்ணன்
,, க. நாராயணன்
செல்வி. க. விருத்தாம்பிகை
திரு. சோ. சத்தியசீலன்

பதிபக்தியே! திரு. கண்ணதாசன்
,, அ. பசுபதி
திருமதி. இரா. காந்திமதி
திரு. தெ. ஞானசுந்தரம்

நன்றி நவிலல். நாட்டுப் பாடல்.

---

## 1977-ஆம் ஆண்டு விழாவின் நிகழ்ச்சி நிரல்:

13—5—77 வெள்ளி காலை 9 மணி

மங்கல இசை: ''நாதசுரம்'', இறைவணக்கம், மலர் வணக்கம், வரவேற்புரை.
தொடக்கவுரை: மேதகு: பி. து. குல்கர்னி (புதுவை மாநில ஆளுநர்)
தலைமையுரை: மாண்புமிகு. ஜஸ்டிஸ். மு. மு. இஸ்மாயில்.
மலர் வெளியீடு: தகைமிகு. ஜி. கே. சுந்தரம்.
புதுவையில் கம்பன் கழகம் தோன்றுதற்கு மூலமாய் அமைந்த
திருவாளர்: கம்பன் அடிப்பொடி.
,, எஸ். மகராஜன்.
,, பொன். பரமகுரு.
ஆகிய மூவருக்குப் பொன்னாடை போர்த்தல்.
இசையுரை: ''ஒன்றிய உணர்வு'', திருமுருக. கிருபானந்தவாரியார்.

13—5—77 வெள்ளி மாலை 4-30 மணி

கம்பன் இசையமுது: திருமதி. இராணி ஆறுமுகம்.

## நினைவு மேடை

### ''கம்பனிடம் நான் கற்றது''

தலைவர்: மகாவித்துவான். மே. வீ. வேணுகோபால் பிள்ளை.
சமயம் — மறைத்திரு. சவரிமுத்து அடிகள்
இசை — பண்ணாராய்ச்சி வித்தகர் ப. சுந்தரேசன்
நாடகம் — கலைமாமணி. டி. என். சிவதாணு
கவிதை — கவியரசு. கண்ணதாசன்
அரசியல் — மாண்புமிகு. ம. பொ. சிவஞானம்

14—5—77 சனி காலை 9-00 மணி
கம்பன் இசையமுது: திருமதி. சரசுவதி இராமநாதன்

### எழிலுரை

தலைவர்: திருமிகு. ஈ. எஸ். பார்த்தசாரதி.
''வெற்றரசு ஈந்து வீட்டரசு பெற்றான்'', திரு. புலவர் கீரன்.

### வழக்காடு மன்றம்

நீதிபதி: திருமிகு. எஸ். ஸ்ரீநிவாசன்
பொருள்: ''கம்பன் நோக்கிலும் காவியப் போக்கிலும் கைகேயி''
வாதிடுவோர்:- 'குற்றம் உற்றவள்' ... திருமதி. சரசுவதி இராமநாதன்
'குற்றம் அற்றவள்' — திருமதி. இரா. காந்திமதி.

14...5...77சனி மாலை 4- 30 மணி
கம்பன் இசையமுது: திரு. மணிக்கண்ணன்

### உரை மன்றம்

''வள்ளுவக் கம்பன்'' தலைவர்: திருமிகு. திருக்குறள் முனிசாமி
கடவுள் வாழ்த்து - திரு. தெ. ஞானசுந்தரம்
இல்வாழ்க்கை - ,, அ. வ. இராசகோபாலன்
மக்கட்பேறு - ,, சோ. சத்தியசீலன்
நட்பு - ,, ஔவை நடராசன்
செய்ந்நன்றியறிதல் - ,, இரா. இராதாகிருஷ்ணன்

15—5—77 ஞாயிறு காலை 9 மணி
கம்பன் இசையமுது: திரு. நடராஜ நாராயணசாமி ஓதுவார்

### கவியரங்கம்

பொருள்: ''கம்பனுக்கு கதம்ப மாலை''
தலைவர்: கவியோகி சுத்தானந்த பாரதியார்

| | | | |
|---|---|---|---|
| திருப்பள்ளியெழுச்சி | ... | திரு. | சித்தன் |
| திருத்தசாங்கம் | ... | ,, | அரு. நாகப்பன் |
| பிள்ளைத்தமிழ் | ... | ,, | கம்பராமன் |
| திருப்புகழ் | ... | ,, | அரங்கசீனிவாசன் |
| குறவஞ்சி | ... | ,, | பெரி. சிவனடியான் |
| தாலாட்டு | ... | திருமதி. | சரசுவதி இராமநாதன் |
| கும்மி | ... | ,, | தங்க-அன்புவல்லி |
| அம்மானை | ... | திரு. | ம. வே. பசுபதி |
| நாடோடிப்பாடல் | ... | ,, | வைரமுத்து |
| சிந்து | ... | ,, | சொ. சொ. மீ. சுந்தரம் |
| தூது | ... | ,, | தமிழவேள் |
| மங்கல வாழ்த்து | ... | ,, | கம்பன் அடிப்பொடி |

15—5—77 ஞாயிறு மாலை 4-30 மணி
கம்பன் இசையமுது: திரு. புதுவை லோகநாதன்

**பட்டி மண்டபம்**

தலைவர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார்
பொருள்: கம்பனைக் கவிச்சக்ரவர்த்தியாக்குவதில் முனைந்து நின்ற பாத்திரம்.

இராமனா? சீதையா? இராவணனா?

இராமனே!

திரு. ஔவை நடராசன்
,, த. ஞானசுந்தரம்
,, கோ. சாரங்கபாணி
,, அ. வ. இராசகோபாலன்

சீதையே!

திருமதி. சரசுவதி இராமநாதன்
,, ஜோதி இராமமூர்த்தி
செல்வி. கி. விருத்தாம்பிகை
திருமதி. இரா. காந்திமதி

இராவணனே!

திரு. இரா. இராதாகிருஷ்ணன்
,, எம். பாலசஞ்சீவி
,, தெ. ஞானசுந்தரம்
,, சோ. சத்தியசீலன்

நன்றி நவிலல். நாட்டுப் பாடல்.

---



---

## கம்பன் அறவுரை

'யாரொடும் பகைகோள் இலது என்றபின்
போரொடுங்கும் புகழ் ஒடுங்காது'

'இன்றுளார் நாளை மாள்வர்
புகழுக்கும் இறுதி உண்டோ?'

'அறம் வெல்லும் பாபம் தோற்கும்'

'தூயவை துணிந்தபோது
பழிவந்து தொடர்வதுண்டோ?'

'வெஞ்சின விதியினை வெல்லவல்லமோ?'

'சிறப்பினும் திருஎலாம் இழக்க எய்தினும்
துறப்பிலர் அறம்; எனல், சூரர் அவதே!'

'தீயன செய்யார் ஆயின்
யாவரே செறுநர் ஆவார்?'

'அறத்தினது இறுதி வாழ்நாட்கு இறுதி
அஃது உறுதி!'

'என்பு பெருத இழிபிறவி எய்திடினும்
அன்பு பெறுகை அரும்பேறு'.